

# தீபாவளி



தீபாவளியன்று ஒரு குடும்ப ஸ்திரீ அதிகப்படியான உண்டிகளையும், இனிப்புப் பண்டங்களையும் தயாரிக்கிறாள். ஆனால் இவைகளை குறைந்த செலவில் செய்வதற்கு ஒரு சாமர்த்தியமான குடும்பப் பெண் சுத்தம் புதிதாயும், சுத்தமாயும், போஷாக்கையும் தரக்கூடியதாயுமான கொழுப்பு—டால்டா வனஸ்பதியையே உபயோகிக்கிறாள்! அதோடு டால்டாவில், நெய்யில் கிடைக்குமளவு ஆரோக்கியத்தைத் தரக்கூடிய விடமின் 'ஏ' இருக்கிறது. நீங்களும் சாமர்த்தியத்துடன் இருங்கள்— டால்டா உங்களுக்கு நல்லது என்பதை மறவாதீர்கள்!




## டால்டா
## மார்க்
## வனஸ்பதி

இனம்

**விசேஷ தினங்களுக்கு பாகமுறைகள்**

இன்றே இச்சிறிய புத்தகத்திற்கு எழுதுங்கள் — அதில் பண்டிகை சமையல்களுக்கு உபயோகமான யோசனைகளும், விசேஷ குறிப்புகளும் உள்ளன. கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதவும்:

**டால்டா அட்வைஸரி ஸர்வீஸ்**
தபால் பெட்டி நெ. 353, பம்பாய் 1

HVM. 255-50 TM



மலர் 15
இதழ் 14

# கல்கி

மன்மத ஹு
ஐப்பசி 20

## பொருளடக்கம்

1955 நவம்பர் 6



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

தீபாவளியன்று தமிழ்நாடெங்கும் ஆரம்பம்

மகிமை வாய்ந்த இந்திய புராணக் கதையை அலங்கரிக்கும் சாவித்ரி இந்தியப் பெண்மையின் சின்னமாகவும் சிகரமாக வும் விளங்குகிறள் ......

அந்தப் புனிதவதியைப் போன்றவளே இந்த......



அருணா பிலிம்ஸ்

# டாக்டர் சாவித்திரி

பாட்டு...... நாராயணகவி • மருதகாசி
ஸ்டூடியோ...... ரேவதி • வாஹினி
சங்கீதம்..... G. ராமனுதன்

டைரக்ஷன்: R.M.கிருஷ்ணஸ்வாமி
புரொடக்ஷன்: M.ராதாகிருஷ்ணன்




அருணா பிலிம்ஸ்.... மதராஸ் -17.

● விநியோகஸ்தர்கள் - மதுரை, ராமநாதபுரம், திருநெல்வேலி : இந்தியா டாக்கீஸ் அண்டு டிஸ்ட்ரிபூஷன் கம்பெனி, திருநெல்வேலி. கோவை, நீலகிரி: ஆனந்தா பிலிம்ஸ், கோவை திருச்சி, தஞ்சை : வியார் பிலிம்ஸ் லிட்., புதுக்கோட்டை. வட ஆற்காடு, தென் ஆற்காடு, செங்கற்பட்டு : கீதா பிக்சர்ஸ், குடியாத்தம். மலபார் : அசோஸியேட் பிலிம்ஸ் லிட்., எர்ணாகுளம் : ● பூரண உரிமையாளர்கள் - சென்னை நகரம் : ஜெயா பிக்சர்ஸ், மதராஸ்-3 சேலம் : ராஜா பிலிம்ஸ், சேலம். மைசூர் : விஜயா டாக்கி டிஸ்ட்ரிபியூட்டர்ஸ், பெங்களூர் எப்.எம்.எஸ். : உஷா பிரதர்ஸ் லிமிடெட், சிங்கப்பூர்



மலர் 15 } தமிழ்த்திரு நாடு தன்னைப் - பெற்ற { மன்மத ஞூ
இதழ் 14 } தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார், { ஐப்பசி 20

# மதுவிலக்குப் பரிசீலனைக் கமிட்டி அறிக்கை

1958-ம் வருஷம் ஏப்ரல் மாதம் முதல் தேதிக்குள் பாரத நாடு எங்கும் மதுவிலக்கு அமுலுக்கு வந்துவிட வேண்டும் என்று மதுவிலக்கு விசாரணைக் கமிட்டியின் அறிக்கை ஐயம்திரிபுக்கு இடமின்றிக் கூறி யிருக்கிறது.

இந்த விசாரணையை ஒட்டிக் கமிட்டியார் விஜயம் செய்த எல்லா ராஜ்யங்களிலும் மதுவிலக்குக்குப் பேராதரவு இருப்பதாக அவர்கள் குறிப்பிட்டிருப்பது முக்கிய விஷயம் ஆகும்.

பாரத மக்களில் தொண்ணூறு சத விகிதம் பேர் மதுபானம் அருந்துவதில்லை.

மதுபானமில்லாமல் தொண்ணூறு சத விகித மக்கள் கஷ்ட நஷ்ட மின்றி வாழும்போது, மீதியுள்ள பத்து சத விகித மக்கள் மதுபானத்தினால் தங்கள் வாழ்வையும் தங்கள் குடும்ப வாழ்வையும் ஏன் கெடுத்துக் கொள்ள வேண்டும்?

எனவே, சகல ராஜ்யங்களிலும் மதுவிலக்கு முறைக்குப் பேராதரவு இருக்கிறது என்று கமிட்டியார் கூறியிருப்பதில் வியப்பு எதுவும் இல்லை.

தவிர, பாரத நாட்டில் மிகப் பெரும்பாலோர் மதுபானமின்றி வாழ்வதே, இங்கு மதுவிலக்கை அமுலுக்குக் கொண்டு வருவது அவசியம் என்பதற்கும் எளிது என்பதற்கும் போதிய காரணமாகும்.

நாடெங்கும் மதுவிலக்கை அமுலுக்குக் கொண்டு வருவதற்கான பூர்வாங்க முறைகளைக் கைக்கொள்ளவே, கமிட்டியார் இரண்டு வருஷங்களுக்கு மேல் அவகாசம் கொடுத்திருக்கிறார்கள்.

இப்போது சென்னை, ஆந்திரா, பம்பாய், சௌராஷ்டிரா முதலிய ராஜ்யங்களில் பூரண மதுவிலக்கு அமுலில் இருக்கிறது. மற்றும் ஒன்பது ராஜ்யங்களைச் சேர்ந்த பல இடங்களில் மதுவிலக்கு முறையை வெற்றிகரமாக நிறைவேற்றி வருகிறார்கள்.

மதுவிலக்கு அமுலில் உள்ள பிரதேசங்களில் வாழும் ஏழைகளின் ஆரோக்கியம் அதன் காரணமாக அபிவிருத்தி யடைந்திருக்கிறது என்பது கண்கண்ட உண்மையாகும்.

எனவே, கமிட்டியார் கொடுத்துள்ள இரண்டரை வருஷ கெடுவுக்குள் பாரத நாடெங்கும் மதுவிலக்கு அமுலுக்கு வருவது கஷ்டமான காரியம் அல்ல.

மகாத்மா காந்தியின் கனவு பாரத நாடு முழுவதும் உண்மையாகப் போகும் காலம் அதிக தூரத்தில் இல்லை என்று பாரத மக்கள் மகிழ்ச்சி அடையலாம்.

* * * *

மதுவிலக்கை அமுலுக்குக் கொண்டு வருவதற்கு இது உற்ற சமயம் அல்ல என்ற கிளர்ச்சி ஏற்கனவே இருந்து வருகிறது.

மேற்கண்ட அறிக்கைகளின் பலனாக அக்கிளர்ச்சி இன்னும் பலமடையலாம்.

எனினும், பெரும்பாலோரின் ஆதரவு, பாரத மக்களின் பண்பாடு, ஏழை மக்களின் ஆரோக்கியம், நல்வாழ்வு, க்ஷேமநிலை இவற்றை யெல்லாம் அடிப்படையாகக் கொண்ட புனித காரியமான மதுவிலக்கை, சிறுபான்மையோரின் எதிர்ப்பைச் சிறிதும் லட்சியம் செய்யாமல் அரசாங்கம் காலதாமதமின்றி அமுலுக்குக் கொண்டு வந்தே தீரவேண்டும் என விரும்புகிறோம்.

அவ்வாறு கொண்டுவரும் பட்சத்தில், உலக நாடுகளில் எதுவும் செய்ய முடியாத, செய்யத் துணியாத ஒரு மாபெரும் நற்காரியத்தை இந்தியா செய்தது என்ற புகழ் உலக சரித்திரத்தில் நிரந்தரமாக நிற்கும் என்பது உறுதி.

# சக்கரவர்த்தித் திருமகன்

“சக்கரவர்த்தித் திருமகன்” என்ற தலைப்பில் ராஜாஜி வால்மீகி முனிவர் எழுதிய ராமாயணத்தைத் தமிழில் எழுத ஆரம்பித்ததிலிருந்து நமது காரியாலயத்துக்கு ஆயிரக் கணக்கான கடிதங்கள் வந்திருக்கின்றன. பெரியவர்கள், சிறியவர்கள், தாய்மார்கள், இப்படிப் பல திறப்பட்ட மக்களிடமிருந்தும் கடிதங்கள் வந்து குவிந்திருக்கின்றன.

“ஐந்தாவது வகுப்பில் படிக்கும் என் எட்டு வயதுப் பெண் ஒவ்வொரு வியாழக்கிழமையும் ராஜாஜியின் கட்டுரையைப் படிக்காமல் சாப்பிட மாட்டாள். உண்மையில், உணர்ச்சியோடு குழந்தை படிப்பதைக் கேட்டுக் கொண்டிருப்பதில் எங்களுக்கு ரொம்ப ஆனந்தம்”—இப்படியொரு தந்தை எழுதியிருக்கிறார்.

கொழும்பிலிருந்து ஜனாப் காசிம் முகம்மது என்னும் அன்பர் கீழ்க்கண்டவாறு எழுதுகிறார்:—

“இக் காப்பியத்தை எத்தனையோ பண்டிதர்கள் வசன நடையில் எழுதியிருக்கிறார்கள். என்றாலும் நமது மேதாவி ராஜகோபாலாச்சாரியார் மற்றவர்களைவிட எளிய நடையிலும், திகட்டாத முறையிலும் எழுதியிருக்கிறார்கள் என்பது என் முடிவு. இதற்குத் தமிழர்களாகிய நாம் அவர்களுக்குக் கடமைப்பட்டுள்ளோம். இப்பொழுது தாங்கள் எனக்காகத் தமிழன் என்ற சொந்தத்தில் ஒரு கைம்மாறு செய்ய வேண்டுகிறேன். இத் தொடர் கதை முடிவுற்றதும் புத்தக வடிவத்தில் அச்சிட வேண்டிக் கொண்டு என் மடலை நிறுத்திக் கொள்கிறேன்.”

தமிழர்கள் எங்கெங்கு இருக்கிறார்களோ, ‘கல்கி’ எங்கெங்கு செல்கிறதோ அங்கெல்லாம்* மேலே குறிப்பிட்டது போன்ற தூய இன்பம் நிலவுவதை அறிந்து பெருமை கொள்ளுகிறோம்.

இத்தகைய புனிதமான காரியம் வெற்றித் திருநாளும், புனித தினமும் ஆகிய சரஸ்வதி பூஜையன்று, ஸ்ரீராம பட்டாபிஷேகத்துடன் நிறைவு பெற்றது. ஒன்றரை ஆண்டுகளுக்கு முன் ஆரம்பித்து, குறிப்பிட்ட நாளில்தான் முடிய வேண்டும் என்று திட்டம் வகுக்காமல் எழுதி வந்து, வெற்றித் திருநாளில் வந்து முடிந்ததும் ஒரு தெய்வச் செயல்தான்.

அந்தப் புனிதத் திருநாளன்று ராஜாஜி அவர்கள் ‘கல்கி’ காரியாலயத்துக்கு விஜயம் செய்து காரியாலயத்தைச் சேர்ந்த அன்பர்கள் அனைவருக்கும், முக்கியமாக எல்லாத் தொழிலாளர்களுக்கும், நல்லுரையும் நல்லாசியும் கூறினார். ராஜாஜி எழுதிவந்த இந்தச் சக்கரவர்த்தித் திருமகனைப் பிரசுரிக்கும் பணியில் நமது காரியாலயத்தைச் சேர்ந்த எல்லாரும் ஏகோபித்த முறையில் பக்தியும் சிரத்தையும் செலுத்தினார்கள்.

இவர்களுக்கெல்லாம் ராஜாஜி நல்லாசி கூறிய போது மற்றொரு விஷயத்தையும் குறிப்பிட்டார்கள். வால்மீகி முனிவர் எழுதிய ராமாயணத்திலுள்ள எத்தனையோ பகுதிகளை ராஜாஜி தமது எழுத்தில் விட நேர்ந்திருக்கிறது. இதைப் பற்றி அவ்வப்போது பல அன்பர்கள் ராஜாஜிக்கும் நமக்கும் பல கடிதங்கள் எழுதியிருக்கிறார்கள். “ஏன் ராஜாஜி அந்தப் பகுதியை விட்டு விட்டார்! அதை அவர் எழுதினால் எவ்வளவு நன்றாக இருக்கும்” என்றெல்லாம் எழுதுவார்கள். இவர்களுக்கெல்லாம் தனிப்பட்ட முறையில் ஒவ்வொருவருக்கும் பதில் எழுதுவது என்பது முடியாதல்லவா! இவர்களுக்குக் காரியாலயத்தில் நடைபெற்ற ஆயுத பூஜை விழாவில் ராஜாஜி அளித்த பதிலை இங்கே குறிப்பிட விரும்புகிறோம்.

ராமாயண கதையானது, வால்மீகி முனிவர் நீண்ட காலத்துக்கு முன் எழுதிய காவியம். அந்தக் காலத்துக்கும் இன்றைக்கும் இடைப்பட்ட காலத்தில் சுலோகங்களும் கதை கட்டங்களும் சேர்ந்திருக்கக் கூடும். அதனால் என்ன! ராமாயணத்தில் ராஜாஜி விட்ட பகுதிகள் மூலப் புஸ்தகத்தில் இருக்கத்தானே செய்கின்றன! அதை அவர்கள் படித்து என்றும் சந்தோஷமும் ஆத்ம நிறைவும் பெறலாம். ராஜாஜி கதைப் போக்கையும், குழந்தைகளையுமே மனத்தில் கொண்டு, எழுதினார்கள். அவர்களுடைய நோக்கத்திற்கு ஏற்பச் சில பகுதிகள் விட நேர்ந்தது என்றும் கூறினார்கள்.

“சக்கரவர்த்தித் திருமகனை” நாம் அனைவரும் இதுகாறும் படித்து வந்ததைப் போலவே இனியும் படித்து ராமனைப்போல் சத்திய சந்தர்களாகவும், ராமனைப்போல் அஞ்சா நெஞ்சம் படைத்த வீரர்களாகவும், ராமனைப் போல் யோகிகளாகவும், ராமனைப் போல் ஏனைய தர்மத்தைக் காப்பவர்களாகவும் வாழ முற்பட வேண்டும்.

ராஜாஜி எழுதிய ‘சக்கரவர்த்தித் திருமகனை’ வெளியிடும் வாய்ப்புப் பெற்ற நாம் பாக்கியசாலிகள். அதைப் படித்த மக்கள் அனைவரும் பாக்கியசாலிகள். இது குறித்து ராஜாஜிக்கு நமது மனமார்ந்த நன்றியைச் செலுத்திக் கொள்கிறோம்.

அட்டைப் படவிளக்கம்

## ரங்கதுரை

பயம் நிரம்பிய உள்ளத்திலே திடீர் என்று அதிர்ச்சி பொங்கினால் அப்போது அந்த முகம் எப்படியிருக்கும்?

தந்தையின் அன்புக்குப் பதில் கடுகடுப்பையும் கோபத்தையும், அடியையும் உதையையுமே கண்டிருந்த நமது பால ரங்கதுரைக்குத் திடீர் என்று தந்தையின் அன்பு கிடைத்து விட்டது! அதன் பயனைக் களத்திலிருந்த தந்தைக்கு இடியாப்பம் கூடக் கொண்டு செல்லத் துணிந்து விட்டான்! இவ்வார “அமரதாரா”வில் வரும் அந்தக் காட்சியை அட்டைப் படமாகத் தருகிறார் ஓவியர் மணியம்.

# பாரதத் தராசு




"ஒன்று பட்டால் உண்டு வாழ்வு!"

# என்ன சேதி?

**எச்சரிக்கை**

புது ஏற்பாட்டினால் உண்டாகப் போகும் ஒரு வினைவு இப்பொழுதே தலை காட்டுகிறது. முதல் வகுப்பு உத்தியோகஸ்தர்கள், இரண்டாம் வகுப்பு உத்தியோகஸ்தர்கள் இவர்களை யெல்லாம் ஒரு அகில இந்தியப் பட்டியலில் பதிவு செய்து, எவரெவர் எந்தெந்த ராஜ்யத்துக்குப் போய் வேலை செய்ய வேண்டும் என்பதைத் தில்லி உள்நாட்டு மந்திரி இலாகாவில் தீர்மானிப்பார்கள். இந்தத் திட்டத்திற்கான யோசனை ஆரம்பிக்கப் பட்டது என்ற செய்தி பத்திரிகைகளில் வெளியாகி யிருக்கிறது.

நம்மவர்களுக்கே உத்தியோகங்கள் கிடைக்கும் என்கிற குறுகிய நோக்கத்தைக் கொண்டு தமிழகத்தை வேறுபடுத்துவதே நலம் என்று எண்ணுகிறவர்களுக்கு இது ஒரு எச்சரிக்கையாகும்.

**ஐ. நா. சபையில் தென்னாப்பிரிக்கா**

உலகில் உள்ள ஒவ்வொரு நாட்டிலும் வாழும் மக்களுக்கு, ஜாதி, மத, நிற வேற்றுமையின்றிச் சம உரிமைகள் அளிக்கப்பட வேண்டும் என்பதே ஜனநாயக தர்மத்தின் அடிப்படையாகும். உலக மகா சபையாக விளங்கும் ஐக்கிய நாடுகள் ஸ்தாபனத்தின் முக்கிய கொள்கைகளில் இதுவும் ஒன்று. எனவே, இந்தக் கொள்கைக்கு முரணாக நடக்கும் எந்த நாடும், அது உள்நாட்டு விஷயம் என்றும், அதில் தலையிட யாருக்கும் உரிமை இல்லை என்றும் கூறி, உலகத்தின் கண்டனத்திலிருந்து தப்பித்துக் கொண்டுவிட முடியாது. ஆனால் இன்று தென்னாப்பிரிக்கா அவ்விதம் தப்பித்துக் கொள்ளும் தந்திரத்தைக் கையாள முற்பட்டிருக்கிறது.

அமெரிக்காவில் நிறவேற்றுமை காரணமாக நீக்ரோவர்கள் பட்ட கஷ்டங்கள் இப்போது பழங்கதையாகி விட்டன.

அந்த நாட்டில் அவர்களுக்கு மற்ற வெள்ளையர்களைப் போல் சம உரிமைகள் அளிக்கப்பட்டு வருகின்றன. பிரிட்டன் போன்ற ஐரோப்பிய நாடுகளும் நிற வேற்றுமையைக் கண்டித்து வருகின்றன. நிறவேற்றுமை அநாகரிகமான முறை என்ற அபிப்பிராயம் உலகம் முழுவதும் நிலவி வருகிற இக்காலத்தில் தென்னாப்பிரிக்கா மாத்திரம் கொடிய நிறவேற்றுமைக் கொள்கையைக் கைவிடாமல் இருப்பது சகிக்க முடியாததாகும்.

அதன் நிறவேற்றுமை விபரீதத்தைக் கண்டித்து ஐ. நா. சபையில் ஏற்கனவே நிறைவேறிய தீர்மானத்தைத் தென்னாப்பிரிக்கா லட்சியம் செய்யவில்லை.

சமீபத்தில் அதே விஷயம் ஐ. நா. சபையில் விவாதத்துக்கு வந்தபோது, அதைக் கண்டித்துத் தென்னாப்பிரிக்கப் பிரதிநிதி அச் சபையிலிருந்து வெளியேறி விட்டார்.

ஆப்பிரிக்காவில் நிலவி வரும் நிறவேற்றுமைக் கொள்கையால், ஐரோப்பாவுக்கும் ஆசியாவுக்கும் உள்ள உறவுக்குக் குந்தகம் ஏற்படுமோ என்று அரசியல் நிபுணர்கள் எச்சரித்து வருகிறார்கள். குதிரை கீழே தள்ளியது மின்றிக் குழியையும் பறித்தது போல, தென்னாப்பிரிக்க சர்க்கார் நிறவேற்றுமைக்கு ஆக்கம் அளித்து வருவது மல்லாமல், அவ் விஷயத்தை ஐ. நா. சபையில் விவாதிக்கக் கூடாது என்று கூற முற்பட்டிருக்கிறது.

இவ்விதம் ஐ. நா. சபையின் தீர்மானத்தை அலட்சியம் செய்கிற தென்னாப்பிரிக்கா சர்க்காரின் விஷயத்தில் மேற்படி சபை தைரியமாகத் தகுந்த நடவடிக்கை எடுக்க வேண்டும். உலக நாடுகளிடையே பத்து வருஷங்களாக மிகப் பிரயாசைப் பட்டு நல்ல பெயர் எடுத்துள்ளது ஐ. நா. சபை. இந்தச் சமயத்தில் தென்னாப்பிரிக்காவின் மீது தக்க நடவடிக்கை எடுக்காவிட்டால் நேர்மையையும் நீதியையும் நிலை நிறுத்துவதில் ஐ. நா. சபைக்குப் போதிய சக்தியும் திறமையும் இல்லையோ என்ற அவநம்பிக்கை உலக மக்களுக்கு ஏற்பட்டுவிடும்.

அடுத்த வாரம்

13-11-55ந் தேதி இதழில் ராஜாஜி எழுதிய

**நப்பின்னை**

என்ற அற்புதச் சிறுகதை வெளியாகிறது

# நான் எழுதிய ராமாயணம்

காந்திஜியும் நானும் ஒரு நாள் பேசிக் கொண்டிருந்தோம். எங்கள் இருவருக்கும் பிரியமான ஒரு பெண் குழந்தையின் விஷயம். 'இவளுக்கு இந்தக் காதல் பேச்சுகளும் கருத்துக் களும் எப்படி உண்டாயின? எந்தக் காதல் கதைகளையும் படித்ததில்லையே!' என்றேன்.

அதற்கு காந்திஜி சொன்னார்: 'ராமாயணம் படித்திருக்கிறளோ இல்லையோ, அதுவும் ஒரு காதல் கதைதானே' என்றார். நான் யோசனையில் ஆழ்ந்தேன். பிறகு வேறு பேச்சுக்களில் இறங்கினோம்.

காதலில் அல்லவா ஆரம்பித்தது தசரதனுடைய சிக்கல். ராமன் சீதை இவர்களுடைய காதலே அயோத்யா காண்டத்தின் வேகமும். தருமத்திற்கு விருத்தம் அல்லாத காதல் பகவானுடைய சொரூபம். இதைக் கண்ணன் அர்ஜுனனுக்கு, தன்னுடைய விபூதி மகிமைகளை எடுத்துச் சொல்லும்போது கூறியிருப்பதை பகவத் கீதையில் பார்க்கலாம். தருமத்திற்கு விருத்தமல்லாத காதலுடன், தருமத்திற்கு விருத்தமான காதலையும் ராமாயணத்தில் முனிவர் சித்திரித்திருக்கிறார். ஆகவே, ராமாயணம் ஒரு பெருங் காதல் – காதை என்று கூறலாம்.

சீதா தேவியை ஆன்மாவாகவும், ராமனை ஆண்டவனாகவும் வைத்து ஆண்டவனை மறந்த ஆன்மாவை பகவானே தேடித் துரத்திப் பிடிப்பதாக ராமாயணத்திற்கு அத்யாத்ம உரை பெரியோர்கள் சொல்லி உபந்யஸிப்பார்கள். அதாவது ஆட்கொள்வதில் பகவானே ஆவலாக இருப்பதாகவும் நாம் தடை மட்டும் செய்யாமல் இருந்தால் போதும் என்பது.

மற்றொரு விதமாகவும் சொல்லுவார்கள். பிராட்டி ஆண்டவனுடைய கருணை தத்துவத்தின் மூர்த்தியாவாள். அந்தக் கருணை வடிவமே ஆண்டவன் மார்பில் இடம் பெற்றிருப்பதாகக் கொண்டு மகாவிஷ்ணுவை பக்தி செய்கிறோம். தேவியின் கருணைக் கண்ணோட்டமே நாம் பகவான் பாதங்களை அடையும் சாதனமாகவும் உரைத்து உபந்யஸிப்பார்கள்.

'நையவிடம் கொண்ட பிரான்
தன்கழலே சேரும்வண்ணம்
ஐயன் எனக்கு அருளியவாறு'

என்று மாணிக்கவாசகர் பாடியதும் இதுவே.

## ராஜாஜி

தேவி வேறு, ஆண்டவன் வேறு அல்ல. சகனும் கருணையும் பிரிந்து போனால் நாம் அனைவரும் ராவணன் பட்ட பாடு படவேண்டியதாகும்!

மக்களுடைய காதல் வேகம் போன்றது, சகனுடைய கருணை வேகம்.

ராமாயணத்துக்கு இன்னும் பல உரைகள் தந்து கொண்டு அனுபவிக்கலாம். நிஜ வைரக் கல்லின் ஒளியில் பல நிறங்களைக் காண்பது போல் காணலாம்.

* * *

பதினேழு மாதங்களுக்கு முன் பயந்து பயந்து நான் ஆரம்பித்த காரியம் இந்த வாரத்துடன் முடிவு பெற்றது. கடவுள் – பணி ஆனபடியினால் இதற்கு வேண்டிய உடல் நலமும் மன அமைதியும் அருளப் பெற்றேன்.

பெரியோர்கள் என்னுடைய எழுத்திலும் கருத்துகளிலும் பல குறைகள் காண்பார்கள். இதில் ஒன்றும் ஆச்சரியம் இல்லை. குறைகளை மறந்து என்னுடைய எழுத்தினால் உண்டான பயனைப் பாராட்டுவார்களாக!

குழந்தைகளுக்கு ஒரு வார்த்தை:

நான் சக்கரவர்த்தித் திருமகன் எழுதினது முக்கியமாக உங்களுக்காகவே தான். வால்மீகியை வீட்டில் பெரியவர்கள் படிக்கலாம். கம்பரையும் அவர்கள் படிப்பார்கள். பாடத் தெரிந்தவர்கள் தியாகராஜ சுவாமி தந்த ராம கீர்த்தனைகளையும் ஆனந்தமாகப் பாடுவார்கள். குழந்தைகளாகிய நீங்கள் யாருடைய உதவியும் இல்லாமல் நான் எழுதிய ராமாயணத்தை நீங்களாகவே படிக்கலாம். ராமனும், லக்ஷ்மணனும், பரதனும், ஹனுமானும் உங்களுடைய தகப்பனார், அண்ணன்மார்கள் போலவே உங்களுக்கு எப்போதும் துணையாக இருப்பார்கள். பரதனையும் லக்ஷ்மணனையும் போல், ஹனுமானையும்போல், நீங்களும் பாக்கியம் பெற்று வாழ்வீர்களாக.

தாய்மார்களுக்கு நான் என்ன சொல்லுவேன்? நீங்களும் நான் எழுதிய ராமாயணத்தைப் படித்து மகிழ்ச்சி அடைந்து வந்தபடியினால்தான் என் எழுத்து இது வரையில் ஓடிற்று. குழந்தைகளுக்காக வாக்கியங்களை உடைத்து, பாலர் நடையில் நான் எழுதி வந்ததை நீங்கள் ஆட்சேபிக்க மாட்டீர்கள். குழந்தைகளுக்காகத்தானே நாம் செய்வதெல்லாம். சீதையின் சரித்திரத்தை முழு உணர்ச்சியுடன் அனுப

விப்பது தாய்மார்களுக்குத்தான் முடியும். என் எழுத்தைப் பற்றிச் சொல்ல வேண்டியதில்லை, ஆதி கவிஞர் எழுத்திலும் கம்பர் பாட்டிலும், சீதா சரித்திரத்தைப் பொறுத்தமட்டில், தாய்மார்கள்தான் முழுக் கருத்தை உணர்வார்கள். ஏன், ஜடாயுவினுடைய வீரத்தையும் ஹனுமானுடைய சாகஸத்தையும் தாய்மார்கள்தானே நூற்றுக்கு நூறாக உணர்ந்து மகிழ்வார்கள். சீதையினுடைய கஷ்டங்கள் ராமாயணத்தில் முடிவாக வில்லை. தாய்மார்கள் வாழ்க்கையில் அந்தச் சரித்திரம் இன்னும் நடந்து கொண்டே இருக்கிறது.

நான் ஈசுவர அவதாரம் என்பது அறியாத அவதாரம் ராமாவதாரம். நான் ஈசுவரன் என்று பூரணமாக அறிந்து அவதரித்ததும் லீலை நடத்தியதும் பகவான் கிருஷ்ணன். இந்த வேறுபாட்டை நினைவில் வைத்துக் கொண்டு நாம் ராமன் கதையையும், கண்ணன் கதையையும் படிக்க வேண்டும். அவதாரஞானமில்லாத ராமசந்திரன் மனிதனாக அடைந்த மனச் சோர்வும் பட்ட துயரமும் கண்ணன் கண்டதே கிடையாது. பேய்ச்சியின் பால் உண்ட பொழுதும், கட்டுண்டு மொத்துண்ட பொழுதும், கவலை என்பதோ துக்கம் என்பதோ கிடையாது. யுத்தத்தில் ஆயுதமின்றி நிமித்த மாத்திரம் பிறரைக் கொண்டு மூர்க்கர்களைத் தீர்க்கும் சக்தியை ஐயமற்றுக் கண்டான் கண்ணன். இன்னும் ஒவ்வொரு கட்டத்திலும் மேலே சொன்ன இருவேறு நிலைகளைக் காணலாம்.

* * *

வால்மீகி முனிவர் எழுதிய ராமாயணத்தில் சொன்னபடி நான் சக்கரவர்த்தித் திருமகனில் எழுதி வந்தேன். பாமரர்களிடையில் பழங் கதை ஒன்று முனிவர் காலத்துக்கு முன் அறுதியாக வழங்கி வந்திருக்க வேண்டும், — அதாவது அபவாதத்துக்கு அஞ்சி, ராமன் சீதையைக் காட்டுக்கு அனுப்பி விட்டதாக. இந்தத் துயரக் கதை நம்முடைய தேசத்துப் பெண்மணிகளின் கடல் போன்ற துக்கத்தில் தானாக உதித்த ஒரு கற்பனை. அதுவே உத்தர காண்ட புராணமாக வடிவம் எடுத்து நிற்கிறது. அது அழகும் துக்கமும் கலந்த புராணமேயாயினும் மனத்துக்குச் சமாதானமாகப் படவில்லை என்பதும் ஒப்புக்கொள்ள வேண்டும். யுத்த பூமியில் அக்கினிப் பரீட்சை மூலமாக இந்த அபவாத கட்டத்தை முனிவர் ஒரு விதமாக முடித்து விட்டார். ஆனால் இந்தப் பரீட்சையும் என் புத்தியில் ராமனுடைய குணத்துக்கு அவ்வளவு பொருத்தமாக இல்லை. படிக்கும்போது கஷ்டமாக இருக்கிறது.

சக்கரவர்த்தித் திருமகன் மிதிலையிலிருந்து திரும்பியபோது பரசுராமனுடைய சந்திப்பு நிகழ்ந்தது. அந்த சந்திப்புடன் பரசுராமனுடைய விஷ்ணு அவதாரம் முடிந்து போனதாகப் பெரியோர்கள் சொல்லக் கேட்டிருக்கிறேன். அப்படியே ராவண சம்மாரத்துடன் ராமசந்திரனுடைய விஷ்ணு அவதாரம் முடிந்ததாகவும் வைத்துக் கொள்ளலாம். அதற்குப் பின் ராமன் இக்ஷ்வாகு வம்சத்து அரசனாகத்தான் எஞ்சி நின்றான். இப்படி வைத்துக் கொண்டால் யுத்த காலத்தில் சீதையை நடத்திய முறையும் பிறகு உத்தர காண்டத்தில் சொல்லப்படும் விஷயங்களும் சிக்கல் தீர்ந்து விடும். அந்தக் காலத்து உலக நீதியின்படி அயோத்தி மன்னன் நடந்ததாக வைத்துக் கொள்ளலாம்.

பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன் சுவடியில் எழுதிச் சேதப்பட்டோ சேதப்படாமலோ வந்த நூலைப் பற்றி எதையும் நிச்சயமாகச் சொல்ல இயலாது. யுத்த காண்டத்தில் அக்கினி சோதனைக்கு உள்ளாகிய பிறகும் காட்டுக்கும் அனுப்பப்பட்டதாக உத்தர காண்டத்தில் சொல்லப்படுகிறது. பிராட்டியின் துயரமே துயரம். நம்முடைய ஸ்திரீ சமூகத்தின் சொல்லுக்கு அடங்காத துயரங்கள் இதில் பிரதிபலிக்கின்றன.

துன்பம் என்ன! இன்பம் என்ன? — எல்லாம் ஈசுவர லீலை. ஆண்டவனே தன் கருணைமூர்த்தியான பிராட்டியையும் கூட அழைத்துக் கொண்டு மக்களோடு சமமாக, மானிடர்களாக அவதரித்து அந்த இன்ப துன்ப லீலையை முற்றிலும் ஆடிக் காட்டியிருக்கிறான் ராமாயணத்தில்.

* * *

வானத்தினின்று மழை பெய்கிறது. அது ஆறாக ஓடிக் கடலில் சேருகிறது. மறுபடி கடலினின்று நீரைச் சூரியன் உறிஞ்சி அது வானத்துக்கு ஏறி மழை பெய்யவும் ஆறுகள் ஓடவும் செய்கின்றன. இவ்வாறே நாட்டு மக்களின் உள்ளத்திலின்று கருத்துக்கள் எழுந்து முனிவர் உள்ளத்தில் தெய்வீக கவி உருவமாகி அது மக்கள் உள்ளத்தில் மறுபடி ஒளியும் கருத்தும் தருகிறது. இப்படி ஒன்றுக்கொன்று தொடர்ச்சியாக உதவிக்கொண்டு எல்லா நாடுகளிலும் மக்களின் கருத்துக்களும் கவிகளின் பிரபந்தங்களும் சம்பந்தப்பட்டு வருகின்றன. பாரத நாட்டுப் பெண்மக்களின் தூய பண்பும், அவர்கள்

படும் துயரங்களும் உத்தர ராமாயணமாக உருவமெடுத்தன. அதுவே பாரத நாட்டுப் பெண்களின் உள்ளத்துக்கு ஒளியும் சாந்தியும் தரும் நந்தா விளக்கும் ஆகிறது. ஒரு தேசத்து மக்களின் நம்பிக்கைகளினின்று இதிகாச புராண திவ்வியப் பிரபந்தங்கள் உண்டாயினவா, அல்லது இதிகாச புராணங்களால் மக்களின் கொள்கைகளும் நம்பிக்கைகளும் உண்டாயினவா என்பது கேள்வி. இதை அவரவர்கள் தத்தம் போக்கின்படி தீர்த்துக்கொண்டு திருப்தி யடைவார்கள். செடியினின்று விதை உண்டாயிற்று; – விதையினின்று செடி உண்டாயிற்று என்கிற கேள்வியைப் போலவே இது ஆராய்ச்சியில் தீராத ஒரு பிரச்னை. பறவை முதற் காரணமா? முட்டை முதற் காரணமா? கடலினின்று மேகங்கள் உண்டாயினவா, அல்லது மழை பெய்து ஆறுகள் யுகாந்தரமாக ஓடிக் கடல் நிறைந்ததா? — இத்தகைய பிரச்னைகள் நம்மை முடிவில் ஆண்டவன் பாதங்களில் வாக்குக்கும் கருத்துக்கும் அப்பாற்பட்ட இடத்தில் கொண்டு போய்ச் சேர்க்கின்றன.

வேறொரு விஷயம்: சீதையை ராவணன் எடுத்துப் போன இடத்தில் வால்மீகிக்கும் கம்ப ராமாயணத்துக்கும் ஒரு பேதம் இருக்கிறது. கம்ப ராமாயணத்தில் ராவணன் சீதையை கையால் தூக்கி எடுத்துப் போனதாக வால்மீகியில் சொல்லி யிருப்பதை மாற்றி, தேவியைத் தீண்டாமல் தரையோடு அப்படியே அலக்காக எடுத்துப் போனான் என்று சொல்லப்பட்டிருக்கிறது. கம்ப ராமாயண முறையில் தான் பாகவதர்கள் கதை அநேகமாகச் சொல்லி வருகிறார்கள். ஏனெனில் அதுவே நம்முடைய மக்கள் உள்ளத்திற்குச் சமாதானம் தருகிறது. அதருமமாகவும் மிருகத்தனமாகவும் ஒரு கொடியவன் ஒரு ஸ்திரீயிடம் நடந்து கொண்டால், நிரபராதியான அவளை அதனால் ஏதொரு பாபமும் தொடவில்லை. அவமானமும் ஆகாது. ஆயினும் நம்முடைய நாட்டில் அது அந்த ஸ்திரீயினுடைய சீலத்துக்கு ஒரு களங்கம் என்று தவறாக எண்ணி வருகிறார்கள். இதற்கு விட்டுக் கொடுத்துத்தான் கம்பர் வால்மீகி ராமாயணத்தை இந்த இடத்தில் மாற்றி விட்டார். இதே காரணமாகத்தான் துளசி ராமாயணத்திலும் ராவணன் தூக்கிப் போனது உண்மை சீதையை அல்ல, ஒரு மாயா சீதையை நிறுத்தி விட்டு பிராட்டி மறைந்து போனதாகச் சொல்லப்படுகிறது. இப்படித்தான் வடக்கே அனைவரும் ராமாயணத்தைச் சொல்லி வருகிறார்கள். அக்கினிப் பரீட்சையின் போது மாயா சீதை நெருப்பில் மறைந்து போனதாகவும், தீயிலிருந்து உண்மைப் பிராட்டி உதித்து வந்ததாகவும், துளசி ராமாயணத்தில் அழகாக முடிகிறது.

மறுபடியும் குழந்தைகளுக்கு ஒரு வார்த்தை: இனிமேல் சக்கரவர்த்தித் திருமகனைப் படிக்க வேண்டுமானால், புஸ்தக வடிவத்தில் வெளியாகும், வைத்துக் கொண்டு நிதானமாகப் படிக்கலாம். பல தடவை படிக்கலாம். படங்கள் பார்க்க வேண்டுமானால் பழைய 'கல்கி' இதழ்களைத் தேடிச் சம்பாதித்துப் பார்த்துக் கொள்ள வேண்டும். 'கல்கி'யில் ஹனுமானை எழுத வேண்டுமானால் ஒரு பக்கத்தில் அடங்குவதற்கு மேல் எழுதமுடியாது. நீங்களோ ஹனுமானையாவது ராவணனையாவது கும்பகர்ணனையாவது உங்கள் கற்பனையில் ஆகாயம் அளாவ எழுதலாம்.

* * *

மிக அறிந்தவனைப் போல் ஏதேதோ சொல்லிக் கொண்டு போனேன். மற்றவர்களுக்குச் சொல்லுவது இருக்கட்டும், என் சொந்த சமாச்சாரம் என்ன?

இவ்வளவு மாதங்கள் ராமாயணத்துடன் கூடிக் குலாவி அதற்குப் பணி செய்யும் ஆனந்தத்தில் மூழ்கி யிருந்தேன். அந்தக் கனவு இப்போது முடிந்து போயிற்று. பிராட்டியினின்று பிரிந்தபோது சக்கரவர்த்தித் திருமகன் துயர மடைந்தான். அயோத்தியை விட்டுப் பிரிந்தபோது துக்கப்படவில்லை. அதைப் போலவே என்னளவில் என் சொந்தக் கதையும். பலவித பணிகளிலும் பொறுப்புகளிலும் பதவிகளிலும் நான் இருந்து பிரிந்திருக்கிறேன். பிரிந்தவுடன் இன்னது செய்வது என்பது தோன்றாமல் குழப்பம் அடையவில்லை. ஆனால் இப்போது சக்கரவர்த்தித் திருமகன் கதையைச் சொல்லும் பணி முடிந்து போனதும் மூர்த்தி யில்லாத கோயிலைப்போல் எல்லாம் ஏதோ வெறித்துப் போன மாதிரி யிருக்கிறது. பணியற்ற வாழ்வின் கதி இது என்பதை யாவரும் தெரிந்து கொள்ள வேண்டும். பணியைப் பாரமாக நினைக்க வேண்டாம். பணியே உயிருக்கு உயிர் தரும் ரகசியம். குர்வன் னேவேஹ கர்மாணி ஜிஜீவிஷேச் சதம் ஸமாஹ். ஏவம் த்வயி நான்யதேதோஸ்தி என்று ரிஷி சொன்னது இதுவே. செய்யும் காரியங்களில் பசை வைத்துக் கொண்டு அலையக்கூடாது. ஆனால் பணிகள் செய்து கொண்டே யிருந்தால் மட்டுமே வாழ்க்கையைச் சகிக்க முடியும்.

# இருமலுக்கு வீட்டிலேயே குணம் அளிப்பது!




## க்ளைகோடின்-டெர்ப்-வசாகா

அலெம்பிக் கெமிகல் ஒர்க்ஸ் கம்பெனி லிமிடெட், பரோடா - 3.

•

நீங்கள் அலெம்பிக்கின் மேல் பூரண நம்பிக்கை வைக்கலாம்.

---



# புகழ் அளிக்கும் படம்

பகீரதன்

ஜெமினி அதிபர் திரு எஸ். எஸ். வாஸன் இருக்கிறாரே, அவர் ஒரு அகில உலகப் புகழ் பெற்ற படாதிபதி. அவரை அகில உலகப் புகழ்பெற்ற படாதிபதி என்று ஒத்துக் கொள்ளாதவர்கள் அகில இந்தியப் புகழ் பெற்ற படாதிபதி என்று கட்டாயம் ஒத்துக் கொள்வார்கள்.

"இன்ஸானியத்" என்ற திரைப்படத்தைத் திரு வாஸன் தயாரித்து வெளியிட்டிருக்கிறார். இந்தியாவில் இதுவரை யாருமே கையாளாத அபூர்வமான முறைகளை எல்லாம் கையாண்டு படம் தயாரித்திருக்கிறார். அகில இந்திய சினிமா நட்சத்திரங்களில் மிகச் சிறந்த நட்சத்திரங்களைக் கொண்டு படம் பிடித்திருக்கிறார். அகில உலகப் புகழ்பெற்ற அமெரிக்க ஹாலிவுட் சினிமா நட்சத்திரத்தையும் சேர்த்துக் கொண்டு படம் பிடித்திருக்கிறார். "ஒரு சினிமாவுக்காக இவ்வளவு ரூபாய்களைச் செலவுசெய்து அமெரிக்காவிலிருந்து நடிகரைக் கொண்டு வரலாமா! அதிலும் பேசவோ பாடவோ தெரியாத ஒரு நட்சத்திரத்தை வரவழைத்து அதற்கு இவ்வளவு பணத்தை வாரிக் கொட்டிக் கொண்டிருக்கலாமா!" என்று இதர படமுதலாளிகள் எல்லாம் வியந்து பேசிக் கொள்ளும்படியான அந்த ஹாலிவுட் நட்சத்திரம் யார்! ஜிப்பி என்று புகழ்பெற்ற இரண்டரை அடி உயரம் உள்ள குரங்குதான்.

"இன்ஸானியத்" என்றால் என்ன தெரியுமா! மனிதத்தன்மை என்று பொருள். மனிதத்தன்மையின் சிகரமாக விளங்கும்படி இன்ஸானியத் படத்தில் வரும் நடிகர்கள் நடித்திருக்கிறார்கள். வேறு யாராவது படம் பிடித்திருந்தால் நடிகர்கள் அப்படி இப்படி என்று நடித்திருக்கலாம்; திரு வாஸனிடம் அகப்பட்டுக் கொண்டு நடிகர்கள் யாரும் தங்கள் நடிப்புத் திறமை முழுவதையும் காட்டாமல் இருந்து விடுவதற்கு முடியுமா!

"இன்ஸானியத்" ஒரு இந்திப் படம் என்பதைத் தெரியப்படுத்தி விடுகிறேன். சென்னை வெலிங்டன் தியேட்டரில் இப்பொழுது அபாரமாய் ஓடிக் கொண்டிருக்கும் படம்; அபாரமாய் ஓடுவதற்கு எல்லா வகையிலும் தகுதியான படம்; மக்கள் விரும்பிப் பார்க்கும் படம்; மகத்தான படம். இந்தியா முழுவதும் வெற்றிகரமாக ஓடிக் கொண்டிருக்கும் அருமையான படம்.

இந்தியாவில் எத்தனையோ படங்கள் எடுக்கப் பட்டிருக்கின்றன. அவற்றுக்குள்ளே "இன்ஸானியத்" படத்துக்கு இணையாக மனிதத் தன்மையை உயர்த்திக் காட்டும் உணர்ச்சி நிறைந்த உள்ளத்தைக் கவரும், இன்னொரு படம் வெளி வந்திருக்கிறதா என்பது சந்தேகம்தான்.

இன்ஸானியத் கதையைக் கேளுங்கள்: ஜங்கூரா என்ற கொடுங்கோல் மன்னன் கிராம மக்களைக் கொள்ளையடித்துக் கொடுமைப் படுத்தி வருகிறான். ஒரு சமயம் ஜங்கூராவின் சேனைத் தலைவன் கிராமத்தைக் கொள்ளையடித்துக் கொண்டிருக்கிறான். அப்போது கிராமத் தலைவனின் மகள் துர்க்கா சேனைத் தலைவனின் கன்னத்தில் பளீர் என்று ஒரு அறை கொடுக்கிறாள். துர்க்காவின் துணிச்சல் அடியோடு வாழ்க! துர்க்காவுக்கு அந்தத் துணிச்சல் ஏற்படாவிட்டால் சேனைத் தலைவன் பானு பிரதாபுக்கு மனிதத்தன்மை ஏற்பட்டிருக்குமா!

மனிதத் தன்மை பெற்ற பானு பிரதாப் கொடுங்கோலன் ஜங்கூராவின் கொட்டத்தை அடக்கக் கங்கணம் கட்டிக் கொள்கிறான். சேனாதிபதி பட்டத்தைத் துறந்து அந்தக் கிராமத்திலேயே தங்கிக் கிராம மக்களுக்குப் போர்ப் பயிற்சி அளிக்கிறான். கிராம மக்களின் அன்புக்குப் பாத்திரமாகி விடுகிறான். அவன் மனிதத் தன்மை துர்க்காவை மயக்குகிறது. துர்க்காவின் அன்பு பானு பிரதாப்பைக் கவர்கிறது. ஒருவரை ஒருவர் நேசிக்கிறார்கள்.

துர்க்காவை அவள் அறியாமல் காதலித்து அவளையே மணக்க விரும்பிய மங்கல் இதை அறிந்து மனம் துடிக்கிறான். பிரதாப்பைக் கொன்றுவிடவே முயலுகிறான். பிரதாப் மங்கலுக்காகத் துர்க்காவை மறந்து கிராமத்தை விட்டே வெளியே செல்கிறான். துர்க்கா பிரதாப் இல்லாமல் வாழ முடியாது என்கிறாள். துர்க்காவின் மன நிலையை உணர்ந்த மங்கல்

தன்னுடைய புனிதமான காதலைத் தியாகம் செய்கிறான். துர்க்காவையும் பானு பிரதாப்பையும் ஒன்று சேர்த்து வைக்கிறான்.

ஐந்தாம் படை ஆட்கள் மூலமாக பிரதாப்பின் திட்டத்தைக் கொடுங்கோலன் ஜங்கூரா தெரிந்து கொண்டு விடுகிறான். பானு பிரதாப்பைக் கைது செய்து சிறையில் அடைக்கிறான். கணவனைப் பிரிந்த துர்க்கா தன் கைக் குழந்தையுடன் நடுக் காட்டில் இருந்து துடிதுடிக்கிறாள். மங்கல் பானுபிரதாப்பைச் சிறையிலிருந்து விடுவிக்கிறான். அதற்குள் துர்க்காவின் ஒரு வயதுக் குழந்தையை ஜங்கூராவின் ஒற்றர்கள் எடுத்துச் சென்று கொன்றுவிட முயற்சிக்கிறார்கள். குழந்தையை மீட்டுத் துர்க்காவிடம் சேர்ப்பதற்காக மங்கல் பல கஷ்டங்களை அனுபவிக்கிறான். கடைசியில் குழந்தையைத் துர்க்காவிடம் சேர்ப்பித்து விட்டு உயிர்த் தியாகமே செய்து விடுகிறான். மங்கல் மனித குலத்தில் மனிதத் தன்மை பெற்ற மங்காச் சுடராகப் பிரகாசிக்கிறான்.

**வ**ல்லவனுக்குப் புல்லும் ஆயுதம் அல்லவா! இந்தக் கதையை வைத்துக் கொண்டு திரு வாஸன் மிகச் சிறந்த படத்தைத் தயாரித்து விட்டார். மனிதனிடம் உள்ள தெய்வீக அம்சங்களும், அசுர குணங்களும் நன்கு விளங்கும்படி படத்தைத் தயாரித்திருக்கிறார். கதாபாத்திரங்களில் கொடுங்கோலர்கள், கொடுங்கோன்மையை ஒழிக்கப் பாடுபட்டவர்கள் யாரையுமே நாம் மறக்கமுடியாதபடி உணர்ச்சிமயமாக அவர்களை நடிக்கச் செய்திருக்கிறார். படத்தைப் பார்க்கும்போது மனிதத்தன்மையின் உயர்வை வெகு நன்றாக உணர்ந்து கொள்ள முடிகிறது. மங்கல் என்னும் கதாபாத்திரத்தின் தியாகம், மனிதவாழ்வின் இயல்பைக் குறித்துத் தத்துவஞானமே ஏற்பட்டு விடும்படி செய்து விடுகிறது.

படத்தில் நடிக்கும் நடிகர்கள் எல்லாருமே 'ஜிப்பி' உள்பட அந்தந்தச் சமயத்துக்கு ஏற்றபடி அற்புதமாக நடித்திருக்கிறார்கள். உணர்ச்சியுடன் நடித்திருக்கிறார்கள்; மிக நன்றாக நடித்திருக்கிறார்கள். இதனால் பாஷை புரியாத குறையே தோன்றவில்லை. ஜிப்பி தன்னுடைய உத்ஸாகம் நிறைந்த நடிப்பின் மூலம் பாஷையின் உதவியில்லாமலே பேசுகிறது, பாடுகிறது, ஆடுகிறது, வாத்தியங்கள் வாசிக்கிறது, ஸ்டன்ட் வேலை செய்கிறது, குழந்தையைத் தூக்கிக்கொண்டு கோட்டையின் உயரமான சுவரிலிருந்து லாகவமாகக் குதிக்கிறது, பிள்ளைகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கிறது, பிள்ளைகளோடு பிள்ளையாய்ப் பாடம் படிக்கிறது, மிட்டாய் விற்கிறது, வேவு பார்க்கிறது, சுங்க அதிகாரியாக நடிக்கிறது! ஜிப்பி கொடுங்கோலன் ஜங்கூரா போல நடித்துக் கேலி செய்வதும், காலில் பனிச் சறுக்கு விளையாட்டுச் சக்கரத்தை மாட்டிக் கொண்டு ஆடி வருவதும் மறக்க முடியாத அதிசயக் காட்சிகள். ஜிப்பி தோன்றும் காட்சிகளில் எல்லாம் ஒரே குதூகலமும் பரபரப்பும்தான்! ஜிப்பி தன்னை மறந்து மனிதத் தன்மையுடன் அபாரமாக நடித்திருக்கிறது!!

படத்தில் ஆபாசமான சந்தர்ப்பமோ, அனாவசியமான கட்டமோ, குறை சொல்லும் நடிப்போ ஒன்றுமில்லை. பாராட்ட வேண்டிய அம்சங்கள் நிறைய இருக்கின்றன.

இந்த அருமையான படத்தின் டைரக்டர் திரு எஸ். எஸ். வாஸன் அவர்கள்தான். படத்தின் சொந்தக்காரரும் அவர்தான். இரண்டு ஆண்டுகள் பாடுபட்டு, பல லட்சக் கணக்கான ரூபாய்களை வாரி இறைத்து இந்தப் படத்தைச் சிறந்த முறையில் தயாரித்திருக்கிறார்.

** ** **

**இ**ன்ஸானியத் படத்தில் மிகவும் முக்கியமாகக் குறிப்பிட வேண்டிய அம்சம் காட்சி ஜோடனைகள்தான். இந்தப் படத்தில் சிருஷ்டித்திருக்கும் காட்சி ஜோடனைகள் கொடுங்கோலன் ஜங்கூராவின் ராஜ்யத்துக்கே நம்மைக் கொண்டு போய் விடுகின்றன. ஜங்கூரா மன்னனும், அவன் சேனைத் தளபதிகளும் நடமாடிய மாளிகைகளும், அவர்கள் அமர்ந்திருந்த ஆசனங்களும், ஆடை அணிகளும் அப்படியே தத்ரூபமாகப் பார்ப்பதுபோலவே இருக்கின்றன. அதுபோலவே துர்க்கா, மங்கல், பானுபிரதாப் ஆகியவர்கள் வாழ்ந்து புரட்சி செய்த, கோட்டை கொத்தளங்கள் கட்டி,



வெற்றிக் கொடி ஏற்றிய கிராமமும், அவர்கள் அணிந்திருந்த ஆடை அணிகளும் உண்மையாகவே அவர்களுடன் கிராமத்தில் இருப்பது போன்ற பிரமையை உண்டாக்குகின்றன. இதனால் பார்ப்பது படம் என்பதே பல சமயங்களில் மறந்து போய் எதிரில் நடக்கும் சம்பவங்களைப் பார்ப்பது போன்ற வியப்பும் திகைப்பும் பிரமையும் ஏற்படுகின்றன.

கிராமத்தில் உள்ள ஆண் பெண் எல்லாரும் திறந்த வெளியில் நின்று போர்ப் பயிற்சி செய்வதும், கத்திச் சண்டை பழகுவதும், சிலம்பச் சண்டை பயில்வதும், அதற்கு ஏற்ற வண்ணம் பிரதாப் குதிரைமீது கம்பீரமாக அமர்ந்து, கணீரென்று பாடுவதும் மனத்தில் புல்லரிப்பை ஏற்படுத்தும் வீரம் நிறைந்த காட்சிகள்.

கொடுங்கோலன் ஜங்கூ ராவின் கொடுமையிலிருந்து கிராமத்தைக் காப்பாற்ற ஆயிரமாயிரம் கிராம மக்கள் சேர்ந்து, சேறு குழைத்து, கல் சுமந்து, தண்ணீர் எடுத்து விண்ணை பிடிக்கும் கோட்டை கட்டும் காட்சி நம்மைத் திகைக்க வைத்து விடுகிறது.

இன்ஸானியத்தில் மயிர்க்கூச்சம் எடுக்கும் பல கட்டங்கள் இருக்கின்றன. உணர்ச்சியூட்டும் ஆட்டுக்கடாச் சண்டை, வேகம் நிறைந்த வாள்ப் போர், பயங்கரக் காளைபிடிச்சண்டை, கோட்டையின் வாசலிலே நடக்கும் பிரமிக்க வைக்கும் போர், ஆயிரக்கணக்கான வீரர்களின் மோதல், ஒரு கையில் குழந்தையை வைத்துக் கொண்டு மங்கல் செய்யும் அதிசயமான சாகஸங்கள், ஒரு மலையிலிருந்து இன்னொரு மலைக்குத் தாண்டும் ஆபத்தான இடம், சிங்கத்தின் குகையில் கொடிய சிங்கங்களுடன் போரிடுதல்—இப்படிப் பல காட்சிகள்.

படத்தைச் சோபிக்கச் செய்யும் இன்னும் பல ரஸமான கட்டங்கள் ஆரம்பத்திலிருந்து முடியும் வரையில் ஏராளமாக இருக்கின்றன.

ஜிப்பியின் அட்டகாசங்கள், ஹாஸ்ய நடிகர் ஆகாவின் குற்றமற்ற ஹாஸ்ய நடிப்புகள், இராவணன் கூத்து, கரக ஆட்டம், பொய்க் கால் குதிரை ஆட்டம், நாட்டிய நடனம், அரண்மனையில் அழகிகளின் ஆட்டபாட்டங்கள், இவ்வாறு பல மறக்க முடியாத எழில் மிக்க காட்சிகள். கிராம மக்களின் வெற்றி விழாக் கொண்டாட்டம் படம் பார்க்கிறோம் என்பதையே மறக்கச்செய்துவிடுகிறது. நாமும் கொண்டாட்டத்தில் கலந்து கொள்கிறோம்.

இன்ஸானியத் படத்தின் மனிதத்தன்மை நிறைந்த மிக உன்னதமான கட்டங்கள் :

துர்க்கா பானுபிரதாப் காதலைக் கேட்டு மங்கல் கோபப்படுவதும், பிரதாப்பின்மீது பாய்ந்து தள்ளி அவனைக் கோடரியால் வெட்டி விட முயலுவதும், அதைப் பார்த்துத் துர்க்கா அடி துடிப்பதும், அவள் மன நிலையைக் கண்டு மங்கல் தன் குற்றமற்ற ஒப்புயர்வற்ற காதலைத் தியாகம் செய்வதும், பிரதாப்பின் கையைப் பிடித்துத் துர்க்காவின் கையில் வைத்து வாழ்த்துவதும் உள்ளத்தை உருக்கும் கட்டங்கள். துர்க்காவுக்காகத் தான் எத்தனையோ ஆசையோடும் அன்போடும் வாங்கி வந்த நகைகளை மங்கல் ஆண்டவன் சந்நிதியிலே சமர்ப்பிக்கும்கட்டம் நம் இதயத்தைத் தொட்டு உலுக்குகிறது. மங்கல் மனிதத் தன்மையின் சிகரத்துக்குச் சென்று விடுகிறான்.

ஜங்கூ ரா சைன்யமும், பானுபிரதாப் சேனையும் சண்டையிடும் கட்டங்களில் இந்திரஜால மகேந்திர ஜாலக் காட்சிகளைப் பார்க்கிறோம். படிப்படியாகச் சண்டை வளர்ந்து கொண்டே செல்லும் கட்டம் நம்மை வெறி கொள்ளச் செய்து விடுகிறது. தியேட்டரில் இருந்து படம் பார்க்கிறோம் என்பதையும் மறந்து, வாய் விட்டே கத்தி விடுகிறோம்.

துர்க்கா, மங்கல் ஆகியவர்களின் பல்வேறு மன நிலைகளை வெகு அருமையாகக் காட்டியிருக்கிறது. துர்க்கா, மங்கல் இருவருடைய முகங்களிலும் தோன்றும் குதூகலம், சோகம், எக்களிப்பு, தியாகம் எல்லாம் அபாரமான டைரக்ஷன் திறமையைக் காட்டுகின்றன.

டைரக்டர் திரு வாஸன் அவர்களுடைய திறமையினால் அகில இந்தியாவிலும் தமிழ் நாட்டின் சிறப்பு உயர்ந்து நிற்கும் என்பதில் சந்தேகமில்லை. தமிழகத்துக்குப் புகழ் அளிக்கும் படமாக இன்ஸானியத் திகழ்கிறது.





'கல்கி' காரியாலயத்தில் அக்டோபர் 25உ சரஸ்வதி பூஜையன்று, சக்கரவர்த்தித் திருமகன் பட்டாபிஷேக வைபவம் சிறப்பாக நடைபெற்றது. விழாவுக்கு ராஜாஜி விஜயம் செய்து ஆயுத பூஜை பற்றியும் ராமாயண காவியத்தைப் பற்றியும் அருமையான சொற்பொழிவு நிகழ்த்தினார்கள். ராஜாஜி அவர்களை 'கல்கி' ஆசிரியர் திரு சோமு வரவேற்றுப் பேசுவதையும் 'கல்கி' மானேஜிங் டைரக்டர் திரு சதாசிவம் அவர்களும் நண்பர்களும் மற்றும் காரியாலய அன்பர்கள் அனைவரும் கூடி இருப்பதையும் மேலே படத்தில் காணலாம்.

# "டெக்" பிரயாணிகள்

இந்தியாவிலிருந்து, மலாயாவுக்கு(பினாங்கு, சிங்கப்பூர்) கப்பல் மூலம் "டெக்" பிரயாணிகளாகச் செல்பவர்கள், கப்பல் கட்டணத்துக்காக ரூ. 77-6-0 க்கு ஒரு டிக்கட்டும், குவாரண்டைனுக்காக ரூ. 69-0-0 க்கு டிக்கட்டும் வாங்க வேண்டும்.

மலாயா துறைமுகங்களுக்குக் கப்பல் போய்ச் சேர்ந்தவுடன் "டெக்" பிரயாணிகள் மட்டும் அந்த நாட்டு சர்க்காரால் ஏற்படுத்தியிருக்கும் குவாரண்டைன் என்னும் சிறைக்கு அனுப்பப் படுகிறார்கள். இந்தக் குவாரண்டைனில் "டெக்" பிரயாணிகள் தங்கியிருக்கும் நாட்களுக்கு ஆகும் செலவுகளுக்கென்றே குவாரண்டைன் டிக்கட் ரூ. 69 வசூலிக்கிறார்கள்.

"டெக்" பிரயாணிகள், குவாரண்டைனுக்குள் போய்ச் சேர்ந்தவுடன், அங்குள்ள சுகாதார, வைத்திய அதிகாரிகளின் உத்தரவின்படி, தாங்கள் உடுத்தியிருக்கும் ஆடைகளையும், பெட்டிகளிலுள்ள துணிகளையும், கிருமி காலிவி காஸ் உள்ள இஞ்சினுக்குள் போட்டு அவித்துக் கொடுத்தும், பினைல் போன்ற ஏதாவதொரு நாற்ற மெடுக்கும் மருந்து கலந்துள்ள தண்ணீர்த் தொட்டிகளில் இறக்கி மூழ்கி, குளிப்பாட்டியும், பிறகு, பகுதி பகுதியாகப் பிரித்து, அங்குள்ள பல தகரக் கொட்டகைகளில் அடைக்கப்பட்டு, போலீஸ் பந்தோபஸ்தும் போடுகிறார்கள்.

இப் பிரயாணிகள் கப்பலேறுவதற்கு முன்பே இந்தியாவில் அம்மை குத்திக் கொண்டும், காலரா பிளேக் முதலிய தடுப்பு ஊசிகளைப் போட்டுக் கொண்டும் அத்தாட்சியுள்ளவர்களுக்கே டிக்கட் கொடுக்கப்படுகிறது. மேலும் இந்தியத் துறைமுக சுகாதார அதிகாரி பரிசோதித்து எவ்வித வியாதியும் இல்லை என்று அனுமதி அளித்த பிறகே கப்பலில் ஏற அனுமதிக்கப்படுகிறார்கள்.

குவாரண்டைனுக்கு அனுப்பப்படுவது இந்த இந்திய டெக் பிரயாணிகளை மட்டும்தான். மேல் வகுப்புப் பிரயாணிகளுக்கு இந்தத் தொந்தரவும், அவமானமும் இல்லை.

நமக்கு சுதந்திரம் கிடைத்து எட்டு ஆண்டுகள் ஆகிவிட்டன. இந்தியாவை, மேல் நாடுகளும் கீழ் நாடுகளும் வானளாவப் புகழ்கின்றன. ஆனால், மலாய் நாட்டில் மட்டும் (அதுவும் நமது சகோதர நாடு) இந்தியர்களை குவாரண்டைன் என்ற சிறைச்சாலைக்கு அனுப்பி அவமானம் செய்வது நியாயமா!

"டெக்" பிரயாணிகள் என்ற ஒரே காரணத்தைத் தவிர இவர்கள் என்ன பாபத்தைச் செய்தார்கள்! "டெக்". பிரயாணிகளாகச் செல்வது இவர்களின் குற்றமா!

ஆப்பிரிக்காவில் கறுப்பர்களுக்கு இழைக்கப்படும் அநீதியைவிட இது குரூரமாக இல்லை என்று சொல்ல முடியுமா! — ஊ. சிவானந்தம்


Remy

# டிசைன்கள் உங்களுக்கென்றே உருவாக்கப் படுகின்றன



தொழிலாளிப் பெண்மணியானாலும் சரி, பொருள் வசதி பொருந்திய ஸ்திரீயானாலும் சரி, கைத்தறித் தயாரிப்புகளை தெரிந்தெடுத்து வாங்கினால் நவநாகரி கத்தின் உன்னத சிருஷ்டிகளில் முதலீடு செய்தவராவர்.

பரிசுத்தமான சந்தேரி சேலைகள் பார்வைக்கு அழகாகவும், உடுக்க மிக ஸன்னமாகவும் உள்ளன. மகோன்னதமான காசிப்பட்டும், தங்க, வெள்ளி ஜரிகை கூடிய மனமனப்பான துப்பட்டாக்களும், ஒரிஸ்ஸா மற்றும் பீஹார் பருத்தி நூலினால் செய்த, குளுமையான, கவர்ச்சிமிகுந்த அசல் கிராமிய மோஸ்தர் துணிமணிகளும், மழமழப்பிற்கும் பகட்டான வர்ணச் சேர்க்கைக்கும் பிரசித்திபெற்ற உன்னதமான தென்னிந்தியப் பட்டு திருசுகளும் பார்க்கப் பரவசமளிப்பவை.

அந்த சிருஷ்டிகளுக்கு இணையாக, அழகிய "கான்ஸ்" தயாரிப்புகளும் சென்னை, ஹைதராபாத், பம்பாய் மற்றும் காசியிலிருந்து வந்துள்ளன.

# கைத்தறித் துணிகள்

*நாகரீகத்தை நாடுவோர் விரும்பி வாங்குவது*



இந்தியக் கைத்தொழில் தயாரிப்புகள்
விதவிதமான நூதன வகைத் துணிமணிகளும் தனிப்பட்ட
முறையில் பிரதர்சனம் செய்யப்பட்டுள்ள இடம்.
கைத்தறி பவிலியன்
இந்தியன் இண்டஸ்ட்ரீஸ் பேர் — புதுடில்லி
1955, அக்டோபர் 30உ முதல் டிஸம்பர் 15உ வரை

டிபுடி டெக்ஸ்டைல் கமிஷனர் ஆபீஸ்
ஆல் இந்தியா ஹாண்ட்லூம் போர்டு
98, மோப்ரீஸ் ரோடு, சென்னை - 18.

# பி.ஸி.ஜி நிபுணர்களின் எச்சரிக்கை

ராஜாஜி

'நியூ யார்க் டைம்ஸ்' என்னும் பத்திரிகை அமெரிக்காவில் முதல் ஸ்தானம் பெற்ற பத்திரிகை. அந்தப் பத்திரிகையில் பிரசுரமாயிருக்கும் விஷயத்தை ஒரு நண்பர் அனுப்பியிருக்கிறார். அதில் அடியில் கண்ட செய்தி காணப்படுகிறது:

"நேற்று பிற்பகலில் ஒரு ஆலோசனைக் கூட்டம் நெடு நேரம் நிகழ்ந்தது. அகில அமெரிக்க க்ஷய வியாதிச் சங்கம் இந்தக் கூட்டத்தைக் கூட்டியது. க்ஷய வியாதி வைத்தியர்களில் நாயக அந்தஸ்து பெற்ற 150 நிபுணர்கள் கூடியிருந்தார்கள்.

அமெரிக்க அரசாங்கத்தாரின் ஆரோக்ய இலாக்காவில் க்ஷய வியாதி ஆராய்ச்சிக் கழகத்தின் தலைவர் டாக்டர் கேரோல் பாமர் ஐ. என். எச். மருந்தைப் பற்றிச் செய்யப் பட்ட ஆராய்ச்சியில் கண்ட பயனை விளக்கினார். இந்த மருந்தை அதிக பணச் செலவில்லாமல் உண்டாக்கலாம். க்ஷய வியாதி சொஸ்தப் படுத்துவதற்கு இது அதிகமாக பிரயோகப்பட்டு வருகிறது. வியாதி காணாதவர்களுக்கும் இந்த மருந்தைக் கொடுக்கலாம். வாரத்துக்கு ஒரு தடவை ஒரு சிறிய மாத்திரை சாப்பிட வேண்டியது. அவ்வளவுதான். இது க்ஷய நோய் வராமல் தடுக்கும்.

இந்தக் கூட்டத்தில் பி. ஸி. ஜி ஊசி குத்தைப் பற்றியும் விளக்கி விவாதித்தார்கள். பி. ஸி. ஜி ஊசி குத்தின் லாபாலாபத்தைப் பற்றி அபிப்பிராய பேதம் வெளியாயிற்று. சிலர் இதில் குணமுண்டு என்றார்கள். சிலர் ஒன்றுமில்லை என்றார்கள். ஆனால் இரு சார்பாரும் ஒரு விஷயத்தில் ஏக மனதாக முடிவு செய்தார்கள். அதாவது டூபர்குலின் சோதனைக் குத்தின் பேரில் க்ஷய வியாதி உடலில் இல்லவே இல்லை என்று நிரூபித்த பின் தான் பி. ஸி. ஜி கொடுக்க வேண்டியது. அவர்களிலும் கொடிய க்ஷய வியாதியஸ்தர்களின் சேர்க்கை அதிகமாக இருப்பவர்களுக்கு மட்டுமே இந்த பி. ஸி. ஜி ஊசிகுத்து பிரயோகம் செய்யலாம். சமுதாய முறையில் செய்யலாகாது, அந்த முறையில் பயன் இல்லை என்று கூட்டத்தில் எல்லாரும் ஏகமனதாக ஒப்புக் கொண்டார்கள்."

'நியூ யார்க் டைம்ஸ்' பத்திரிகையில் பிரசுரமாயிருக்கும் இந்தச் செய்தியில் சொல்லப்பட்ட டாக்டர் கேரோல் பாமர் தான் நம்முடைய சர்க்காரின் பிரசுரங்களில் முக்கிய பி. ஸி. ஜி வாதியாக எடுத்தாளப்படும் நிபுணர். அவரை நம்முடைய இந்திய சர்க்கார் மிகவும் பெரிய நிபுணராகப் பாராட்டி வருகிறார்கள். அவர் கலந்து கொண்ட நிபுணர் கூட்டத்திலேயே இம்மாதிரியான முடிவுக்கு வந்திருக்கிறார்கள். சமுதாய ஊசி குத்து வேண்டாம் என்று நான் வாதாடி வருவதைப் பெரிய வைத்திய நிபுணர்கள் ஒத்துக் கொள்கிறார்கள் என்பது இந்தச் செய்தியினால் வெட்ட வெளிச்சமாகிறது.

பொது ஜனங்களும் வேண்டாம் என்கிறார்கள்; நிபுணர்களும் வேண்டாம் என்கிறார்கள். இன்னும் ஏன் பிடிவாதம்? நம் குழந்தைகளைத் தயவு செய்து விட்டு விடலாம்.

இன்னொரு விஷயமும் இந்த நிபுணர்களின் கூட்டத்தில் உறுதியாக்கப் பட்டது. சோதனை ஊசி குத்து அவசர அவசரமாகச் செய்து விட்டு க்ஷய நோய் உடலில் இல்லை "நெகடிவ்" என்று பூரணமாக ஆராயாமல் முடிவு கட்டி பி. ஸி. ஜி ஊசி குத்தி விடும் வழக்கம் மிகத் தவறு. இதனால் உள்ளே அடங்கி இருக்கும் நோய், அதாவது இயற்கை உடல் வலியினால் அடக்கியாளப் பட்ட க்ஷய விஷம் இந்த பி. ஸி. ஜி ஊசி குத்தியதும் கிளறப்பட்டு, விருத்தியாகி க்ஷயவியாதி உண்டாகும். இது பி. ஸி. ஜியிலிருக்கும் அபாயம். இவ்வாறு பலர் நோய் பட்டிருக்கிறார்கள். சோதனை ஊசி குத்து இரண்டு மூன்று அளவில் ஒன்றன்பின் ஒன்றாகக் கொடுத்துப் பார்த்தே, அதன் பின்னரே பி. ஸி. ஜி குத்த வேண்டும் என்று அந்தக் கட்சியைச் சேர்ந்த நிபுணர்களே சொல்லி வந்தார்கள். அப்படியிருக்க நம்முடைய சர்க்கார் நிபுணர்கள் அவசியமில்லை, அதனால் ஒரு தீமையில்லை, தாராளமாக எல்லாருக்குமே குத்தி விடலாம் என்று பேசி வருவது ஆச்சரியமாக இருக்கிறது. எல்லாம் நம்முடைய துரதிர்ஷ்டம்.

நம்முடைய சர்க்காருக்கு "நாமும் நம் நாட்டில் ஏதாவது செய்து காட்ட வேண்டும் என்று நீங்கள் ஆசைப் பட்டால் நீங்கள் பெரிதும் பாராட்டும் இந்த டாக்டர் கேரோல் பாமர் சொல்லும் ஐ. என். எச் மருந்தை வாங்கி வழங்குங்கள். அதில் உயிருள்ள க்ஷயக் கிருமிகள் இல்லை, ஆதலால் அபாயமில்லை. சமுதாய ஊசி குத்து முறையில் உள்ள தொத்து ஆபத்துக்கள் இல்லை. வாயில் போட்டு உட்கொள்ளும் மருந்து. ஆனபடியால் பி. ஸி. ஜியை விட்டு விட்டு ஐ. என். எச் மருந்தைப் பிடியுங்கள்" என்பேன்.




# உள்ளம் நிறைந்தவள்

கிருஷ்ணா

சாய்வு நாற்காலியில் படுத்துக்கொண்டிருந்தான் மூர்த்தி.

அவனது இடது கையில் ஒரு புத்தகம் இருந்தது. வலது கையால் பக்கத்தில் டீபாயின் மேலிருந்த காராபூந்தியைக் கொஞ்சம் கொஞ்சமாக எடுத்து வாயில் போட்டபடியே புத்தகத்தை வெகு சிரத்தையுடன் படித்துக் கொண்டிருந்தான்.

அவனுக்குப் பின்னால் கல்யாணி நாற்காலியின் விளிம்பைப் பிடித்தபடியே வெகு நேரமாக நின்று கொண்டிருந்தாள். அவனுடைய கவனத்தைத் தன்னிடம் எப்படித் திருப்புவதென்பது அவளுக்குத் தெரியவில்லை.

தெரியவில்லையாவது! எல்லாம் தெரியும். ஆனால்......வெட்கம் வந்து குறுக்குச் சுவர் எழுப்பியது.

லேசாக இருமலாம். சிரித்து கனைக்கலாம். ஒளிவு மறைவென்ன! நேராகவே அவனெதிரில் போய் நின்று "அத்தான்!" என்று கூப்பிடலாம். இவ்வளவுக்கும் மேலாக அவனது கிராப்புத் தலையைக் கையால் வருடலாம்......

ஆனால்...ஆனால்...அதை எப்படிச் செய்வது!

இத்தமாதிரி விளையாட்டுப் போக்குகளுக்கெல்லாம் உடன்பட மூர்த்தி சிறு பையனல்லவே! அவளுக்கு வாழ்க்கை புதிதுதான். அவனுக்கோ பழையது.

அறுபட்ட வாழ்வைத்தான் அவன் கல்யாணியுடன் மீண்டும் முடிச்சுப் போட்டுக் கொண்டு தொடருகிறான்.

இதெல்லாம் அவனுக்கு ஒரு வேளை அலுத்துப் போனவைகளாகவும் இருக்கலாம்.

இரண்டு குழந்தைகளுக்குத் தகப்பனாகிவிட்ட அவன் கல்யாணியைக் காதல் மனைவியாக மட்டும் ஏற்றுக் கொள்ளவில்லையே! பொறுப்பும் அன்பும் நிறைந்த ஒரு தாயாகவும் அல்லவா ஏற்றுக் கொண்டிருக்கிறான்!

கல்யாணி கால் கடுக்க நின்று கொண்டிருந்தாள்.

* * *

மூர்த்தி அவளிடமும் அன்பு செலுத்தாமல் இல்லை. அவளோடு எவ்விதத்திலும் ஒரு உத்தம கணவனுக்குரிய பண்பாடோடுதான் நடந்து கொண்டான். அவளைக் கடிந்து கூட அவன் இதுவரையிலும் ஒரு வார்த்தை பேசியதில்லை. அப்படியிருந்தும் கூட அவனது குணம் அவளுக்கு ஒரு விசித்திரப் புதிராகவே தோன்றியது.

விவாகமாகி எட்டு மாதங்களுக்கு மேல் அவனோடு பழகியும் அவளுக்கு இன்னும் சகஜநிலை ஏற்படவில்லை.

அவள் மிகுந்த சிரத்தையுடன் தேவாமிருதத்துக்கு ஒப்பாகப் பாதாம் அல்வா கிளறியிருந்தாள். பள்ளியிலிருந்து களைத்து வரும் தன் குழந்தைக்காகத் தாயார், அதற்குப் பிடித்தமான தின்பண்டத்தை வெகு பத்திரமாக வைத்திருந்து குழந்தை வந்தவுடன் அதற்கு எவ்வளவு அன்போடு கொடுத்து மகிழ்வாளோ, அதே போல மூர்த்தி ஆபீஸிலிருந்து வந்ததும் டிபனைக் கொடுத்து இன்புற வேண்டும். அவன் அதைச் சாப்பிட்டு விட்டுத் தன்னைப் பாராட்ட வேண்டும்......

இன்பக் கோட்டைக்குக் கோபுரம் கட்டிப் பார்த்து விட்டாள் அவள். ஆனால் நிஜமாக நடந்தது என்ன!

மூர்த்தி குஷியோடுதான் வந்தான். "என்ன டிபன் கல்யாணி!" என்று அவன் அன்போடு தான் கேட்டான்.

கல்யாணியும் மகிழ்ச்சியோடு டிபன் தட்டைக் கொண்டுவந்து வைத்தாள். தட்டிலிருந்த பதார்த்தத்தைக் கண்டதும் அவனது மலர்ந்திருந்த முகம் ஏன் இப்படிச் சுருங்கி விட்டது!

"கல்யாணி! இது எனக்கு வேண்டாம்! இதை எடுத்துக் கொண்டு போய் விடு!" என்றான் வருத்தம் தோய்ந்த குரலில்.

"ஏன்!" என்று கேட்க வாயெடுத்தாள் கல்யாணி. அதற்குள் அவனே பதில் சொல்லி விட்டான்.

"கல்யாணி! இது ருக்மிணிக்கும் ரொம்பவும் பிடிக்கும். இதை அவள் அடிக்கடி செய்வாள். இதை அவள் தன் கையாலேயே எடுத்து என் வாயில் போட்டால்தான் அவளுக்கும் திருப்தி, எனக்கும் சந்தோஷம். என் இன்ப நினைவுகளில் ஒன்றாகிய இதை இப்பொழுது எனக்குப் பார்க்கவே கண்கள் கூசுகின்றன. அமிருதம் போன்ற அவளையே இழந்து விட்டேன். இந்தப் போலித் தித்திப்பு எனக்கு எதற்குக் கல்யாணி! எடுத்துக் கொண்டு போய் விடு."

வாழத் துடிக்கும் தன் இளம் மனைவியுடன் பேசுகிறோம் என்பதையே மறந்து உணர்ச்சிவசப்பட்டுப் பேசினான் மூர்த்தி.

கல்யாணியின் கண்களின் கோடியில் ஒளி வெள்ளம் முத்துக் கட்டியது. உதடுகள் துடித்தன. "உங்களுக்குத் துன்பம் தரும் இதை இனி செய்யவே மாட்டேன்!" என்று கூறிய அவள், தட்டை எடுத்துக் கொண்டு உள்ளே போய் விட்டாள்.

அன்றைய டிபனை அண்டை அயல் வீட்டுக் குழந்தைகளைக் கூப்பிட்டுத் தலைக்குக் கொஞ்சமாகக் கொடுத்து விட்டாள் கல்யாணி. அவளும் எடுத்துக் கொள்ளவில்லை. ராதாவுக்கும் கோபுவுக்கும் கூடக் கொடுக்கவில்லை.

இது மட்டுமா!

அன்றொரு நாள் அவள் வெகு ஆசையுடன் மல்லிகைச் சரத்தைப் பின்னல் வளைவுக்கு மேல் அழகாகச் சூட்டிக் கொண்டதற்கு மூர்த்தி என்ன சொன்னான்!

"கல்யாணி! நீ எந்தப் புஷ்பங்களை வேண்டுமானாலும் வைத்துக்கொள். இதை மட்டும் தலையில் வைத்துக் கொள்ளாதே!"

அவள் 'ஏன்!' என்று கேட்கவில்லை. அவளுக்குத் தான் தெரியுமே! பேசாமல் எடுத்து வைத்து விட்டாள்.

சில தினங்களுக்கு முன்பு கடற்கரைக்குப் புறப்பட்ட சமயம் அவள் மிகவும் பிரியத்துடன் எடுத்துக் கட்டிக் கொண்ட தாமரை வர்ணச் சேலையின் கதியும் அப்படியேதான் ஆயிற்று.

"அவளுக்கு மிகவும் பிடித்த புடவை இது. ருக்மிணி அடிக்கடி உடுத்தி அனுபவித்த கலர் இது. கல்யாணி! நீ அதைக் கட்டிக்கொள்ளாதே! என் நெஞ்சு வேதனையால் வெடித்து விடும்!" என்றான்.

கல்யாணி புடவையை அவிழ்த்து மடித்துப் பீரோவின் உள்ளே மிகவும் பத்திரமாக வைத்து விட்டாள்.

தன் கணவரின் போக்கில் குறை காணவில்லை கல்யாணி. தன்னையே தான் நொந்து கொண்டாள். ருக்மிணிக்குப் பிடித்தவைகளும் அவள் அவனோடு சேர்ந்து அனுபவித்ததுமான அதே அனுபவங்களை தனக்கும் ஏன் பிடிக்கின்றன! அதைத் தவிர்க்க வேண்டும். அவருடைய மனம் எந்த வகையிலும் கலங்கக் கூடாது. ருக்மிணியின் நினைவையே நெஞ்சில் வைத்து நீறிக் கொண்டிருப்பவருக்கு அது சம்பந்தப்பட்ட சிறு நினைவின் கீறலும் நெஞ்சை ரணமாக்கி விடும் என்பதை நன்கு உணர்ந்து கொண்டாள் கல்யாணி. கூடுமானவரையிலும் தன் விருப்பு வெறுப்புக்களை அடக்கிக் கணவன் இச்சைப்படியே நடந்து அவனது அன்பைக் கவருவதற்கு முயன்றாள்.

இந்த நிலையில்தான் தீபாவளி குறுக்கிட்டது.

கல்யாணம் ஆன முதல் வருஷம். தலை தீபாவளி யென்ற பெயரால் கதைகளில் வரும் தம்பதிகளின் இன்ப அனுபவங்களையெல்லாம் ரசித்து, சுவைத்து, தன் வாழ்விலும் ஏற்படும் அந்தப் பொன்னான நன்னாளை எதிர்பார்த்திருந்தவள் தான் கல்யாணியும். அதற்கு அனுகூலமாகவே தான் அவளுடைய தந்தையும்



கடிதம் எழுதி யிருந்தார், மருமகனையும் மகளை யும் குழந்தைகளுடன் புறப்பட்டு வரும்படி.

கதைகளில் கணவனை எதிர் நோக்கி வாசலுக் கும் உள்ளுக்குமாக நடை போடும் காதலியின் இன்பத் தவிப்பும், தேன் கசியும் இன்ப வசனங் களும், புதுமையின் பூரிப்பும் அவளுடைய நிஜவாழியில் இருக்கப் போவதில்லை யென்பது அவளுக்கு நன்கு தெரியும். அதற்காக முதல் வருஷம் ஏற்பட்ட மங்களகரமான பண்டி கையை விட்டுவிட அவளுக்கு மனமில்லை. தன் விருப்பத்தை எப்படி மூர்த்தியிடம் தெரிவிப்பது!

இன்னும் சற்றுப் போனால் குழந்தைகள் பள்ளியிலிருந்து வந்து விடுவார்கள். அதற்குள் எப்படியாவது சொல்லி விட்டுக் கடிதத்தையும் கொடுத்து விட வேண்டும்....

நின்று கொண்டிருந்த கல்யாணியின் உள்ளத் தில் இமைப் பொழுதில் எண்ணங்கள் ஓடி மறைந்து விட்டன. ஆனால் வாய்தான் எழும்பவில்லை.

நின்று கொண்டே யிருந்தாள்...

மூர்த்தியோ சுவாரஸ்யமாகப் பக்கங்களைப் புரட்டிக் கொண்டிருந்தான்.

படிக்கும் சுவாரஸ்யத்தில், மூர்த்தியின் கை வெறும் தட்டைத் துழாவியவுடன் தான் அதில் காராபூந்தி தீர்ந்து போய் விட்ட தென் பதை உணர்ந்து கொண்டான்.

உடனே புத்தகத்தைக் கீழே வைத்த அவன் தனது இரு கைகளையும் பின்னால் உயரத் தூக்கிச் சோம்பல் முறித்தான். நீண்ட கைகள் கல்யாணியின் உடலை ஸ்பரிசித்தன.

"என்ன கல்யாணி! பின்னால் நின்று கொண்டு தவமா செய்கிறாய்!" என்று கேலியா கக் கேட்டபடியே அவளது கைகளைப் பிடித்து அவளைத் தன் முன் இழுத்து விட்டான்.

"ஒன்றுமில்லை. ஒரே ஒரு சின்ன விஷயம். உங்களிடம் கேட்க வேண்டு மென்று நினைத் தேன். கேட்டால் கோபித்துக் கொள்ள மாட்டீர்களே!" என்று தயக்கத்துடன் கேட் டாள் கல்யாணி.

அவளது விரல்கள் புடவைத் தலைப்பின் குஞ்சங்களை நெருடின.

"ஏன் இவ்வளவு தயக்கம்! நீ கேட்கப் போவது நான் கோபிக்கக் கூடிய விஷயம் தான் என்று முன்பே உனக்குத் தெரிந்து விட்டதோ!" என்று சிரித்தபடியே கேட் டான் மூர்த்தி.

"அப்படி அர்த்தம் செய்துகொள்ளாதீர்கள். விஷயம் பழமையானதுதான். உலகில் எல்லோ ராலும் எதிர்பார்க்கப் படுவதுதான்... ஆயி னும், உங்கள் மன நிலை......"

"என் மன நிலைக்கு என்ன! இப்பொழுது அது சரியாகவே இருக்கிறது. ஆமாம்!...... ஏன் இப்படிச் சுற்றி வளைக்கிறாய்! என்னிடம் உனக்கென்ன அவ்வளவு பயமா!"

"இல்லை, இல்லை! உங்கள் விருப்பத்துக்கு மாறாக நான் நடந்துவிடக் கூடாதே என்று

எண்ணம்தான். இதோ பாருங்கள்! இன்று இது அப்பாவிடம் இருந்து வந்தது" என்றவாறே தன் இடுப்பில் செருகியிருந்த கவரை எடுத்து அவனிடம் கொடுத்தாள் கல்யாணி.

தன்னையும், கல்யாணி, குழந்தைகளையும் அழைத்துக் கொண்டு தீபாவளிக்குப் புறப்பட்டு வரும்படி மாமனார் எழுதியிருந்த கடிதத்தைப் படித்து முடித்த மூர்த்தி ஒரு நீண்ட பெருமூச்சுடன் அதை மேஜையின் மேல் வைத்தான்.

"உம்! யாருக்குக் கல்யாணி தலை தீபாவளி!" என்று கேட்ட அவனது குரல் அளவுக்கு மீறிக் கரகரத்திருந்தது.

அவள் உள்ளூற நடுங்கினாள்.

"ஏன்! ந...ம...க்...குத்தான்!" என்று சொல்வதற்குள் அவளுக்கு வியர்த்து விறுவிறுத்து விட்டது.

"நமக்கா!" — வாய் விட்டுச் சிரித்தான் மூர்த்தி. "நமக்கல்ல, கல்யாணி! உனக்கு இது தலை தீபாவளி. எனக்கு இது தலை யிறங்கிய சோக தீபாவளி. என் ருக்குவின் உடலைத் தீயிட்டுப் பொசுக்கிய எனக்கு......"

கல்யாணி அவசரமாக அவன் வாயைப் பொத்தினாள்.

"நீங்கள் இப்படிச் சொல்வீர்களென்பது எனக்குத் தெரியும்! ஆனாலும் ஒரு சமாதானத்துக்காகக் கேட்டேன்! எனக்குத் தீபாவளி கொண்டாடாமல் இருப்பது பற்றிக் கடுகளவும் வருத்தமில்லை......உங்களுக்கில்லாத எதுவும் எனக்குத் தேவையில்லை" என்று கூறிவிட்டு உடனே உள்ளே போய் விட்டாள்.

ருக்மிணியின் குழந்தைகளான ராதாவும் கோபுவும் கல்யாணி வந்ததிலிருந்து தங்கள் அன்னை மறைந்து விட்டதையே மறந்து விட்டனர். தங்களை அன்புடன் சீராட்டிப் பாராட்டி வளர்த்து வந்த அன்னை இல்லையே "என்ற" ஏக்கம் சற்றும் அவர்களுக்கு இருக்கவில்லை. அந்த அளவுக்குக் கல்யாணி அந்தக் குழந்தைகளிடம் அன்போடு பழகி வந்தாள். 'சித்தி' என்றே அவர்கள் கூப்பிட்டாலும், அவர்கள் நெஞ்சில் "அம்மா" என்றழைத்தபோது உண்டான உணர்ச்சிகளே நிரம்பி வழிந்தன.

ஆம், மிகச் சிரமமான அன்னையின் ஸ்தானத்தை இட்டு நிரப்பிவிட்ட கல்யாணிக்கு மனைவியின் ஸ்தானத்தைப் பரிபூரணமாகத் தன்னால் இட்டு நிரப்ப முடியவில்லையே என்ற ஏக்கம் பெரிதும் நெஞ்சை யடைத்தது.

விடுவிடு எனத் தன் அக்காள் ருக்மிணியின் படத்தின் முன்பு வந்து விழுந்தாள். "நீங்கள் விட்டுச்சென்ற காலி ஸ்தானத்தை நிரப்பத்தான் நான் வந்திருக்கிறேன் என்பதை அவர் உணரும்படி செய்ய மாட்டீர்களா, அக்கா!" என்று இதயம் கனியப் பிரார்த்தனை செய்தாள்.

"சித்தி!" என்று ராதாவும் கோபுவும் பள்ளிக்கூடம் விட்டு வந்து எழுப்பும் வரையிலும் அவள் அப்படியே இருந்தாள்.

* * *

தீபாவளிக்கு இன்னும் சரியாக ஒரு வாரமே இருந்தது. அன்று மாலை ஆபீஸ் விட்டுச் சோர்வுடன் வீட்டினுள் நுழைந்த

நவராத்திரி விழாவை முன்னிட்டு பர்மாஷெல் கிளப் சார்பில் அக்டோபர் 19ல 'மதராஸ் மோட்டார் இன்ஷுரன்ஸ் கம்பெனி'யின் மானேஜர் திரு சி. கிருஷ்ணசுவாமி அவர்களின் புதல்வி குமாரி நளினியின் பரத நாட்டியம் நடந்தது.

"நாதர் முடிமேல்" என்ற பாட்டுக்குக் குமாரி நளினியின் அபிநயம் பிரமாதமாக அமைந்தது. பர்மாஷெல் சென்னை கிளை மானேஜர் திரு டபிள்யூ. ஆர். வுட் அவர்கள் குமாரி நளினியைப் பாராட்டிப் பரிசு வழங்கியதுடன், குமாரி நளினிக்குச் சிறந்த முறையில் பரத நாட்டியம் பயிற்றுவித்த நடன ஆசிரியை ஸ்ரீமதி கௌசல்யா அவர்களையும் வெகுவாகப் புகழ்ந்து பாராட்டினார்.



மூர்த்தி கல்யாணியின் நிலையைக் கண்டு ரொம்பவும் கலங்கிப் போய் விட்டான்.

மயக்கமுற்றிருந்த அவளை எதிர் வீட்டு மீனாட்சிப் பாட்டி ஆசுவாசப்படுத்திக் கொண்டிருந்தாள். ராதாவும் கோபுவும் வெகு கவலையுடன் சித்தியின் அருகில் நின்று கொண்டிருந்தனர்.

"ஏன், பாட்டி! கல்யாணிக்கு என்ன உடம்பு!" என்று பதறிப்போய்க் கேட்டான்.

"ஒன்றுமில்லையப்பா! இதெல்லாம் சகஜம் தான். அவளை அதிகமாய் வேலை செய்யச் சொல்லாதே! உதவிக்கு யாரையாவது போட்டுக் கொள்!" என்று பாட்டி கமட்டுச் சிரிப்புடன் புத்திமதி கூறினாள்.

பாட்டியின் குரலிலிருந்த விஷமம் மூர்த்திக்கு விஷயத்தைப் புரிய வைத்து விட்டது.

கல்யாணி கர்ப்பமாகி யிருக்கிறாள்.

"ஆகட்டும் பாட்டி! அப்படியே செய்கிறேன்" என்றான் தன்னை மீறிய தொரு குதூகலத்துடன்.

சற்று நேரத்துக்கெல்லாம் கல்யாணி எழுந்து விட்டாள். அருகில் தன்னையே பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருக்கும் கணவனைக் கண்டவுடன் உலகத்தில் உள்ள வெட்கம் எல்லாம் அவளது முகத்தில் வந்து குடி கொண்டு விட்டது.

ருக்மிணியின் நினைவையும் மீறி இதுகாறும் அவன் அனுபவித்திராத ஒரு உணர்ச்சியை அவன் அடைந்தான். கல்யாணி அவனை நோக்கி மெல்லிய புன்னகை புரிந்தாள்.

* * *

தீபாவளிக்கு இன்னும் இரண்டே நாட்கள்தான் இருந்தன. "கல்யாணி! சரியாக நாலரை மணிக்கு ரயில் புறப்படுகிறது. நான் சீக்கிரம் போய் ஒரு டாக்ஸி கொண்டு வருகிறேன். குழந்தைகளையும் தயார் செய்து நீயும் தயாராக இருக்க வேண்டும், தெரியுமா!" என்றான் மூர்த்தி. அவன் கைகளில் விதவிதமான பட்டாசுக் கட்டுகள் இருந்தன. வாசலில் வேலைக்காரன் ஒருவன் ஜவுளி மூட்டையுடன் நின்றிருந்தான்.

"இவையெல்லாம் என்ன! நாம் எங்கே போகிறோம்! நமக்குத் தான் இந்த வருஷம் பண்டிகை கிடையாதே!" என்று ஆச்சரியத்துடன் வினவினாள் கல்யாணி.

"யார் சொன்னது, கிடையாது என்று! நான் சொல்கிறேன்! பண்டிகை உண்டு! கிளம்பு, உன் அப்பாவிடம்" என்று கூறியவாறே குழந்தைகளைத் தன் மார்பில் அன்போடு அணைத்துக் கொண்டான் மூர்த்தி.

"நிஜமாகவா! நாம் ஊருக்கா போகிறோம்!" என்று கேட்டாள் கல்யாணி, நிரம்பி வழியும் ஆனந்தத்துடன்.

அவளது மலர்ந்த முகத்தையே சிறிது நேரம் பார்த்துக் கொண்டிருந்த மூர்த்தி மெதுவாக அவளைக் "கல்யாணி!" என்று அழைத்தான். அவனது அழைப்பில் என்றும் அவள் கண்டிராத ஒரு உணர்ச்சி ஒலிப்பதை உணர்ந்து கொண்டாள் அவள்.

"கல்யாணி! அறியாமலேயே நான் உனக்குப் பாதகம் செய்துவிட்டேன். பெண்ணின் மனம் தன் கணவனோடு இணைந்து வாழும் வாழ்வு ஒன்றினாலேயே விகசிதம் பெறும் என்பதை அறியாதவனாக இதுகாறும் இருந்துவிட்டேன். ருக்மிணிக்கு வாழ்வு அளித்தது போலவே உனக்கும் வாழ்வளிக்க, உன் விருப்பு வெறுப்புகளை அறிந்து நடந்து கொள்ள நான் கடமைப்பட்டவன். அப்படி நான் நடந்து கொள்ளாவிட்டால் அது உனக்கு மட்டுமல்ல, ருக்மிணிக்கே துரோகம் செய்வது போலாகும். அதுவும் உன்னுடைய இந்த மாதிரியான நிலையிலே......" என்று கூறி நிறுத்தினான்.

கல்யாணி அவனை நிமிர்ந்து பார்த்தாள். அவன் பேசப் பேச அவன் உடம்பில் ஒரு புது பலம் ஊறியது.

"நீ ஒளித்து வைத்தால் எனக்குத் தெரியாதென்று நினைத்திருந்தாயா, கல்யாணி! என் மணிப் பயலைத் தாங்கும் அன்பு அன்னையல்லவா நீ! கல்யாணி! ருக்மிணி என் நினைவிலே நிறைந்தவள். அந்த நினைவின் உருவாக என் நெஞ்சிலே நிறைந்தவள் நீ!" என்று உணர்ச்சியுடன் கூறிய மூர்த்தியைப் பார்த்த கல்யாணிக்கு ஒன்றும் தோன்றவில்லை.



## ‘கோலினஸ்’ உங்கள் பற்களை சுத்தம் செய்வது தவிர, மேற்கொண்டும் உதவுகிறது!

### இப்பொழுதே இந்த நூதன டூத்பேஸ்டை நீங்கள் உபயோகிக்கத் தொடங்குவது நலம்

ஆக்டிவ் க்ளோரோபில் சேர்ந்த ‘கோலினஸ்’ பற்களை சுத்தமாக்குவதுடன் நிற்பதில்லை! இந்நூதன டூத்பேஸ்ட் பல் சிதைவுக்குக் காரணமான கிருமிகளை ஒழித்து, ஈறுகளை உறுதியாக்கி, உங்கள் சுவாசத்தை மணிக்கணக்கில் புதுமணம் கமழ வைத்திருக்கிறது.

இதன் ரகசியம் அற்புதமான ‘கோலினஸ்’ நுரைதான். அது ஆக்டிவ் க்ளோரோபில்லை வாயில் பிரஷ் நுழைய முடியாத மூலை முடுக்குகளுக்கும் எடுத்துச் சென்று, உங்களுக்கு மிகுந்த அனுகூலம் தருகிறது.

**அதிசயமான சிக்கனம்!**

ஈரமில்லாத பிரஷில் அரையங்குல அளவே தேவை. எனவே ஆக்டிவ் க்ளோரோபில் சேர்ந்த ‘கோலினஸ்’ உபயோகிப்பது உங்களுக்கு எவ்வளவு லாபகரம் பாருங்கள்! இன்றே ஒரு பெரிய டியூப் வாங்கவும்.






GK. 1368




**பா**ரத நாடெங்கும் சௌந்தரிய தேவதை கோயில் கொண்டிருக்கிறாள். லக்ஷ்மி தேவியும் சம்பூர்ணமாய்க் கருணை பொழிகிறாள். விண்ணையிடிக்கும் பெரிய பெரிய கட்டடங்களையுடைய மகத்தான தொழிற் சாலைகள் அமைத்து வேலை நடத்துகிறார்கள். மக்களுக்கு வேண்டிய எல்லாவிதமான சாமான்களும் உற்பத்தி செய்கிறார்கள். ஊசி முதல் கப்பல் வரையில் உற்பத்தி செய்யப் பல தொழிற்சாலைகள் ஏற்படுத்தி யிருக்கிறார்கள். இன்னும் விவசாயமும் கைத்தொழிலும் வியாபாரமும் லாபமுடையதாக எல்லா முயற்சிகளும் செய்கிறார்கள். இப்படியாகப் பல வகையிலும் நாட்டின் செல்வம் பல்கிப் பெருகி விட்டது.

மக்கள் அன்னவிசாரமும், ஆடை விசாரமும், உத்தியோக விசாரமும், உத்தியோகமில்லா விசாரமும், வீட்டு விசாரமும், வீடில்லா விசாரமும் இன்றி ஆனந்தமாக இருக்கிறார்கள். ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானமாக வாழ்ந்து வருகிறார்கள்.

மாலை வேளைகளில் மக்கள் குதூகலத்துடன் பல கேளிக்கை விளையாட்டுக்களில் ஈடுபட்டு மகிழ்கிறார்கள். எங்கு பார்த்தாலும் எப்போதும் கொண்டாட்டம்தான். ஆனந்த மிகுதியில் சிலர் ஆடுகிறார்கள்; ஓடுகிறார்கள்; அமுத கீதங்களைப் பாடுகிறார்கள்.

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து எழுபத்தைத் தாம் ஆண்டில் பாரத நாடு இருக்கும் நிலையைத்தான் சொற் சித்திரங்களினால் வர்ணிக்க முயன்றிருக்கிறேன். இந்தமாதிரி நம்முடைய நாடு இருப்பதற்கு வேண்டிய அருமையான திட்டங்கள் வகுத்துக் காரியத்திலும் நிறைவேற்றி வருகிறார்கள். உலகம் வியக்கும் வண்ணம் ஆற்றைத் தேக்கி, அணையைக் கட்டி வருகிறார்கள். அதனால் பாரத அன்னை புதிய எழிலுடன் காட்சி தரப்போகிறாள். உண்மை. இதை நம் வாழ்நாளிலேயே காணலாம்.

**ஸ**ட்லஜ் நதியில் பக்ரா என்னும் இடத்தில் பிரம்மாண்டமான அணை கட்டி வருகிறார்கள். உலகிலேயே உள்ள மிகப் பெரிய அணைகளில் ஒன்றாக அது திகழப் போகிறது. அதன் மூலம் ஸட்லஜ் நதியிலே தேங்கும் தண்ணீரை வட இந்தியா பூராவும் பல சிற்றாறுகளின் மூலமாக நிலங்களுக்குப் பாய்ச்சிப் பாரத நாட்டை வளம் கொழிக்கும் நாடாக மாற்றப் போகிறார்கள். இன்று தொடங்கி நடந்துவரும் இந்தத் திருப்பணியின் பயன்களைப் பாரத நாட்டு மக்கள் தலைமுறை தலைமுறையாக ஆயிரம் ஆண்டுகள் அனுபவிக்கப் போகிறார்கள்.

பக்ரா அணையைப் பார்க்கும் உலகத்து இன்ஜினியரிங் நிபுணர்கள் மூக்கின்மேல் விரலை வைத்து அதிசயப்படத்தான் போகிறார்கள். இந்த அணை சம்பந்தமான எந்த அதிசயத்தைப் பற்றி அதிகமாக ஆச்சரியப் படுவது என்று தெரியாமல் திகைக்கப் போகிறார்கள். இந்திய இன்ஜினியர்கள் இவ்வளவு பெரிய அணையை எப்படிக் கட்டி முடித்தார்கள் என்று எண்ணி வியக்கப் போகிறார்கள். உறுதி வாய்ந்த மலையாக இல்லாமல் சாதாரண மண் மலையாக இருக்கும் மலைகளைப் பலப்படுத்தி அதில் அணை கட்டி யிருக்கும் அதிசயத்தைப் பார்த்துப் பார்த்து அவர்களுக்குத் தலைசுற்றப் போகிறது. சிமென்டும், இரும்பும் இன்னும் பலவகை இயந்திரங்களும் வெளிநாட்டிலிருந்து வரவழைக்காமலேயே அணை கட்டிய திறமையை வானளாவப் புகழப் போகிறார்கள்.

பாரதநாட்டு இன்ஜினியர்களின் பரம்பரை உலகமெங்கும் சென்று புகழ்க்கொடி நாட்டப் போகிறது என்பதைச் சென்ற ஜூன் மாதத்தில் பக்ரா அணையைக் கட்டும் வேலையைப் பார்த்துத் தெரிந்து கொண்டேன்.

**அ**ணைக்கட்டு வேலையைப் பற்றி மேலே சொல்லுவதற்கு முன்னால் அந்த அணைக் கட்டுக்காக செய்திருக்கும் பூர்வாங்க ஏற்பாடுகளையும், நங்கல் நகரில் அமைத்திருக்கும் தொழிற்சாலை, ஆராய்ச்சி சாலையைப் பற்றியும் சொல்லிவிட விரும்புகிறேன்.

மனித நடமாட்டமே இல்லாத மலைப் பிராந்தியத்தில் அணை கட்டுவதற்கு முன் அதற்கு வேண்டிய பிளான்கள் தயாரிக்க வேண்டும். பிளான்கள் என்றால் ஒன்று, இரண்டா! ஆயிரக்கணக்கான பிளான்கள்!





# அணையைக் கட்டுவோம்!

பிறகு சாமான்கள் சேகரிக்க வேண்டும்.

ஒரு பெரிய அணை கட்டுவதற்கு வேண்டிய சாமான்களைச் சேகரிப்பது என்றால் சாமான்யமான காரியமா! அணை கட்டுவதற்கு வேண்டிய சாமான்களின் பட்டியலைப் பார்த்தாலே தலை சுற்ற வேண்டியதுதான். "அணையாவது, கட்டவாவது!" என்று அலுத்துவிட வேண்டியதுதான். ஆனால் அப்படியெல்லாம் அலுத்துக் கொள்ள முடியுமா!

அணை கட்டுவதற்கு வேண்டிய காரியங்கள் நடைபெற்றன. சாமான்கள் சேகரிக்கப்பட்டன. இன்ஜினியர்கள், உத்தியோகஸ்தர்கள், சிப்பந்திகள், தொழிலாளர்கள் தங்குவதற்கு வேண்டிய புதிய நகரமே அமைக்க வேண்டும். எல்லா வசதிகளுடன் கூடிய ஒரு நகரையே நிர்மாணித்தார்கள். அப்படி அமைத்த நகரம்தான் நங்கல் நகரம். அதைப் பற்றிய எல்லா விவரங்களையும்தான் தெரிந்து கொண்டோமே!

நகரம் அமைத்த பிறகு அணைக்கட்டின் அருகில் கல்லும், மணலும், சிமெண்டும், இரும்பும், எண்ணற்ற தளவாட சாமான்களும் கொண்டு செல்லுவதற்கு வேண்டிய சாலைகள் அமைக்க வேண்டும். சாலைகள் என்றால் சாதாரண சாலைகளா! ஏற்றமும் இறக்கமும், வளைவும் நெளிவும் உள்ள பயங்கரமான மலைகளில் சாலைகள் அமைக்க வேண்டும். அணை கட்டுவதற்கு வேண்டிய சாமான்களைத் தயார் செய்வதற்குத் தொழிற்சாலை அமைக்க வேண்டும். ஏராளமான இரும்பு வேண்டும், சிமெண்ட் வேண்டும். இன்னும் எத்தனை எத்தனையோ சாமான்கள் வேண்டும்.

இந்தச் சாமான்கள் சிலவற்றைச் சாலைகளில் லாரிகளில் கொண்டு செல்லலாம். சிலவற்றை அப்படி எடுத்துப் போக முடியாது. டிராலிகளில்தான் எடுத்துப் போகலாம். அதற்கு ஏராளமான டிராலிகள் வேண்டும். அந்த டிராலிகள் போவதற்கு வேண்டிய பல மைல் நீளமுள்ள தண்டவாளங்கள் வேண்டும்.

அவ்வாறு சேகரித்த பலதரப்பட்ட சாமான்களையெல்லாம் ஒரு இடத்தில் சேகரித்து வைக்க வேண்டும். அப்படிச் சேகரித்து வைத்திருக்கும் இடத்தில் எல்லாச் சாமான்களையும் ஒழுங்குபடுத்தி வைக்கவேண்டும். அணை கட்டும் இடத்திலிருந்து இன்ஜினியர்கள் கேட்கும் சாமான்களைக் கேட்ட சமயத்தில் கேட்ட உடனேயே 'டக்'கென்று எடுத்துக் கொடுக்க வேண்டும். அதற்கு ஒரு பெரிய 'ஸ்டோர்' அதாவது பண்டகசாலை வேண்டும்.

இப்படியாக எத்தனையோ பூர்வாங்க ஏற்பாடுகளைச் செய்து கொண்டு அணை கட்டும் வேலையைத் தொடங்க வேண்டும்.

**ப**க்ரா அணையைச் சாதாரண முறையில் கட்ட முடியுமா! சின்னஞ் சிறு அணையா! இந்த உலகிலேயே மிகப் பெரிய அணை ஆயிற்றே. அறுநூற்று என்பது அடி உயரமுள்ள பிரம்மாண்டமான அணை ஆயிற்றே. தஞ்சைப் பெரிய கோவில் கோபுரம் இருக்கிறதல்லவா! அது போல மூன்று பங்கு உயரமுடைய அணையாயிற்றே! அவ்வளவு பெரிய உயரமான அணையைக் கட்டுவதில் எவ்வளவு ஜாக்கிரதை இருக்க வேண்டும்! சாதாரணமாக இதுவரையில் கட்டியிருக்கும் அணை போன்றது அல்ல இந்த அணை. இந்த அணையில் ஏதாவது உடைப்பு ஏற்பட்டுவிட்டால் கோடிக்கணக்கான ரூபாய் அரோகரா ஆகிவிடும். ஆயிரக்கணக்கான கிராமங்கள் அழிந்து போய் விடும். லட்சக்கணக்கான மக்கள் மடிந்து விடுவார்கள். ஆகையால் அணைக்கு உபயோகிக்கும் சிமெண்ட் குறிப்பிட்ட தரம் உடையதாக இருக்க வேண்டும். அதையும் தகுந்தபடி பக்குவப்படுத்தி உபயோகப்படுத்த வேண்டும். ஆகவே அதற்காக நங்கல் நகரில் ஒரு சிமெண்ட் ஆராய்ச்சி சாலை நிறுவியிருக்கிறார்கள். அந்த ஆராய்ச்சி சாலையில் ஆராய்ச்சிகள் எல்லாம் முடிந்து விட்டன. வேலையும் ஆரம்பமாகி விட்டது.

நங்கல் நகரில் உள்ள சாமான்கள் சேகரித்து வைத்திருக்கும் பிரம்மாண்டமான பண்டகசாலை, தொழிற்சாலை, ஆராய்ச்சி சாலை ஆகியவைகளை ஒவ்வொன்றாகப் பார்க்கலாம். பக்ரா அணையைப் பார்த்து அனுபவிப்பதற்கு முன்னால் பார்த்துத் தெரிந்துகொள்ள வேண்டிய மிக முக்கியமான இடங்கள்.



## பக்ரா அணை பண்டகசாலை

ஆகா! அப்பண்டகசாலையைப் பார்க்கப் பார்க்க எனக்குத் தலையைச் சுற்ற ஆரம்பித்து விட்டது. எவ்வளவு நீளம்! எவ்வளவு அகலம்! இத்தனை பெரிய பண்டகசாலை திடீர் என்று ஏற்படுத்திவிட முடியுமா! எத்தனை ஆண்டுகள் இந்தப் பண்டகசாலையையே கட்டியிருக்க வேண்டும்! இரண்டு ஆண்டுகளுக்குள் கட்டி விட்டதாகச்சொல்லுகிறார்கள். ஆனால் அதில்தான் எத்தனை விதமான சாமான்கள். பக்ரா அணை சம்பந்தப்பட்ட எல்லாமே உலக அதிசயம்தான். பக்ரா அணைதான் பெரிதென்பதல்ல! இந்தப் பண்டகசாலையும் மிகப் பெரியதுதான். இதில் குவித்து வைத்திருக்கும் சாமான்களும் கணக்கற்றவைதான்.



இந்தப் பண்டகசாலைக்குள் சென்றதும், "இதில் எவ்வளவு ரூபாய் மதிப்புள்ள சாமான்கள் இருக்கின்றன!" என்று கேட்டார் ஒரு நிருபர்.

"ஐந்து கோடி ரூபாய் மதிப்புள்ள சாமான்கள் இருக்கின்றன!" என்று பதில் வந்தது.

"ஐந்து கோடி ரூபாய் மதிப்புள்ள சாமான்கள்தானா!" என்று உதட்டைப் பிதுக்கினார்.

"ஐந்து கோடி ரூபாய் மதிப்புள்ள பொருள்கள் இந்தப் பண்டகசாலையில் நிலையாக இருக்கின்றன. ஆனால் தினம்ஒன்றுக்கு ஒரு லட்சம் ரூபாய் மதிப்புள்ள சாமான்கள் பண்டகசாலைக்கு வருகின்றன. அதேபோல ஒரு லட்சம் ரூபாய் மதிப்புள்ள சாமான்கள் பண்டகசாலையை விட்டுத் தினம் தினம் வெளியே சென்று கொண்டிருக்கின்றன" என்றார் பண்டகசாலையின் அதிகாரி.

"எத்தனை விதமான சாமான்கள் இங்கு இருக்கின்றன!"

"ஒரு லட்சம் விதமான சாமான்கள்."

"ஒரு லட்சம்விதமான சாமான்களா!"

"ஆமாம்."

"அவைகளை எல்லாம் எப்படி அடுக்கி வைத்துக் கொள்கிறீர்கள்! எந்தெந்தச் சாமான் எவ்வளவு இருக்கிறது என்பதை எப்படிக் கண்டு பிடிப்பீர்கள்!"

"ஒரு லட்சம் சாமான்களுக்கும் ஒழுங்காகக் கணக்கு இருக்கின்றன. என்னென்ன சாமான் எவ்வளவு இருக்கிறது! எங்கு இருக்கிறது! என்பதைச் சில நிமிஷங்களுக்குள்ளாகவே சொல்லிவிட முடியும்!"

"உண்மையாகவா!"

"உண்மையாகத்தான்."

இந்தச் சமயத்தில் அங்கிருந்த ஏதோ ஒரு திருகாணியைக் காண்பித்து "இது போன்ற திருகாணி ஒன்று உடனே வேண்டும். அது எவ்வளவு இருக்கிறது என்பதற்கும் கணக்கு வேண்டும்" என்று சற்று அதிகாரமாகக் கேட்டார் ஒரு தென்னிந்திய நிருபர்.

"ஒன்பது திருகாணிகள் 'ஸ்டாக்'கில் இருக்கின்றன. இதோ அந்தத் திருகாணிகள்" என்று அந்தத் திருகாணிகளைக் கையுடன் கொண்டு வந்து காண்பித்தார், அந்தப் பண்டகசாலையின் அதிகாரி. எல்லாம் மூன்று நிமிஷ நேரத்துக்குள்தான்.

ஒரு லட்சம் சாமான்கள் சேகரித்து வைத்திருக்கும் இடத்தில் ஒரு சாமானை மூன்று நிமிஷங்களுக்குள் தேடி எடுத்ததைவிட, அது எத்தனை இருக்கிறது என்ற கணக்கையும் அவர் சொல்லக் கேட்டதும் நான் பிரமித்துப் போய் விட்டேன்.

"இதை இவ்வளவு சுலபமாக எப்படிக் கண்டு பிடித்து எடுத்தீர்கள்! எத்தனை இருக்கிறது என்று எப்படிச் சரியாகக் கணக்குச் சொன்னீர்கள்!" என்று வியப்போடு கேட்டேன்.

"பின் கார்டு முறையில் கணக்கு வைத்திருக்கிறோம். அதனால்தான் இவ்வளவு சுலபமாகக் கண்டு பிடிக்க முடிகிறது" என்றார்.

பின் கார்டு கணக்கு முறை அதிசயமானது. எல்லாம் இயந்திரமே செய்து முடித்து விடுகிறது. எந்தச் சாமான் வேண்டுமோ அந்தச் சாமானின் எழுத்துக்களுக்கு ஏதோ ஒரு எண் வைத்திருக்கிறார்கள். அந்த எண்ணைக் கொண்டு இயந்திரத்தில் ஏதோ செய்கிறார்கள். அடுத்த கணம் ஒரு கார்டு வருகிறது. அதில் அந்தச் சாமான் இருக்கும் இடம், அது எவ்வளவு இருக்கிறது என்ற கணக்கு எல்லாம் இருக்கிறது. இப்படி ஒழுங்கு செய்து கொள்ளாமல் ஒரு லட்சம் விதம் விதமான சாமான்களை ஒரு இடத்தில் குவித்து வைத்து விட்டு அணைகட்ட ஆரம்பித்தால் சாமான்களைத் தேடிக் கண்டு பிடிப்பதிலேயே காலம் கடந்து போகும். அணை கட்டி முடிக்க ஆயிரக் கணக்கான ஆண்டுகள் ஆகிவிடாதா! சாமான்கள் சேகரித்து ஒழுங்குபடுத்திக் கணக்கு வைத்திருக்கும் அதிசய முறையும் ஏதோ ஜாலவித்தையைப்போல் பிரமிப்பை ஊட்டுகிறது.

## பக்ரா தொழிற்சாலை

பண்டகசாலையிலிருந்து தொழிற்சாலைக்குச் சென்றோம். தொழிற்சாலைக்குச் செல்லும் பாதையைப் பற்றி இங்கு ஒரு வார்த்தை போட்டு வைக்கிறேன். தொழிற்சாலைக்குள் சென்றால் எல்லாம் மறந்து போய் விடும். சென்னை நகரின் முக்கியமான சாலைகளைத் தினம் பார்க்கிறேன். அச்சாலைகள், அதுவும் பூந்தமல்லி நெடுஞ்சாலை போன்ற முக்கியமான சாலைகளே குண்டும் குழியுமாக இருக்கின்றன. அதிலும் கொஞ்சம் மழை பெய்து விட்டால் போதும். காரைத் தவிர வேறு ஒன்றும் சாலையில் போக முடியாது. கார் செல்லும் வேகத்தில் இரண்டு புறமும் தண்ணீரை வாரி இறைத்துக் கொண்டு போகும். போகட்டும்!

# பாங்க் ஆப் மதுரை லிமிடெட்

ஸ்தாபிதம்: 1943] [தலைமை ஆபீஸ்: மதுரை

கிளைகள்: புதுக்கோட்டை, கோயம்புத்தூர், சேலம்

### சேவிங்ஸ் பாங்க் கணக்குகள்

சேவிங்ஸ் பாங்க் கணக்குகள் ரூ. 5ம் அதற்கு மேலும் வைத்துக் கொள்ளலாம். வருஷத்துக்கு 3% வட்டி கொடுக்கப்படுகிறது. பாங்கியிலிருந்து கொடுக்கப்படும் செக்குகள் மூலம் பணம் திரும்பப் பெற வசதி. வாரத்திற்கு அதிகபட்சம் ரூ. 1000/- பெற்றுக் கொள்ளலாம்.

பி. எஸ். விஸ்வநாதன், காரியதரிசி

---

# B. I. S. N. கம்பெனி லிமிடெட்



## S. S. ரஜூலா

**சென்னை - நாகப்பட்டினம் - பினாங்கு - சிங்கப்பூர்**

மேற்படி கப்பல் கீழ்க்கண்ட தேதி வாக்கில் புறப்படும்

| சென்னையிலிருந்து | நாகப்பட்டினத்திலிருந்து |
| --- | --- |
| 1955 நவம்பர் 20 | 1955 நவம்பர் 21 |
| 1955 டிசம்பர் 15 | 1955 டிசம்பர் 16 |
| 1956 ஜனவரி 9 | 1956 ஜனவரி 10 |

வேண்டிய அளவு "பங்க்" வசதியுள்ள டிக்கட்டுகளும், "பர்த் வசதியற்ற" டிக்கட்டுகளும், "சாப்பாட்டுடனோ" அல்லது "சாப்பாடின்றியோ" எங்கள் கம்பெனியின் ஏஜெண்டிடமிருந்து நேரடியாகப் பெற்றுக் கொள்ளலாம்.

'ரஜூலா' கப்பல் சமீபத்தில் புதுப்பிக்கப் பட்டிருக்கிறது. பங்க் வசதி பெற்றுள்ள பிரயாணிகளும் பெர்த் வசதியற்ற பிரயாணிகளும் இப்பொழுது நிறைய விளக்கு வசதிகளையும், அதிகப்படியான பங்காக்களையும், புதுக் காற்று புனலாயர்களையும், ஷவர், வாட்டர்கூலர் ஆகிய வசதிகளையும், சைவ உணவுக்காரர்களுக்குத் தனி வசதிகளுடன் கூடிய ஒரு பெரிய சாப்பாடு அறையும் பெறலாம். எல்லா பிரயாணிகளும் தமிழ் மற்றும் ஹிந்தி சினிமா படங்களையும் பார்க்கலாம்.

பினாங், போர்ட் ஸ்வெட்டன்ஹாம், சிங்கப்பூர் முதலிய இடங்களுக்கு நேரடியாக ஏற்றிச் செல்லவும் சிங்கப்பூரில் கப்பல் மாற்றி பாங்காக்கிற்கு அனுப்பவும் சரக்குகள் ஏற்றுக் கொள்ளப்படும்.

*பிரயாணிகள் மற்றும் சாமான்கள் ஏற்றுமதி விவரங்களுக்குத் தயவுசெய்து எழுதவும்*

**பின்னி & கோ., (மதராஸ்) லிமிடெட்**
**7, அரமனைக்காரத் தெரு, சென்னை-1**

**மதுரா கம்பெனி லிமிடெட்**
**முதல் லைன் பீச் ரோடு, நாகப்பட்டினம்**



# வெண்ணெய்
# நெய்

வாங்கச் சிறந்த இடம்

**திரௌபதி ஸ்டோர்ஸ்**

105, ராயப்பேட்டை
ஹைரோடு
மைலாப்பூர், மதராஸ்.
போன் : 85264
பிராஞ்சுகள் :
121, பெரிய தெரு,
திருவல்லிக்கேணி
7/23, பாண்டி பஜார்,
தி. நகர்.
கடை விலைக்கே வீட்டில்
கொண்டுவந்து சப்ளை செய்யலாம்.

EP




# ஆனந்தாஸ்
# காப்பி

பச்சையாக, வறுத்ததாக, தூளாக கிடைக்கும்.
ஆனந்தா மானுபாக்சரிங் கம்பெனி
ஸ்தாபிதம் : 1940.
தலைமை ஆபீஸ் : காரைக்குடி.
போன் : 60



பிராஞ்சுகள் :
105 ராயப்பேட்டை ஹைரோடு
மைலாப்பூர், மதராஸ்-4. போன் : 85264
51, மேலக் கோபுர வீதி
141, கீழ மாசி வீதி } மதுரை. போன் : 460
189, மெயின் ரோடு, திண்டுக்கல்.
2/24, S. N. ஹைரோடு, திருநெல்வேலி ஜங்ஷன்.
435, காந்தி ரோடு, சிவகங்கை.
பெரும்பாலான ஹோட்டல்கள், சிற்றுண்டிச்
சாலைகளுக்கு காப்பி & டீ சப்ளை செய்பவர்கள்.

EP



வாசனை திரவியங்கள் · அழகு படுத்தும் க்ரீம்
கூந்தல் தைலங்கள் இவையனைத்தும்
போஷ்வா தயாரிப்பு

# BOURJOIS

*ஈவினிங் இன் பாரிஸ்*
- வாசனைகள் (இரண்டு சைஸ்களில்)
- வானிஷிங் க்ரீம்
- கோல்ட் க்ரீம்
- ஹேர் ஆயில்
- ஹேர் க்ரீம்
- ஸாலிட் ப்ரிலியண்டைன்

*ஆஷஸ் ஆப் ரோஸஸ்*
- வாசனைகள் (இரண்டு சைஸ்களில்)
- ஹேர் ஆயில்
- ஸாலிட் ப்ரிலியண்டைன்

*லாவண்டர்*
- ஹேர் ஆயில்
- ஸாலிட் ப்ரிலியண்டைன்

பூரண விநியோகஸ்தர்கள் :
ஓரியண்டல் மெர்க்கண்டைல் ஏஜன்ஸி, 99-A, அரமனைக்காரத் தெரு, சென்னை-1

போகட்டும்! நன்றாக இறைத்துக் கொண்டு போகட்டும். நகரில் சலவைத் தொழிலாளர்களுக்கு வேலை வேண்டாமா!

கனமான பெரிய பெரிய சாமான்களைத் தாங்கிக் கொண்டு நூற்றுக் கணக்கான லாரிகளும், டிராக்டர்களும் செல்லும் அந்தத் தொழிற் சாலையின் சாலைகள், குண்டும் குழியுமில்லாமல் சுத்தமாக இருந்தன. உறுதியான காங்கிரீட் போட்டு அமைக்கப்பட்டிருந்தன. அந்த அழகான சாலையின் வழியாகச் சென்று தொழிற்சாலைக்குள் சென்றோம்.

தொழிற்சாலையின் ஒவ்வொரு பகுதியாகச் சுற்றிப் பார்த்துக் கொண்டு வந்தோம். ஒரு இடத்தில் ரப்பர் பொசுங்கும் மணம் வந்தது. அந்த இடத்துக்குச் சென்றோம்.

அணைக் கட்டு வேலையில் நூற்றுக் கணக்கான லாரிகள் ஓய்ச்சல் ஒழிவின்றி, இரவு பகலாக இருபத்து நாலு மணி நேரமும் வேலை செய்து கொண்டிருக்கின்றன. இன்னும் ரப்பர் சக்கரங்கள் போட்ட பலமாதிரி யந்திரங்கள் வேலை செய்து கொண்டிருக்கின்றன. அந்த ரப்பர் சக்கரங்கள் மலைப் பாதையிலும், கரடு முரடான காட்டு வழிகளிலும் அடிக்கடி செல்ல வேண்டியிருப்பதால் வெகு விரைவில் கெட்டு விடுகின்றன. கெட்ட ரப்பர் சக்கரங்களைப் புதிதாக மாற்றுவதாயிருந்தால் ஆயிரக் கணக்கான ரூபாய்கள் வீண் விரயமாகுமல்லவா! அதனால் அந்த மாதிரிக் கெட்டுப் போன, அதாவது தேய்ந்தோ அல்லது கூரான ஆயுதங்களால் வெட்டப்பட்டோ வீணாகிப் போன ரப்பர் சக்கரங்களைப் பழைய மாதிரி செப்பனிட்டு, முன்னையதைவிட உறுதியாகச் செய்து கொடுக்கும் பகுதியைப் பார்த்தோம். புத்தம் புது டயர்களாகச் செய்து விடும் அதிசயத்தைப் பார்த்தோம்.

ரப்பர்தான். ஆனால் அதில்தான் எத்தனை அற்புதங்கள். இரும்பைவிட உறுதியாக அல்லவா சக்கரங்கள் அமைத்து விடுகிறார்கள். எட்டடி பத்தடி உயரமுள்ள டிராக்டரின் ரப்பர் சக்கரங்களைச் செப்பனிடும் அபூர்வ வேலைகளையெல்லாம் பார்த்தோம்.

இதைத் தவிர அணைக்கு வேண்டிய மரச் சாமான்களைத் தயாரித்துக் கொடுக்கும் தச்சுத் தொழிற்சாலை ஒன்றும் இருக்கிறது.

கொல்லுப் பட்டறைதான் முக்கியமான பகுதி. இங்கு அணைக்கு வேண்டிய இரும்புச் சாமான்கள் எல்லாம் தயாராகின்றன. நூற்றுக் கணக்கான தொழிலாளர்கள் வரிசை வரிசையாக வேலை செய்து கொண்டிருக்கின்றனர். இது போன்ற இன்னொரு சிறிய தொழிற் சாலை ஒன்றும் அணை கட்டும் இடத்துக்கு வெகு சமீபத்தில் இருக்கிறது.

அங்கு சாதாரணமான வளைவு நெளிவுகளை எடுப்பது, சுமாரான பற்ற வைப்பது போன்றவைகளைச் செய்து கொள்கிறார்கள்.

இந்தத் தொழிற்சாலையில் அணை கட்டுவதற்கு வேண்டிய பல அபூர்வ சாமான்கள் தயாராகின்றன. வெளிநாட்டிலிருந்துதான் வர வேண்டும் என்று இருந்த சில விசித்திரமான சாமான்களைக் கூட இந்தத் தொழிற்சாலையில் சிறந்த முறையில் தயாரிக்கிறார்கள் என்பதை முக்கியமாகக் குறிப்பிட வேண்டும்.

## சிமெண்ட் ஆராய்ச்சி சாலை

அணை கட்டுவதற்கு முக்கியமாக உபயோகப் படுத்துவது சிமெண்ட்தான். சிமென்டின் பலத்தினால்தான் ஆயிரக்கணக்கான ஆண்டுகள் அணை இருக்க வேண்டும். ஆகையால் தோன்றிய சிமென்டை எல்லாம் உபயோகப்படுத்த முடியுமா! அதற்காக இந்தியாவில் எங்கெல்லாம் சிமெண்ட் தயாரிக்கிறார்களோ அங்கெல்லாம் இருந்து சிமெண்ட் வரவழைத்து ஆராய்ச்சி சாலையில் பரிசோதனை செய்து பார்த்து ஒரு சிமென்டைத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள். தேர்ந்தெடுத்த அந்த சிமென்டை மீண்டும் ஆராய்ச்சி செய்து அதைப் பக்குவப்படுத்திப் பலமாதிரி சோதனைகள் செய்து பார்க்கும் ஆராய்ச்சி சாலைக்குள் செல்வதற்குள் அதைப் பற்றி இன்னும் சில விவரங்களையும் தெரிந்து கொள்வோம்.

உலகில் எவ்வளவோ இடங்களில் அணை கட்டியிருக்கிறார்கள். ஆனால் பக்ராவில் அணை கட்டுவது போன்ற தொல்லையான காரியம் உலகில் எந்த இடத்திலுமே ஏற்பட்டதில்லையாம். காரணம் பக்ரா அணை கட்டும் இடத்தில் உள்ள அதிசயமான சீதோஷ்ண நிலைதான். வெளி நாடுகளில் சீதோஷ்ண நிலையில் அதிக மாறுதல் இருப்பதில்லை. குளிர் பிரதேசத்தில் ஒரே மாதிரிக் குளிராக இருக்கும். உஷ்ணப் பிரதேசத்தில் ஒரே மாதிரி உஷ்ணமாக இருக்கும். இல்லையேல் உஷ்ணமும் குளிரும் அதிகமான ஏற்றத் தாழ்வுடையதாக இருக்காது.



ஆனால் பக்ரா அணைகட்டும் இடம் புதுமையான சீதோஷ்ண நிலை உடையது. கோடையில் உஷ்ணம் என்றால் சில சமயங்களில் நூற்று இருபது டிகிரி வரையில் கூடச் சென்று விடுமாம். அதேபோலக் குளிர் காலத்தில் நாற்பது டிகிரிக்கு வந்து விடுமாம். இந்த இரண்டுவித நிலைமையையும் தாங்கக் கூடிய முறையில் சிமென்டைப் பக்குவப் படுத்த வேண்டும்.

இரண்டாவதாக அணைகட்டி முடிந்தவுடன் அணையில் தண்ணீர் தேங்கி நிற்குமல்லவா! அந்தத் தண்ணீரைத் தாங்கி நிற்கும் அணைக்குப் பலம் தருவது சிமென்டுதான். அப்படித் தாங்கி நிற்கும் அணையில் ஒவ்வொரு இடத்திலும் ஒரு குறிப்பிட்ட அளவு தண்ணீர் கனத்தைத் தாங்க வேண்டி வரும். அணையின் அடிப்பாகத்தில் எப்பொழுதும் அதிகமான தண்ணீரின் அமுக்கம் இருக்கும். மத்தியில் அதைவிடக் குறையும். மேலே இன்னும் குறையும். இந்த இடங்களுக்கு ஏற்றபடி எல்லாம் ஒவ்வொரு இடத்திலும் ஒரு மாதிரி தனிப் பக்குவத்தில் சிமெண்ட் தயார் செய்ய வேண்டும்.

இவை யெல்லாவற்றையும் விட இன்னுமொரு அதிசயம் பக்ரா அணையில் இருக்கிறது. தண்ணீர் தங்கி நிற்கும் பகுதி எப்பொழுதும் குளிர்ச்சியாக இருக்கும். அணையின் வெளிப் பக்கம் கோடைகாலத்தில் ஒரு மாதிரி சீதோஷ்ணத்தையும் குளிர் காலத்தில் ஒரு மாதிரி சீதோஷ்ணத்தையும் தாங்கவேண்டி யிருக்கும். இவ்வாறு பலதரப்பட்ட சீதோஷ்ண நிலைமைகளுக்கும் தாக்குப் பிடிக்கும் வண்ணம் சிமென்டைத் தரம் பார்த்துப் பிரித்துப் பக்குவப் படுத்தும் ஆராய்ச்சிதான் இந்த சிமென்ட் ஆராய்ச்சி சாலையில் நடைபெறுகிறது.

**ப**க்ரா அணையில் ஏழு மாதிரி மணலில் சிமென்டைக் கலந்து நாற்பது டிகிரி குளிர்ச்சியுள்ள 'ஐஸ் தண்ணீரில்' சேர்த்துக் குழைத்து அணையில் கொட்டிக் கட்டப் போகிறார்கள். அணையில் அடி பாகத்தில் ஒருமாதிரி சிமென்ட் கலவை. மத்தியபாகத்தில் ஒருமாதிரி சிமென்ட் கலவை. மேல் பாகத்தில் ஒருமாதிரி சிமென்ட் கலவை. இந்த விதமான கலவையிலேதான் அணை நீண்ட நாளைக்கு உறுதியாக இருக்கும் ரகசியமே இருக்கிறதாம்.

இவ்வாராய்ச்சிசாலையில் பலமாதிரி சிமென்ட் கலவைகளில் சிமென்ட் கற்கள் செய்து, ஆயி



ரக் கணக்கான டன் நிறையுள்ள இயந்திரத்தில் வைத்து அமுக்கிச் சோதிக்கின்றார்கள். அப்படிச் சோதிக்கும்போது அந்தச் சிமென்ட் எத்தனை ஆயிரம் டன் கனத்தை எந்த மாதிரி சிமென்ட் கலவையில், எத்தனை டிகிரி குளிர்ந்த நீரில் கலந்தால் தாங்குகிறது என்பதைக் கண்டு பிடித்து முடிவு செய்திருக்கிறார்கள். எந்த முறையில் சிமென்டைப் பக்குவப் படுத்த வேண்டும் என்று பக்ரா அணை கட்டும் இன்ஜினியர்களுக்கு யோசனை கூறுகிறார்கள். இந்த ஆராய்ச்சித் தொழிற்சாலை நிபுணர்களின் யோசனைக்கு இணங்கத்தான் பக்ரா அணையில் சிமென்ட் கலவை முறையைக் கைக் கொள்ளுவார்களாம்.

இந்த மாதிரி ஆராய்ச்சி செய்வதற்கு, பக்ரா அணையின் பல மாதிரி உருவங்களை உண்டாக்கி யிருக்கிறார்கள். அப்படிச் செய்த உருவத்தை பக்ரா அணையில் எப்படி எல்லாம் சீதோஷ்ண மாறுதல் இருக்குமோ அந்த போன்று சீதோஷ்ணமுள்ள செயற்கை அறை தயாரித்து அதிலே பக்குவப் படுத்திய சிமென்டைப் போட்டுப் பரிசோதனை செய்கிறார்கள்.

இவ்வாறு பரிசோதிப்பதற்கு வேண்டிய இயந்திரங்கள் வேண்டுமென்று உலகில் உள்ள பல ஆராய்ச்சி ஸ்தாபனங்களுக்கு எழுதினார்களாம். அவர்களிடம் இது போன்ற இயந்திரமே இல்லை என்று பதில் வந்து விட்டதாம். இரண்டு ஸ்தாபனங்கள் மட்டும் செய்து கொடுப்பதாகவும், ஆனால் அதற்கு இரண்டு ஆண்டு காலமும் பல லட்ச ரூபாய்களும் வேண்டுமென்று சொன்னார்களாம்.

அவ்வளவு கால தாமதம் செய்ய முடியுமா? ஆகவே நமது இந்திய இன்ஜினியர்களே இந்த ஆராய்ச்சி சாலையை நிறுவி, ஆராய்ச்சி செய்வதற்கான யந்திரங்களையும் கண்டு பிடித்து அதில் வெற்றியும் பெற்று விட்டார்கள்.

இதனால் பல லட்சக்கணக்கான ரூபாய்களும் இரண்டு ஆண்டும் மீதமானதுடன், நமது நாட்டுச் சீதோஷ்ண நிலைக்கு ஏற்ப நாமே யந்திரங்களைச் செய்து கொண்டு, அதில் பல அபிவிருத்திகளையும் இப்படிப்படி செய்து கொள்ள முடிந்து விட்டது.

இதைப் பார்த்த பல அமெரிக்க இன்ஜினியர்கள் அப்படியே வியந்து போய் விட்டார்கள். அமெரிக்காவிலிருந்து பக்ரா அணை கட்டுவதற்காகவே வந்திருக்கும் இன்ஜினியர்கள் இந்தியர்களின் ஆராய்ச்சித் திறனைப் பார்த்து அப்படியே அதிசயத்தில் ஆழ்ந்து விட்டார்கள். இந்தியாவின் எதிர்காலத்துக்கு இதுபோன்ற ஆர்வம்தான் முக்கியமானது என்று ஊக்கமளித்து, உற்சாகத்துடன் கூறி இருக்கிறார்கள். இந்தமாதிரி சிமென்ட் ஆராய்ச்சி உலகத்துக்கே புதியது என்று வியந்து பாராட்டி யிருக்கிறார்கள்.

இவ்வாறு உலகம் வியக்கும் அற்புதமான சிமென்ட் ஆராய்ச்சி சாலையை இந்தியாவில் இந்தியர்களே கண்டு பிடித்து, அதில் வெற்றியும் பெற்று விட்டதைக் கேட்டு இந்திய மக்கள் எல்லோருமே பெருமைப் படலாம்.

** ** **

**உ**லகில் எத்தனையோ இடங்களில் அணை கட்டி யிருக்கிறார்கள். ஆனால் மற்ற அணைக்கும் பக்ரா அணைக்கும் ஒரு விதத்தில் பெரிய வித்தியாசம். மற்ற அணைகளில் எல்லாம் அணை கட்டிய இடத்தில் இருக்கும் மலைகள் உண்மையிலேயே மலையாக இருக்கும். அந்த மலைகளுக்கு மத்தியில் அணை கட்டிவிடுவதில் பெரிய அதிசயம் ஒன்றும் இல்லை.

பக்ரா அணைகட்டும் மலை உண்மையில் மலையில்லை. மலைபோன்ற தோற்றமுடையது. அவ்வளவுதான். அதாவது பூமி ஆராய்ச்சி நிபுணர்கள் கூறுவதுபோல இளம் பிராயத்து மலைகள். ஆகையால் அந்தமலையில் இதுபோன்ற பெரிய அணை கட்டினால் மலையே தாங்காது. இதற்காக அணையைக் கட்டாமல் நிறுத்திவிட முடியுமா? அதற்காக இளம்பிராயமான அந்த மலைக்கு விஞ்ஞான முறையில் 'ஊசி போட்டு' பலப்படுத்துகிறார்கள். அதாவது பலவீனமான மனிதனுக்கு ஊசி மூலம் உடலுக்குள் மருந்து செலுத்திப் பலப்படுத்துகிறார்களே, அவ்வாறு இந்த இளம் மலைக்கே வைத்தியம் செய்து மலையைப் பலப்படுத்துகிறார்கள்.

மலையைப் பலப்படுத்தும் அதிசயத்தையும், அந்த மலைகளுக்கு மத்தியில் மிகப் பிரம்மாண்டமான அளவில் அணைகட்டும் அற்புதத்தையும் அடுத்த இதழில் காணலாம். (தொடரும்)



# அடைமொழிகளெல்லாம் அற்றுப்போய்விட்டன

நிச்சயமாய் நாங்கள் நினைக்கிறோம், சோப்பைப் பற்றிய நல்ல விஷயங்கள் எல்லாம் சொல்லியாகி விட்டது. நாங்கள் சொல்ல வேண்டியதற்கு பாக்கி ஒன்றும் இல்லை— இருப்பினும் ஹமாம் சோப் தேர்ந்தியானது, உண்மையிலேயே நல்ல சோப் என்பதை நாங்கள் கூற முடியும். அழுக்கைப் போக்குவதில் முதன்மை பெற்றது. ஸ்நானத்திற்குப் பின் ஒரு புதிய புத்துணர்ச்சியைத் தருவது. வாசனை உள்ளதா? நறும்! இருக்கிறது. நுரை? ஏராளம். விலை? எல்லோராலும் யோசிக்காமல் வாங்க முடிவது.






[illegible] கூடிய புதுமலர்ச்சி தருவது

டாடாவின்

## ஹமாம்

டாய்லெட் சோப்

டாடா ஆயில் மில்ஸ்

இந்திய மூலதனத்துடன், இந்திய நிர்வாகத்தில், இந்தியாவிலேயே தயாரிக்கப்படுவது.

SISTA'S TOM-2-TAM.




அத்தியாயம் 6

## பிரார்த்தனை நிறைவேறியது

தமிழ் வாத்தியார் வீட்டிலிருந்து நான் திரும்பி வந்தபோது, நன்றாக இருட்டி விட்டது. வீட்டில் நிசப்தம் குடிகொண்டிருந்தது. மெதுவாகத் தலையை மட்டும் நீட்டிப் பார்த்தேன். அப்பா படுத்துக் கொண்டிருந்தார். இருளாக இருந்ததால் அவர் தூங்குகிறாரா, விழித்துக் கொண்டிருக்கிறாரா என்று தெரியவில்லை. அடிமேல் அடி வைத்துப் பூனை மாதிரி கூடத்தைக் கடந்து சமையலறைக்குள் புகுந்தேன்.

ஸ்வாமி படத்தருகில் விளக்கு ஏற்றி வைக்கப்பட்டிருந்தது. என் அன்னை கூப்பிய கரங்களுடன் அதற்கு எதிரில் உட்கார்ந்திருந்தார். அவர் கண்கள் மூடியிருந்தன. அவரைப் பார்த்ததும் என் நெஞ்சத்தில் விவரிக்க ஒண்ணாத சாந்தி நிலவியது. நானும் அவருக்கு அருகில் உட்கார்ந்து குவிந்த கரங்களுடன், "அப்பா இன்று மாதிரியே இருக்க வேண்டும், ஸ்வாமி" என்று பிரார்த்தித்தேன். என் அன்னை என்னைச் சேர்த்து அணைத்துக் கொண்டு "துரை! இன்றுதான் என் பிரார்த்தனை நிறைவேறிற்றடா கண்ணு! இனிமேல் கவலையே இல்லையடா" என்று கூறினார்.

அப்பா என்ன சொன்னாரென்று கேட்க விரும்பினேன். ஆனால் அவர் கூடத்திலிருந்தபடியால் கேட்கவில்லை.

அம்மா என்னைக் கூடத்தில் போய்ப் படுத்துக்கொண்டு தூங்கச் சொன்னாள். நான் மறுத்தேன். எனக்கு என்னமோ அவரிடம் பயம், போகவில்லை. அந்த இடத்திலேயே அம்மாவின் மடியில் தலையை வைத்துக் கொண்டு படுத்துக் கொண்டேன். அவர் என் தலையைக் கோதிக் கொண்டே உட்கார்ந்திருந்தார். அவர் மனத்தில் என்னென்ன சிந்தனைகள் எழும்பித் தணிந்தனவோ? சற்று நேரத்தில் நித்திரா தேவியின் பிடியில் சிக்கிக் கொண்டேன்.

மறுநாள் காலை நான் எழுந்தபோது அப்பாவைக் காணவில்லை. எனக்கு மறுபடியும் பயமாக இருந்தது. தயக்கத்துடன் அம்மாவிடம் சென்று, "அப்பா எங்கே?" என்று கேட்டேன்.

என் தாயார் வெகு நாட்களுக்குப் பின் வாய்விட்டுச் சிரித்தார். என் கன்னத்தில் ஒரு முத்தம் கொடுத்தார். எனக்கு ஒரே வெட்கமாகப் போய் விட்டது. அந்தமாதிரி என் அன்னை கொஞ்சி ரொம்ப நாளாகி விட்டிருந்தது. நான் பெரியவன் என்ற எண்ணம் வேறு எனக்கு அப்போது ஏற்பட்டிருந்தது. இன்னொரு சமயமாக இருந்திருந்தால் அதற்காகச் சண்டை பிடித்திருப்பேன். இன்று அவ்வளவாகப் பொருட்படுத்தவில்லை. மறுபடியும், "அப்பா எங்கே போயிருக்கிறார்?" என்று என் அன்னையிடம் கேட்டேன்.

"விடியற் காலையிலேயே வயலுக்குப் போய் விட்டார். நீ அவருக்குப் பலகாரம் கொடுத்து விட்டு வருகிறாயா?" என்று கேட்டார்.

நான் சரியென்று தலையசைத்தேன். பிறகு அவர் சுடச்சுடச் செய்து கொடுத்த இடியாப்பத்தைத் தேங்காய்ப் பாலுடன் சாப்பிட்டு விட்டு, அப்பாவுக்கு எடுத்துச் சென்றேன். மனம் திக்குத் திக்கென்று அடித்துக் கொண்டது. 'அவர் ஏதாவது கேட்டால் பேச வேண்டுமே? என்ன பேசுவது?' என்

றெல்லாம் யோசித்தவாறு சென்றேன். அவரிடம் பேசுவது என்பதை எண்ணும்போதே எனக்குக் கூச்சமாக இருந்தது. இப்படி யோசித்துக் கொண்டே குத்தகை நிலத்துக்குச் சென்று விட்டேன்.

அப்போது அறுவடை காலம். எல்லாப் பயிர்களும் கதிர்கள் முற்றிச் சாய்ந்திருந்தன. கிளிகளும், மரங் கொத்திகளும், புறாக்களும், மைனாக் குருவிகளும் கூட்டம் கூட்டமாகச் சுறுசுறுப்பாக வேலை செய்து கொண்டிருந்தன. அறுவடையாகி விட்டால் இவ்வளவு தானியம் நமக்குக் கிடைக்குமா என்ற பயத்தால் அவை அவ்வளவு வேகமாகப் பயிர்களைக் கொத்துவது போலத் தோன்றியது. சற்றுத் தூரத்திலிருக்கும் போது ஒரு பட்சி இருப்பது கூடக் கண்ணுக்குத் தெரியாது. ஒரு சிறு கல்லை விட்டெறிந்தால் உடனே நூற்றுக் கணக்கான பட்சிகள் ஆகாயத்தில் எழும்பிப் பறக்கும். நீல நிர்மலமான வானத்தில் அவை பறப்பதுதான் எத்தனை அழகு? இவைகளை வேடிக்கை பார்த்துக் கொண்டே குத்தகை நிலத்தை நெருங்கினேன்.

வயலில் நெல் அறுவடையாகிக் கொண்டிருந்தது. சிலர் அறுவடை செய்து கொண்டிருந்தனர். சிலர் போரடித்துக் கொண்டிருந்தார்கள். சில பெண்கள் நெல்லைத் தூற்றிக் கொண்டிருந்தார்கள். என்னைப் பார்த்ததும் என் தந்தை அரிவாளைக் கீழே போட்டு விட்டு வந்தார்.

நான் மௌனமாகப் பாத்திரங்களை அவரிடம் கொடுத்தேன். அங்கே இருந்த ஆலமரத்தடியில் துண்டை விரித்துக் கொண்டு உட்கார்ந்தார். அவரைப் பார்க்காமல் நான் போரடிப்பதைக் கவனித்துக் கொண்டு நின்றேன்.

"ரங்கா! உனக்குப் பள்ளிக்கூடம் திறக்க இன்னும் எத்தனை நாள் இருக்கிறது?" என்று அவரே கேட்டார்.

"இன்னும் பதினைந்து நாட்கள் இருக்கின்றன" என்றேன்.

"அப்படியானால் நீயும் தினம் காலையில் என்னோடு இங்கு வந்து விடேன். நெல் அளப்பதற்கும், மூட்டை கட்டுவதற்கும் மிகவும் சௌகரியமாக இருக்கும்" என்றார்.

அப்போது நான் நான் அவர் முகத்தைப் பார்த்தேன். எப்போதும் நான் பார்த்திருந்த முகம் தான். ஆனால் அதில் கடுமை யில்லை. நான் உடனே முகத்தைத் திருப்பிக் கொண்டேன். வாய் மாத்திரம், "வருகிறேனே" என்று முணுமுணுத்தது. அவரை எதிரிட்டுப் பார்த்தே வழக்கமில்லாத படியால் ஏதோ மாதிரி இருந்தது.

அவர் என்னிடம் பிரியமாகப் பேச விரும்பினார் போலும்!

"ஏன் ரங்கா நிற்கிறாய்? உட்காரேன்" என்றார்.

நான் அதற்கும் பதில் சொல்லாமல் உட்கார்ந்தேன்.

"இடியாப்பம் நீ சாப்பிடுகிறாயா?"

"வீட்டிலேயே சாப்பிட்டு விட்டேன்" என்று தலையைக் குனிந்து கொண்டே மெதுவாகக் கூறினேன்.

"ஏன் ரங்கா சரியாகவே பேச மாட்டேனென்கிறாய்?"

"ஒன்று மில்லையே!" என்றேன். ஆனால் கண்களில் நீர் ததும்பிற்று. ஏனென்றே புரியவில்லை.

"என் மேல் கோபமா?"

"இல்லை."

"ரங்கா! எனக்குத் தெரியும்.



உனக்கு நான் கோபித்துக் கொள்வேன் என்று பயம். அப்படித்தானே?''

நான் ஒன்றும் பதில் சொல்லவில்லை. எதையாவது சொல்லிக் கோபத்தை வரவழைத்து விடக் கூடாதே என்று நிஜமாகவே பயமாக இருந்தது.

''உனக்கு என்னைப் பிடிக்கவில்லையா?'' என்று கேட்டார்.

''பிடிக்கிறதே'' என்றேன். ஆனால் என் குரலில் உணர்ச்சியே இல்லை. பயந்து கொண்டு சொல்கிறேன் என்று அவர் நினைத்திருக்கலாம். உண்மையில் அவரை எனக்குப் பிடித்திருக்கிறதா இல்லையா என்பது எனக்கே தெரியவில்லை. நான் அதைப் பற்றிச் சிந்தனை செய்ததே கிடையாதே. அப்பா கோபக்காரர் என்பது தான் எனக்குத் தெரியும். அதற்கு மேல் நான் அவரைப் பற்றி நினைத்ததில்லை.

என் தந்தையுடன் நான் அன்றுதான் தொடர்ந்து அத்தனை வார்த்தைகள் பேசினேன். ஆகையால் தவறு செய்தவனைப் போல் நெஞ்சம் படபட வென்று அடித்துக் கொண்டது.

என் தந்தை, ''ரங்கா! எழுந்து வந்து இப்படி என் பக்கத்தில் உட்கார்ந்து கொள்'' என்றார்.

எனக்குப் பயமாகவும், சங்கோஜமாகவும் இருந்தது. ஆயினும் அவர் சொன்னதைத் தட்ட விருப்பமில்லை. தயக்கத்துடன் எழுந்து அவர் பக்கத்தில் சென்று உட்கார்ந்தேன். 'ஐயோ! முகம் அசடு வழிகிறது போலிருக்கிறதே' என்று வேறு தோன்றி என்னை ரொம்பச் சங்கடப் படுத்தியது.

அவர் அருகில் உட்கார்ந்ததும் இடது கையால் என்னை அணைத்துக் கொண்டு, ''ரங்கதுரை! நான் இனிமேல் உன்னைக் கோபித்துக் கொள்ளவே மாட்டேன்டா, கண்ணு! நீ பார்த்துக் கொண்டே இரு. அம்மாவையும் கோபித்துக் கொள்ள மாட்டேன். நீ இனிமேல் என்னிடம் பேசுகிறாயா?'' என்று கனிந்த குரலில் கேட்டார். அந்த நிமிஷத்தில் தான் என் தந்தையை நான் உண்மையில் தந்தையென்று எண்ணினேன். அதற்குப் பிறகு அவருடன் சகஜமாகப் பேசிப் பழக ஆரம்பித்தேன். அவரும் அதை விரும்பியதாகவே தோன்றிற்று.



அடிக்கடி என்னிடம் பேசிக் கொண்டு கலகலப்பாக இருந்தார். எங்கள் வீட்டில்கூட சிரிப்பொலி கேட்க ஆரம்பித்தது. எல்லோரையும் விட அதைக் கண்டு என் தமிழ் வாத்தியார்தான் ரொம்ப சந்தோஷப்பட்டார்.

வயலில் அறுவடை முடிந்தது. நான் என் தந்தைக்கு மிகவும் உதவியாக இருந்தேன். அந்த வருஷம் சுமாராக விளைந்திருந்தது.

பள்ளிக்கூடம் திறப்பதற்கு முதல் நாள் என் தந்தை எனக்கு இரண்டு புதிய சட்டைகளும், வேஷ்டிகளும் வாங்கி வந்தார். என் அன்னைக்கு ஒரு சேலையும் வாங்கிக் கொண்டு வந்தார். என் அன்னைக்கு ஆனந்தக் கண்ணீரே வந்து விட்டது. நானும் ரொம்ப மகிழ்ச்சி அடைந்தேன். பள்ளிக்கூடத்துக்கு நல்ல துணிகள் அணிந்து செல்ல ஆசைப்பட்டது என் மனம்.

பள்ளிக்கூடம் திறந்து ஒரு வாரம் ஆயிற்று. என் தந்தையே முன் வந்து எனக்குப் புத்தகங்கள் வாங்கிக் கொடுத்தார். பள்ளிக்கூடத்தில் எனக்கு உபகார சம்பளம் கிடைத்திருந்தபடியால் புத்தகம் மட்டும் தான் வாங்க வேண்டியிருந்தது. எனக்கு ஒரே ஆனந்தம். புத்தகங்களைத் தொட்டுப் பார்ப்பதும், அட்டை போடுவதும், பிரித்துப் பார்ப்பதுமாக நேரம் கழித்தேன்.

என் தந்தை வீட்டை விட்டு அதிகமாய் வெளியில் செல்வதில்லை. சென்றாலும் குத்தகை நிலங்களுக்குப் போய் விட்டு நேரே வீடு திரும்பி விடுவார்.

அல்லிக் குளத்தில் நடந்த கோயில் உற்சவத்தில் கூட அவர் உற்சாகமாகக் கலந்து கொண்டார். அவருடைய நடையுடை பாவனைகளின் மாறுதலைக் கண்டு அல்லிக் குளமே வியந்தது.

யார் செய்த தீவினையோ? என் தந்தை, என்னிடம் திடீரென்று சோனை மழையைப் போல் அன்பைப் பொழிந்தவர், ஒரு நாள் போலீஸாரிடம் சிறைப்பட நேர்ந்தது.

## அத்தியாயம் 7

# எதிர்பாராத செய்தி

அறுவடையாகி நெல் மூட்டைகள் வீட்டுக்கு வந்து விட்டன. விற்கக் கூடியவற்றை விற்று விட்டார் என் தந்தை. சில நாட்கள் நிம்மதியாக இருந்தவர் ஒருநாள் மாலை கவலையுடன் காணப்பட்டார். நான் பாடம் படித்துக் கொண்டிருந்தேன்.

அப்போது என் அன்னை அங்குவந்து, "ஏன் கவலையாக இருக்கிறீர்கள்?" என்று கேட்டார்.

என்னால் மேலே படிக்க முடியவில்லை.

அப்பா, "குத்தகைப் பணம் செலுத்த வேண்டுமே. மிராசுதார் கடிதம் எழுதியிருக்கிறார். உடனே என்னைப் பணத்துடன் வரச் சொல்லி யிருக்கிறார்" என்று கூறினார்.

"எவ்வளவு கொடுக்க வேண்டும்?"

"நிறையக் கொடுக்க வேண்டும்!"

"தொகையைச் சொல்லுங்களேன்."

"ஐந்நூறு ரூபாய் இந்த வருஷமும், முந்நூறு ரூபாய் போன வருஷ பாக்கியும் சேர்த்து எண்ணூறு ரூபாய் கொடுக்க வேண்டும். அவ்வளவு ரூபாய்க்கு நாம் எங்கே போவது?"

"இவ்வளவு செலவு இருக்கும்போதா புதுத்துணிகள் வாங்கினீர்கள்?"

"அதனால்தான் குறைந்து விட்டதாக்கும். அது இருபத்தைந்து ரூபாய் கூட ஆகவில்லையே!"

"இப்போது எவ்வளவு இருக்கிறது?"

"நெல் விற்று வந்த பணம் நானூறு ரூபாய்தான் இருக்கிறது. இதோ பாக்கியிருப்பதையும் விற்றால் இன்னும் நாற்றைம்பது ரூபாய் வரலாம்."

"இதையும் சீக்கிரமாக விற்று விட்டு, உடனே கொண்டு போய் மிராசுதாரிடம் கொடுத்து விட்டு வாருங்கள். மீதிப் பணம் சீக்கிரத்தில் தருவதாகச் சொல்லி விட்டு வாருங்கள்."

"இருப்பதையும் விற்றுவிட்டால் நாம் வருஷம் முழுவதும் என்ன செய்வது? விதைக்கும் நெல் வேண்டுமல்லவா? மீதி இந்த நானூறு ரூபாயைக் கொடுத்தால் இந்த வருஷம் ஒப்புக் கொள்வானா? மனுஷன் அப்படியே எகிறுமாதிரி இருப்பானே! என்னைப் பாடாய்ப்படுத்தி விடுவான். அடுத்த வருஷம் என்னிடம் குத்தகைக்கு விடமாட்டான்." என் தந்தையின் குரல் கம்மியது.

இன்றொரு ஸ்திரீயாக இருந்தால் "அதற்கு நீங்கள் தானே காரணம்?" என்று குத்திக் காட்டியிருப்பாள். என் அன்னை அவற்றை அடியோடு மறந்து விட்டதாகத் தோன்றியது.

"அதற்காக இப்போதே கவலைப்படாதீர்கள். நமக்கும் நல்ல காலம் வரும். ரங்கன் இருக்கிறான். அவனுடைய அதிர்ஷ்டத்தினால் நாமும் சந்தோஷமாக இருக்கப் போகிறோம்" என்றார்.

என் தந்தை சிரித்தார். "ஆமாம்! நான் கூட ரங்கதுரையின் அதிர்ஷ்டத்

# இரவிலும் பகலிலும் இவ்வாச்சரியப் பாதுகாப்பு சாதனத்தால்

# உங்கள் சருமத்தை அழகாயும் நேர்த்தியாகவும் வைத்துக் கொள்ளுங்கள்

செழுமையான பாண்ட்ஸ் கோல்டு க்ரீம் மற்றும் பனியைப் போன்ற பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் உங்கள் சருமத்தை பாதுகாத்து அதை மிருதுவாயும் அழகாயும் வைக்கின்றன.




மிருதுத்தன்மையும் சுத்தத்தையு மளிக்க ஒரு இராக்கால க்ரீம்

நீங்கள் படுக்கப் போகுமுன் செழுமையான பாண்ட்ஸ் கோல்டு க்ரீம் உபயோகிக்கவும். சில செகண்டுகளில் இது உங்கள் சருமத்திற்கு புத்துணர்ச்சியைக் கொடுக்கிறது—இயற்கையான எண்ணெய்சத்து அளித்து வறட்சியை அகற்றி உங்கள் சருமத்தின் யௌவனத்தையும் வனப்பையும் நீடிக்கச் செய்கிறது.

பாண்ட்ஸ் கோல்டு க்ரீம் ஒரு ஆச்சரியமான சுத்திகரிப்பு சாதனமென்பதை நினைவில் வைத்துக் கொள்ளவும். உங்கள் சருமத்தினுள்ள கண்ணுக்குத் தென்படாத துவாரங்கள் பெரிதாகாமல் தடுத்து உங்கள் சருமத்தை களங்கமற்றும் அழகுடனுமிருக்கச் செய்கிறது.









பாதுகாப்பிற்கும், சௌந்தரியத்திற்காகவும் ஒரு பகல் நேர க்ரீம்

பனியைப்போன்ற பிரகாசமான வானிஷிங் க்ரீமின் ஒரு நேர்த்தியான சன்னப்பூச்சு பகல் நேரத்தில் உங்கள் சௌந்தரியத்தை அதிகப்படுத்துகிறது. இதன் காரணமான பாதுகாப்புத்தன்மை, வனப்புள்ள சருமத்தின் வைரியான தூசி, வெயில் மற்றும் வறட்சிக் காற்று முதலியவற்றின் தாக்குதலிலிருந்து காப்பாற்றுகின்றது. அளவுக்குமிஞ்சிய எண்ணெய்சத்து சருமத்தின் துவாரத்தில் படிந்து கெடுதலைத்தரும். இவ்விதம் அதிக எண்ணெ வழியும் சருமத்திற்கு, பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் ஒரு குணமளிக்கும் ஆச்சரிய சாதனம்.

# பாண்ட்ஸ்

## கோல்டு க்ரீம்

## வானிஷிங் க்ரீம்

அழகிய மங்கையர் எங்கிருப்பவர்களாயினும் தங்கள் சௌந்தரியத்திற்கு இச்சுலபமான இருவிதப் பாதுகாப்பையே நம்பியுள்ளனர். அவர்கள் உதாரணத்தையே நீங்களும் பின்பற்றுங்கள்—இரவில் பாண்ட்ஸ் கோல்டு க்ரீமையும் பகலில் பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீமையும் உபயோகியுங்கள். உங்கள் பிரகாசமான—அழகிய வதனத்தைக்கண்டு நீங்களே குதூகலமடைவீர்கள்.

P. 1543

தைத்தான் நம்பியிருக்கிறேன்'' என்று கூறினார்.

''சரி. ஆகவேண்டிய காரியத்தைப் பாருங்கள். நாளைக்குள் இருப்பதை விற்க முயற்சி செய்யுங்கள். எப்படியாவது மிராசுதாரை இதற்குச் சம்மதிக்க வைக்க வேண்டும். இங்கே சில்லறைக் கடனாளிகளுக்கு வேறு பதில் சொல்லியாக வேண்டும்'' என்றாள் என் அன்னை.

மறு நாள் அவர் மிராசுதாரைப் பார்க்கப் புறப்பட்டுச் சென்றார். மூன்று நாட்கள் ஒன்றும் சமாசாரம் தெரியவில்லை. நான்காம் நாள் அவரிடமிருந்து கடிதம் வந்தது. திருநந்திபுரத்திலிருந்து எழுதியிருந்தார். மிராசுதார் சுகவரமூர்த்தி ரொம்பக் கண்டிப்பாக இருப்பதாகவும் பணம் முழுவதையும் கொடுத்தால் தான் வாங்கிக் கொள்வேனென்கிறார் என்றும், இன்னும் நான் கைந்து நாட்கள் இருந்து ஒருவாறு சரிப்படுத்தி விட்டு வருவதாகவும் எழுதியிருந்தார். என் அன்னைக்கு நான் அதைப் படித்துக் காட்டியதும் ரொம்பக் கவலையாகப் போய் விட்டது.

''இங்கு வேறு கடன் இருக்கிறதே. நெல் விற்றுவிட்டது என்று தெரிந்ததும் இங்குள்ளவர்கள் வேறு வந்து கேட்க ஆரம்பித்து விட்டார்கள். என்ன தான் செய்யப் போகிறேமோ தெரியவில்லை. மிராசுதார் அந்த நிலத்தை மறுபடியும் குத்தகைக்கு விடாவிட்டால் என்ன செய்வது?'' என்று புலம்பினாள்.

மறுபடியும் மூன்று நாட்கள் கழித்து ஒரு கடிதம் வந்தது. அதில் 'மிராசுதார் வழிக்கு வந்து விடுவார் போலிருக்கிறது. சீக்கிரம் வந்து விடுகிறேன்' என்று எழுதியிருந்தார்.

என் அன்னைக்குச் சற்று மனம் சமாதானமாயிற்று. ஆனாலும் அவரைப் புதிய பயம் ஒன்று பிடித்துக்கொண்டது. அதை அவர் என்னிடம் சொல்லவில்லை. ஆனால் எனக்குத் தெரிந்து போயிற்று. ஏனெனில் எனக்கும் அதே மாதிரி எண்ணங்கள் தோன்றிக் கொண்டிருந்தன.

மறுபடியும் ஒருவேளை சீட்டுப் பைத்தியம் பிடித்து விட்டதோ? அங்கு போய் யாருடைய நான்கு கனிஷளாவது மறுபடியும் ஆடத் தொடங்கி விட்டாரோ என்ற பயம்தான் அது. என் அன்னையும் இதேமாதிரி கவலைப்படுகிறாரென்று தற்செயலாகத் தெரிந்து கொண்டேன். அம்மா சுவாமியின் படத்துக்கு முன்னால் நின்று கொண்டிருந்த போது நான் உள்ளே சென்றேன்.

கண்களை மூடியவாறே, ''ஷண்முகா! உன்னைத் தவிர எனக்குக் கதியில்லை. நீதான் அவரை மறுபடியும் அந்தப் படுகுழியில் விழாமல் காப்பாற்ற வேண்டும்'' என்று சொல்லிக்கொண்டிருந்தார்.

நான் வந்த சுவடே தெரியாமல் வெளியே வந்து விட்டேன். நானும் இறைவனைப் பிரார்த்தித்தேன்.

அதன் பிறகு எனக்குப் பிறந்த நாள் வந்தது. என் அன்னை என்னை விடியற்காலை எழுப்பி எண்ணெய் தேய்த்துக் கொள்ளச் சொன்னார். என்னைக் கோவிலுக்குப் போய் விட்டு வரச் சொன்னார்.

நானும் அர்ச்சனைக்கு வேண்டிய சாமான்களுடன் கோயிலுக்குச் சென்றேன். அர்ச்சனை முடிந்தவுடன் பிள்ளையார் ஸந்நிதிக்குச் சென்று நாற்றி எட்டுத் தோப்புக்கரணம் போட்டு விட்டு, தர்மலிங்கம் வாத்தியார் வீட்டுக்குப் போனேன். அன்றும் ஏதோ காரணத்தால் விடுமுறை. வாத்தியார் ஐயாவுக்கு சாஷ்டாங்கமாய்த் தரையில் விழுந்து நமஸ்காரம் செய்தேன். பிறகு கோயில் பிரஸாதத்தைக் கொடுத்தேன். விபூதியை அவர் தம் கையால் எனக்கு நெற்றியில் இட்டு ஆசி கூறினார்.




பிறகு, ''என் ரங்கா! உன்னுடைய அப்பாவிடமிருந்து கடிதம் வந்ததா?'' என்று கேட்டார்.

# ஹாஸ்யக் களஞ்சியம்







"வந்தது ஸார்! மிராசுதார் முழுப் பணத்தையும் கொடுத்துவிட வேண்டுமென்று வம்பு செய்கிறாராம். அதனால் தான் நாளாகிறது என்று எழுதியிருக்கிறார், ஸார்!"

"அப்படியா? மறுபடியும் ஏதாவது சீட்டு கீட்டு ஆட ஆரம்பித்து விடாமல் இருக்க வேண்டும். அது பொல்லாத வழக்கம். விடுவது சுலபமான விஷயமல்ல" என்றார்.

எனக்குத் தூக்கி வாரிப்போட்டது. எல்லாருக்கும் ஒரே மாதிரி தோன்றுகிறதே என்று வியந்தேன். நான் நினைத்ததைக் கூறாமல், "அம்மா கூட நேற்று பிரார்த்தனை செய்து கொண்டிருந்தார் ஸார்" என்று கூறினேன்.

"இல்லை ரங்கா, உன் அப்பா இப்போது சீட்டாடுகிறார் என்று நான் சொல்லவில்லை. அப்படி இருக்காது என்றுதான் தோன்றுகிறது. இந்த மாதிரி மனிதர்கள் மனம் மாறி நல்வழிப் படும்பொழுது எப்போதும் ஒழுங்கான வாழ்க்கை நடத்துபவர்களை விட இன்னும் ஒரு படி மேலாகவே இருப்பார்கள். இதில் ஈடுபடாமலேயே வாழ்ந்தவர்களுக்கு, 'இதில் ஏதோ இருக்கும்' என்று தோன்றிக் கொண்டே இருக்கும். ஆடித்தான் பார்ப்போமே என்று சபலம் தட்டும். ஆனால் ஒரு தடவை அதில் அடிபட்டுக் கரையேறினவன் மறுபடியும் அதில் விழ வேண்டுமென்று நினைக்க மாட்டான். அவனுக்கு நன்றாகத் தெரியும், அதில் உள்ள அபாயங்கள். கந்தசாமி இதை நன்றாக உணர்ந்து விட்டாரென்றே நினைக்கிறேன். ஊருக்குப் போவதற்கு முன்னால் அவனைப் பார்த்துப் பேசிக் கொண்டிருந்தேன். அவனுடைய பேச்சிலிருந்து நன்றாக உள்ளம் பண்பட்டு விட்டதென்றே தோன்றியது" என்றார்.

எனக்கு அவருடைய வார்த்தைகள் இன்பமளித்தன. என் தந்தையைப் பற்றித் தமிழ் வாத்தியாருக்கு நல்ல அபிப்பிராயம் இல்லையோ என்று நான் ரொம்ப வருந்தியிருக்கிறேன். இப்போது அவர் நல்ல விதமாகச் சொன்னது ஆறுதலாக இருந்தது.










"என் பிறந்த நாளுக்காக அம்மா சர்க்கரைப் பொங்கல் செய்து சமைத்திருப்பாள், ஸார்! நான் காளமேகத்தை என்னோடு சாப்பிட அழைத்துக் கொண்டு போகிறேனே" என்றேன்.

"உள்ளே போய் அம்மாவிடம் சொல்லி விட்டு அழைத்துக் கொண்டு போ" என்றார்.

காளமேகமும் நானும் வீட்டுக்கு வந்த போது சமையல் ஆகியிருந்தது. என் அன்னை சந்தோஷத்துடன் எங்களை வரவேற்றார். அவரிடமும் கோயில் பிரஸாதங்களைக் கொடுத்து விட்டு நமஸ்கரித்தேன்.

"நல்லாப் படித்து, நிறைய மார்க்கு வாங்கி......" என்று அவர் கூறி முடிப்பதற்குள் நான் குறுக்கிட்டு, "காலேஜிலே படித்து, கலெக்டர் உத்தியோகம் பார்க்கணும்" என்று முடித்தேன்.

என் அன்னை கலகல வென்று சிரித்தார். "ஆமாண்டா, கண்ணு! மகாராஜனாய் இருக்கணும்" என்றார்.

காளமேகத்துடன் சாப்பிட உட்கார்ந்தேன். அவன், என் அன்னை உள்ளே சென்றபோது, "நீ ரொம்ப அதிர்ஷ்டக்காரன்டா" என்றான்.

"என்னடா அதிர்ஷ்டத்தைக் கண்டு விட்டாய்? சர்க்கரைப் பொங்கல் நன்றாக இருக்கிறதா?" என்றேன்.

"போடா! அது ஒன்றும் இல்லை. உங்கம்மா உன்னிடம் இவ்வளவு பிரியமாகப் பேசினாளே, அதுக்குச் சொன்னேன். எங்கம்மா கிட்டே இந்த மாதிரி குறுக்கே பேசினா விறகுக் கட்டைதான்" என்று ஆதங்கத்துடன் கூறினான்.

என் நண்பன் என் தாயாரின் குணத்தைப் போற்றுகிறான் என்ற எண்ணம் எனக்கு மகிழ்ச்சி யளித்தது. அந்த சந்தோஷத்தில் மோர் சாதம் கூட இனித்தது. இந்தப் பெருமையை அனுபவித்துக் கொண்டே ருசித்துச் சாப்பிட்டேன். சாப்பிட்டு எழுந்ததும் தபால்காரன் வந்து ஒரு கடிதத்தைக் கொடுத்து விட்டுப் போனான்.

அம்மா கடிதத்தைப் பிரித்துப் படிக்கச் சொன்னாள். உறையைக் கிழித்துக் கடிதத்தை எடுத்தேன். அது அப்பாவின் கையெழுத்து இல்லை என்று உடனே தெரிந்து விட்டது.

முதல் வரியைப் படித்ததும் எனக்குத் திகிலாக இருந்தது. சிரமப்பட்டுக் கடிதத்தை மனத்திற்குள் படித்தேன். அதிலிருந்த விஷயத்தை என்னவென்று சொல்லுவேன்? எனக்குத் தலை சுற்றியது. ஐயோ, அம்மாவுக்கு எப்படி அதைப் படித்துக் காட்டுவது?

அதற்குள் அம்மா துடித்துப் போய் விட்டாள். "படியேண்டா ரங்கா! ஏன் இப்படி மரம் மாதிரி நிக்கறே? சீக்கிரம் படியேண்டா!" என்றார். எனக்குக் கானமேகத்தின் எதிரில் படிப்பதற்கு வேறு அவமானமாக இருந்தது. இப்போதுதான் அவன் என்னைப்பார்த்து வியந்தான். அதற்குள் அவன் பரிதாபப் படும்படியான சம்பவம் நிகழ்ந்து விட்டதென்றால் எனக்குத் துயரமாக இருக்காதா!



என்ன செய்வது? கடிதத்தைப் படித்தேன். கடிதம் எப்படி எழுதியிருந்தது என்று இப்போது ஞாபகமில்லை. விஷயம் மட்டும்தான் ஞாபகமிருக்கிறது. என் தந்தை ஏதோ ஒரு காரணத்துக்காகச் சிறைக்கு அனுப்பப்பட்டிருந்தார். அதை அவருடைய வேண்டுகோளின்பேரில் யாரோ எழுதியிருந்தார்கள். காரணம் எழுதப்பட்டிருக்கவில்லை. திருநெல்வேலி சிறையில் இருப்பதாகவும் தெரிந்தது. திருநத்திபுரம் சென்றவர் எதற்காகத் திருநெல்வேலி சென்றார் என்பது ஒன்றும் விளங்கவில்லை. நான் கடிதத்தை இரைந்து படித்தவுடன் என் அன்னை மயங்கிவிழுந்து விட்டார். கானமேகம் நடுங்கிப் போய் விட்டான். நான் அவனிடம், "கானமேகம்! நீ இதை யாரிடமும் சொல்லாதே. வீட்டுக்குப் போய் விஷயத்தை அப்பாவிடம் மாத்திரம் சொல்லி அவரை இங்கே உடனே வரச் சொல்லு. நான் அம்மாவைக் கவனித்துக் கொள்கிறேன்" என்றேன்.

கானமேகம் ஓடிச் சென்றான். தமிழ் வாத்தியார் அன்று உடனே வந்து என் அன்னையைத் தேற்றியிரா விட்டால் என்ன ஆகியிருக்குமோ? அம்மா மனமுடைந்து போயிருந்தார்.

"உங்களுடைய நல்ல மனத்திற்கு ஒரு குறைவும் வராது அம்மா. நீங்கள் கொஞ்சங்கூடக் கவலைப்படாதீர்கள். நான் லீவு எடுத்துக்கொண்டு திருநெல்வேலிக்குப் போய் அவரைப் பார்த்து விட்டு வருகிறேன். என்ன செய்ய வேண்டுமோ செய்யலாம். 'லாக் அப்' பில்தான் வைத்திருப்பார்கள். நான் கவனித்துக் கொள்கிறேன் அம்மா!" என்று அன்புடன் கூறினார்.

என் அன்னை விம்மல்களுக்கு இடையே, "நீங்கள் தெய்வம் மாதிரி உதவுகிறேன் என்று வருகிறீர்கள். எனக்கு வேறு யார் இருக்கிறார்கள், உதவி செய்வதற்கு? உங்களை என் சகோதரனாக நினைத்துக் கொள்கிறேன். நீங்கள்தான் அவரை எப்படியாவது சிறையிலிருந்து விடுதலை செய்து கொண்டு வரவேண்டும். இத்தனை நாட்கள் இவ்வாறு ஆகியிருந்தால் கூட இப்படி என் நெஞ்சு துடிக்காது. அவரே மனம்மாறி, தான் ஒழுங்காக இனி வாழ்க்கை நடத்த வேண்டுமென்று நினைத்த சமயத்தில் இப்படி மண் விழுந்து விட்டதே. இப்படியும் ஒரு சோதனை உண்டா?" என்று புலம்பினார்.

அன்று எங்களுடைய கஷ்டத்துக்குக் காரணமாக இருந்த சகுவரமூர்த்தியே இன்றும் என் கஷ்டங்களுக்குக் காரணமாக இருக்கிறாரென்பது விந்தையான விஷயம் அல்லவா? எங்களைத் துன்புறுத்தியது போலவே அவர் இந்துவின் பெற்றோர்களையும், இந்துவையும் துன்புறுத்தி வந்திருக்கிறார். ஆனால் அப்போது சகுவரமூர்த்தியைப் பற்றி எனக்குத் தெரியாது. என் தந்தை சிறை சென்று பல நாட்களுக்குப் பின்னர் தமிழ் வாத்தியார் மூலம் நான் இந்த விவரங்களை யெல்லாம் அறிந்து கொண்டேன். அவர்தான் என் அன்னைக்கு ஆறுதல் சொல்லித் தேற்றினார். அதனால்தான் இன்று கூட அவரை நினைத்தால் என் மனம் நன்றியால் நிறைகிறது.

(தொடரும்)

# கவனித்துச் செல்லுங்கள்!



என்ன தைரியம்! இருள் சூழ்ந்த இரவில் பழக்கப்பட்ட சந்தாயாக இருந்தாலும் வெளிச்சமின்றி என்ன துணிச்சலுடன் செல்லுகிறீர்!



ஆனால் கவனியுங்கள்; எந்த ஒழுங்காகஇருக்கிறதா? 'எவரெடி' டார்ச்லைட்டின் வெளிச்சத்தில் பார்ப்போம்!



பார்த்தீர்களா? ஓர் பெரிய குழி! நல்லவேளை 'எவரெடி' டார்ச்லைட்டின் உதவியால் அபாயமானது தடுக்கப்பட்டது. நீங்கள் எப்பொழுதும் எந்தசந்தர்ப்பத்துக்கும் தயாராக 'எவரெடி' பாட்டரி பொருத்தப்பட்ட 'எவரெடி' டார்ச்லைட் எடுத்துச் செல்லுங்கள்

NCC 306

# EVEREADY

TRADE-MARK

"எவரெடி"

டார்ச்லைட்டுகள் & பாட்டரிகள்

நேஷனல் கார்பன் தயாரிப்புகள்.




---



## பின்னி மில் SANFORIZED REGD

# வெங்கடேஷ் வஸ்திராலயாவில் வாங்குங்கள்

ரீடெய்ல் ஷோரூம்:

போன்: 4688 | 2, தம்பு செட்டித் தெரு | மதராஸ்-1

*Retail Distributors for*
- தி பக்கிங்ஹாம் அண்டு கர்னாடிக் கம்பெனி லிமிடெட், மதராஸ்
- தி பெங்களூர் வுல்லன், காட்டன் அண்டு ஸில்க் மில்ஸ் கம்பெனி லிமிடெட், பெங்களூர்

வாடிக்கையாளர்கள் தீபாவளி ஜவுளிகள் வாங்குவதற்காக எங்கள் கடை 6-11-55 ஞாயிறன்றும் திறந்து வைக்கப்படும்

# உங்களுடைய தேக ஆரோக்கியத்தை
# ப்ளிட் எப்படி பாதுகாக்கின்றது

மலேரியா, டைபாயிட், காலரா முதலிய
பல வியாதிகளைக் கொண்டுவரும் பூச்சிகளை இது கொல்லுகிறது

ப்ளிட் தனிப்பட்ட ஒரே ஒரு பூச்சியைக் கொல்லும் மருந்தல்ல. ஆனால் பதி பல பூச்சிகளைக் கொல்லும் மருந்துகளின் ஒரு முழுச் சேர்க்கையாகும். நிரூபணமுள்ள இம்மருந்துகள் ஒன்றிற்கொன்று சேர்ந்து மற்றதையும் மிகவும் சக்தியுள்ளதாகச் செய்துகொள்ள உதவுகின்றன. இவ்வித ஒற்றுமையான செய்கையினாலேயே ப்ளிட் நீங்கள் வாங்கக் கூடிய பூச்சியைக் கொல்லும் மருந்துகளிலேயே மிகவும் சக்திவாய்ந்ததாயும், சிக்கனமானதாயும் விளங்குகிறது.

ப்ளிட் மனிதருக்கும் வீட்டில் வளர்க்கப்படும் பிராணிகளுக்கும் தீங்கு விளைவிக்காது. இன்றே ஒரு டின் வாங்குங்கள்—இது எவ்வளவு பயனுள்ளதென்பதை அறிய உங்களுக்கு ஆச்சரியமாயிருக்கும்.




**1** ஒரு இனத்தையேதான் கொல்லும் என்றில்லை—வீட்டிலுள்ள பூச்சிகளனைத்தையும் கொல்லுகிறது

பூரணப் பிரயோஜனத்தை உத்தேசித்து விஞ்ஞான முறைப்படி ப்ளிட்டில் ஆறு சக்தி வாய்ந்த பூச்சிகளைக் கொல்லும் மருந்துகள் சேர்க்கப்பட்டுள்ளன. வீட்டிலுள்ள பூச்சிகள் இதனுடைய சாவடிக்கும் தன்மையிலிருந்து தப்பவே முடியாது!

**2** நீங்கள் செலவழிக்கும் ஒவ்வொரு அணுவுக்கும் அதிகமான பூச்சிகளைக் கொல்லுகிறது

ப்ளிட் தெளிக்கப்பட்ட பாகம் பல வாரங்களுக்கு பூச்சிகளின் உயிருக்கபாயகரமாய் விளங்குகிறது. நீங்கள் ப்ளிட் உபயோகித்த பிறகு உங்களை பாதுகாத்துக் கொண்டே போகிறது. உங்கள் முழுக்குடும்பத்தின் தேக சுகத்தை ப்ளிட் கொண்டு காப்பாற்றவும்.

## சிவப்பு, வெள்ளை, நீல நிறமுடைய கொண்ட டின்னில் கிடைக்கும்

**ஸ்டாண்டர்ட்-வாக்குவம் ஆயில் கம்பெனி**

(கம்பெனி அங்கத்தினர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்டது)

V. 1729




## 17. கிடைத்துவிடுவான்!

முதலாளி மோகனரங்கம் "அது என்ன யோசனை?" என்று கேட்டதும், "இன்று இரவு நாடகம் முடிந்தவுடனே நான் திருச்சிக்குப் புறப்பட்டுப் போகிறேன். எப்படியும் ரமணியை நாளைக்குள் கண்டுபிடித்துக் கையோடு அழைத்து வந்துவிடுகிறேன்" என்று ஆர்வத்தோடு சொன்னார் மானேஜர் மதுரநாயகம்.

"நீங்களே நேரில் போனால் நல்லது தான். இருந்தாலும்......" என்று இழுத்தார் மோகனரங்கம்.

"ஏன்? நான்தான் நாளை இரவே திரும்பி வந்து விடப் போகிறேனே!"

"திருச்சியிலே அவன் எந்த இடத்தில் இருக்கிறான் என்பது நிச்சயமாகத் தெரிந்தால் அவனை அழைத்துக் கொண்டு மறு ரயிலிலேயே திரும்பி வந்து விடலாம். ஆனால், தேடிக் கண்டு பிடிக்க வல்லவா வேண்டும்? நாளையே திரும்பி வந்துவிட முடியுமா? சந்தேகம் தான். கூட இரண்டு நாட்கள் ஆனாலும் ஆகும். ஒரு வேளை ஒரு வாரம் தங்க வேண்டியது வந்தாலும் வரலாம். நீங்கள் போய் விட்டால், நாடகம் எப்படி நடக்கும் என்பதுதான் எனக்குக் கவலையாயிருக்கிறது. மேலும், சீனாவிலிருந்து வந்திருக்கும் தூது கோஷ்டியார் நமது குழந்தைகளின் நடிப்பைப் பார்ப்பதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும் என்பது என் ஆசை. நீங்கள் இல்லாது போனால், இந்த ஆசை நிறைவேறுமா? அதுதான் யோசிக்கிறேன்!"

இதைக் கேட்டதும் மதுரநாயகம் சிறிது நேரம் யோசனை செய்தார். பிறகு, "சரி, அப்படியானால் எனக்கு இன்னொரு யோசனை தோன்றுகிறது. அதன்படி செய்தால்.......!" என்றார்.

"அது என்ன யோசனை?"

"என் அத்தான் தான் திருச்சியில் இருக்கிறாரே! அவருக்கு ரமணியின் அடையாளங்களை யெல்லாம் விவரமாக எழுதித் திருச்சி முழுதும் அவனைத் தேடிப் பார்க்கச் சொன்னால்......?"

"...கிடைத்துவிடுவான் என்கிறீர்கள். சபாஷ்! இப்போதே அவருக்கு ஒரு கடிதம் போடுங்கள். கையோடு எழுதி விடுங்கள். இதனால், அவருக்குக் கொஞ்சம் செலவு வரலாம்; பரவாயில்லை. அதையும் நாமே கொடுத்துவிடலாம்."

* * *

அன்று மத்தியானம் மதுரநாயகம் சாப்பிடுவதற்காக வீட்டுக்குச் சென்றார். வீட்டுக்குள் நுழையும்போதே, "கமலா! கமலா!" என்று ஆனந்தமாகக் கூப்பிட்டுக் கொண்டே சென்றார்.

"என்ன விஷயம்! நேற்றைக்கு ஒருவர் உங்கள் நாடகத்தைப் பார்க்க வந்தார். அவர் இன்றைக்கு நேரிலே வந்து உங்களை வானளாவப் புகழ ஆரம்பித்து விட்டார். அப்படித்தானே!"

"அது கிடக்கட்டும். அதைவிட இது ரொம்பவும் முக்கியமான விஷயம். ரமணியைப் பற்றி இல்லாததையும், பொல்லாததையும் இவ்வளவு நாளாகச் சொல்லிக் கொண்டிருந்தாயே, அதெல்லாம் எவ்வளவு அநியாயம்! அவன் பட்டுத் துணியை எடுக்கவில்லை என்பது இப்போது நூற்றுக்கு நூறு உண்மையாகிவிட்டது."

"என்ன! இதெல்லாம் உண்மை தானா?" என்று சந்தேகத்துடன் கேட்டாள் கமலாதேவி.

"சத்தியம் கூடப் பண்ணச் சொல்லுவாய் போலிருக்கிறதே! இதனால்தான் நேற்று ராத்திரியே இதைப் பற்றி உன்னிடத்திலே சொல்லவில்லை. இல்லாமற் போனால், அந்தக் கோவிந்தன் சொன்னதை யெல்லாம் அப்படியே உன்னிடத்திலே வந்து சொல்லி யிருக்க மாட்டேனா?"

"கோவிந்தனா! அவன் யார்? என்ன சொன்னான்?"

"நாடகக் கொட்டகையிலே வெற்றிலை பாக்குக் கடை வைத்திருக்கிறாரே, அவருடைய மகன்தான் கோவிந்தன். அவன் நேற்று ராத்திரி நீ சாப்பிடுகிற போது வந்து கதவைத் தட்டினான். கதவைத் திறந்து 'என்ன விஷயம்?' என்று கேட்டேன். அவன் ரமணியை ஒழிக்க ஸ்ரீகண்டனும் துரைசாமியும் செய்த சூழ்ச்சியை என்னிடம் ரகசியமாகச் சொன்னான்."

"அவன் வந்ததாக என்னிடத்திலே நீங்கள் சொல்லவே இல்லையே!"

"சொல்லி என்ன பிரயோசனம்? நீ தான் பெரிய சந்தேகப் பிராணியாயிற்றே!" என்றார் மதுரநாயகம்.

"அவன் என்ன சொன்னான்? விவரமாய்ச் சொல்லுங்களேன்."



மதுரநாயகம் நடந்தது முழுவதையும் ஒன்று விடாமல் கமலா தேவியிடம் விரிவாக எடுத்துச் சொன்னார். அதோடு, "இப்போது ரமணியைப்பற்றி முதலாளி என்ன தெரியுமா சொல்லுகிறார்? அவன் எங்கிருந்தாலும் உடனே வரவழைக்க வேண்டுமாம். அவனுக்கு நிறையச் சம்பளம் கொடுத்து, உயர்ந்த உத்தியோகமும் கொடுக்க வேண்டுமாம். அப்போதுதான் அவருடைய மனம் ஆறுதல் அடையுமாம்" என்றார்.

முழுவதையும் கேட்டதும் கமலாதேவி, "அடடே! அப்படியா விஷயம்! நானும் அவசரப்பட்டு விட்டேன். யோசித்துப் பார்க்கும்போது ரமணிமேல் எந்தவிதமான குற்றமும் இல்லை என்று தெரிகிறது. அன்று நீங்கள் எவ்வளவோ சொன்னீர்கள், கேட்காமல் போனேன்...ஆமாம், இப்போது ரமணி எங்கே இருக்கிறான்? அவனைப் பற்றி ஏதாவது தகவல் தெரியுமா?" என்றாள்.

"கடவுள் அருளால் ரமணி உயிரோடு தான் இருக்கிறான். இதோ பார். அவன் தன் கைப்படக் கடிதம் எழுதியிருக்கிறான். இது திருச்சியிலிருந்து வந்திருக்கிறது என்பது மட்டும் தெரிகிறது. ஆனால், விலாசம்தான் தெரியவில்லை!" என்று கூறிக் கடிதத்தைக் கமலாதேவியிடம் கொடுத்தார் மதுரநாயகம்.

கமலாதேவி அதை வாங்கி அவசரம் அவசரமாகப் பிரித்துப் படித்தாள். படித்து முடித்ததும், "அடடே! ரமணிக்கு நாம் தைத்துக் கொடுத்த சட்டையைக் கழற்றிப் போட்டுவிட்டு, அவனுடைய பழைய சட்டையைப் போட்டுக் கொள்ளத்தான், அவன் அன்றைக்குச் சாயங்காலம் வந்திருக்கிறான். இது தெரியாமல், நான் வீணாகச் சந்தேகப்பட்டு விட்டேன். நான் இவ்வளவு கெடுதல் செய்தும் ரமணி என்னை மறக்கவில்லை. என்னைப் பற்றியும் கடிதத்தில் எழுதியிருக்கிறான். அவனுக்குத் தான் எவ்வளவு பரந்த எண்ணம்!" என்று கண் கலங்கக் கூறினாள் கமலாதேவி.

"சரி கமலா! நடந்ததை நினைத்து வருந்துவதில் என்ன பயன்! இப்போது அவனைத் தேடிக் கண்டு பிடித்தால் தான் எனக்கு நிம்மதி."

"திருச்சியில் தானே இருப்பதாகச் சொல்லுகிறீர்கள்! நாமும் திருச்சிக்குப் போய் வெகு நாளாகிறது. உங்கள் அக்காளும்தான் அடிக்கடி வரச் சொல்லிக் கடிதம் போடுகிறார்களே! இன்றைக்கே புறப்பட்டுப் போவோம். ரமணியைக் கண்டுபிடித்து அழைத்து வருவோம்...என்ன யோசிக்கிறீர்கள்?"

"எனக்கும் அந்த மாதிரி ஒரு எண்ணம் முதலிலே இருந்தது. ஆனாலும், இப்போது போக முடியாது போலிருக்கிறது. சீனாவிலிருந்து ஒரு தூது கோஷ்டி டில்லிக்கு வந்திருக்கிறது. அடுத்த வாரம் இந்தப் பட்டணத்துக்கும் வருகிறது. அந்தக் கோஷ்டியில் நடிகர்கள், நாட்டியக்காரர்கள் எல்லோரும் இருக்கிறார்களாம். அவர்களை அழைத்துக் குழந்தைகளின் நடிப்பைக் காட்ட வேண்டும் என்பது முதலாளியின் ஆசை. எனக்கும் ஆசை தான். நாடகத்தைப் பார்க்க அவர்களுக்கு எப்போது சௌகரியப்படும் என்பதை இன்னும் ஒன்றிரண்டு நாட்களுக்குள் தெரிந்து கொள்ள வேண்டும். பிறகு, அவர்களை வரவேற்க மிகப் பிரமாதமாக ஏற்பாடுகளெல்லாம் செய்ய வேண்டும். இந்தச் சமயம் நான் இல்லாத போனால் நன்றாயிருக்குமா? இது என் கடமையல்லவா?"

"அப்படியானால், அந்தத் தூது கோஷ்டி நாடகத்தைப் பார்த்து விட்டுப் போன பிறகுதான், நாம் திருச்சிக்குப் போக வேண்டுமா?"

"அதுவரை ரமணி திருச்சியிலே இருக்கிறானோ என்னவோ! இதை உத்தேசித்துத்தான் என் அத்தானுக்கு விவரமாக ஒரு கடிதம் எழுதி ரமணியைக் கண்டு பிடிக்கச் சொல்லியிருக்கிறேன். அவர் நிச்சயம் கண்டு பிடித்து விடுவார். கடவுள் கிருபையால் அவன் கிடைத்து விடுவான்."

"ஓஹோ! உங்கள் அத்தானுக்கு எழுதி விட்டீர்களா! சரி, ஒருவாரம் பொறுத்துப் பார்ப்போம்" என்று கூறினாள் கமலா தேவி. (தொடரும்)

# ஸிரோலின்

**உங்கள் இருமலின் மூலகாரணத்தை நிறுத்துகிறது . . . 'நீங்கள் இருமுவதை நிறுத்த' மட்டுமல்ல அது செய்வது**



ஸிரோலின் உங்கள் இருமலுக்குக் காரணமான அபாயகர கிருமிகளை ஒழிக்கிறது

இருமல் அபாயத்தின் அறிகுறி. உங்கள் தொண்டையிலும் சுவாசப் பைகளிலும் உள்ள மெல்லிய தசை நார்கள் வீங்கி ரணமாயிருப்பதை அது குறிக்கிறது. எனவே இருமலின் மூலகாரணத்தை வேரறுக்கக்கூடிய ஒரு மருந்துதான் உங்களுக்கு தேவை — நீங்கள் இருமுவதை மட்டும் நிறுத்தும் மருந்தினால் யாதொரு பயனுமில்லை.

ஸிரோலின் இருவழிகளில் உங்கள் இருமலின் மூலகாரணத்தை நிறுத்துகிறது. முதலாவதாக அதன் விஷநாசக குணம் நோய்க் கிருமிகளை ஒழித்து, நோய் விஷம் பரவாமல் தடுக்க உதவுகிறது. இரண்டாவதாக, மூச்சுத்திணற வைக்கும் கோழையும் கபமும் சுலபமாக வெளிவர உதவி, உங்களுக்கு அர்த்தமாக உண்மையான ஆசுவாசம் தருகிறது. ஸிரோலின் எபிட்ரின் கலப்பில்லை.







**இருமலுக்கு அபாயமற்ற குடும்ப ஔஷதம்**

ஆம், குடும்பத்தில் ஒவ்வொருவரும் எவ்வித பயமுமின்றி ஸிரோலின் உட்கொள்ளலாம் — குழந்தைகளுங்கூடத்தான். காரணம் ஸிரோலினில் மயக்கு மருந்துகளோ வேறு எவ்வகை ஹானிகாரமான மருந்துப்பொருள்களோ கிடையாது. குழந்தைகள் அதன் இனிய மணத்தை விரும்புவர். வீட்டில் எப்பொழுதும் ஒரு புட்டி ஸிரோலின் அவசியம் வைத்திருங்கள்.

**ஸிரோலின்**

'ரோச்'

ST. 1274



# நீங்களே நியாயம் சொல்லுங்கள்!

## அறிவாளிக்குகந்த ப்ளேடு எதுவென்று

ப்ளேடுகளிலிருந்து நீங்கள் எதிர்பார்ப்பது என்ன? நெடு நாட்கள் மழுங்காமல் உழைக்கும் கூர்மை. பல நாட்களுக்கு மழமழப்பான சுக க்ஷவரம்.

நீங்கள் ஸெவன் ஓ'க்ளாக் ப்ளேடுகளை உபயோகிக்காவிடில் இவைகளை எங்ஙனம் அடைவீர்கள்? அனேகமாக முடியாது.

நீங்களே நியாயம் சொல்லுங்கள். ஸெவன் ஓ'க்ளாக் ப்ளேடுகளை ஏது தயாரிப்பான வேறெந்த ப்ளேடுகளுடன் ஒப்பிட்டுப் பாருங்கள். மற்றெந்த ப்ளேடுகளினாலும் இத்தகைய மிருதுவான சுக க்ஷவரம் பெற முடியாது. மற்ற ப்ளேடுகள் அனேக நாட்களுக்கு கூர்மையாக இருந்து உழைக்காது.

உங்கள் பணத்திற்குப் பெறுமானம் கொடுப்பது ஸெவன் ஓ'க்ளாக் ப்ளேடுகளே. மட்ட ரக க்ஷவரம் பெற வேண்டிய அவசியமும் இல்லை. ஸெவன் ஓ'க்ளாக் ப்ளேடுகளே வேண்டுமெனக் கேட்டு வாங்குங்கள்.




**7 o'clock BLADES**

ஸெவன் ஓ'க்ளாக் ப்ளேடுகள்



# அதிசய மனிதர்

நா. ராமச்சந்திரன்

உலகத்தில் உள்ள தாயார்களுக்கெல்லாம் இருக்கும் ஆசைகளும் அபிலாஷைகளும் தான் ஸ்ரீதரனின் தாயான பத்மாசனி அம்மாளுக்கும் இருந்தன. ஆனால் ஸ்ரீதரனால்தான் அவள் ஆசையை நிறைவேற்ற முடியவில்லை. அதற்குக் காரணம் என்ன என்பதும் அவனுக்கு விளங்கவில்லை. அவனும் எவ்வளவோ தத்துவ ஆராய்ச்சி செய்து பார்த்து விட்டான். ஒன்றும் புலப்படுவதாகக் காணோம்!

கை நிறையப் பணமும் காசும் வாங்கி ஸ்ரீதரனுக்குச் சிறப்பாகக் கல்யாணம் செய்ய வேண்டும் என்று பத்மாசனிக்குக் கொள்ளை ஆசை. இதற்காக அவள் கடந்த ஐந்து வருடங்களாகப் படும் சிரமம் கொஞ்ச நஞ்சமன்று. 'பிள்ளையைப் பெற்றவள் எதற்காக இப்படிக் கவலைப்பட வேண்டும்!' என்று பத்மாசனியைக் கேட்காதவர்கள் இடையாது. இருந்தும் அவள் என்ன செய்வாள்! கவலைப்படுவதே அவள் ஜன்மமாகி விட்டது.

'குலம் விளங்க ஒரு பிள்ளை பிறக்க மாட்டானா!' என்று ஏங்கித் தவித்துக் கொண்டிருந்த போது செல்வமாகப் பிறந்தான் ஸ்ரீதரன். அவன் பிறந்த பிறகும் ஓயாத கவலைதான். எப்போதும் அவனுக்கு ஏதாவது நோய் நொடி வந்துகொண்டே இருக்கும். ஒவ்வொரு சமயமும் டாக்டர் தான் அவனை எமன் வாயிலிருந்து மீட்டுக் கொண்டு வர வேண்டும். இப்படிக் கவலையிலேயே வளர்ந்து வந்த பிள்ளை வயதாகியும் தாயாருக்கு நிம்மதியைக் கொடுத்தானா என்றால் "இல்லை" என்றுதான் சொல்ல வேண்டியிருக்கிறது.

பி.ஏ. பாஸ் செய்த பிறகு, நல்ல உத்தியோகத்தில் அமர்ந்து கொண்ட ஸ்ரீதரன் காலா காலத்தில் கல்யாணம் செய்து கொள்வது தானே முறை! முதன் முதலில் ஒரு நல்ல இடம் வந்தபோது அதை எப்படியோ தட்டிக் கழித்து விட்டான். பத்மாசனியும் பிள்ளை சொன்ன வார்த்தையை மீறி அப்போது ஒன்றும் செய்யவில்லை. பேசாமல் இருந்து விட்டாள். ஆனால் இதுவே ஸ்ரீதரனின் வழக்கமாகி விட்டது. 'பெண் கொடுக்கிறேன்' என்று யார் வந்தாலும், ஏதாவது தகராறு செய்து கொண்டே இருந்தான். 'இப்போது கல்யாணத்துக்கு என்ன!' என்பான் ஒரு சமயம். 'வாங்குகிற சம்பளம் எனக்கே போதவில்லை. இந்த அழகில் கல்யாணம் இல்லாமல்தான் குறையாக இருக்கிறது!' என்பான் மற்றொரு சமயம். இப்படி ஏதாவது சொல்லிக் கொண்டே வருகிற பெண் வீட்டுக்காரர்களிடம் பிடி கொடுக்காமல் பேசிக் கொண்டிருந்தான் ஸ்ரீதரன். பத்மாசனியின் கணவருக்குப் போதும் போதும் என்றாகி விட்டது. "ஸ்ரீதரா, எக்கேடாவது கெட்டுப் போடா!" என்று சொல்லி விட்டார் அவர். தாயார் என்ன செய்வாள்! 'பிள்ளை இப்படி முரண்டு பிடிக்கிறதே' என்று தெய்வங்களை எல்லாம் வேண்டிக் கொண்டாள். விடிவு ஏற்படும் வழியைத்தான் காணோம்!

ஸ்ரீரங்கத்திலிருந்து ஒரு நல்ல ஜாதகம் வந்திருந்தது. பத்மாசனிக்குத் தெரிந்தவர்கள் ஜாதகத்தைப் பற்றி உயர்வாகப் பேசினார்கள். பத்மாசனியும், ஸ்ரீதரனின் ஜாதகத்தையும் ஜோசியரிடம் காட்டிப் பொருத்தம் பார்க்கச் சொன்னாள். அவரும் 'ஜாதகங்கள் பேஷாகப் பொருந்தி யிருக்கின்றன. இந்தப் பெண்ணினால் பையனுக்கு ஒரு பெரிய யோகமே பிறக்கப் போகிறது' என்று கூறிவிட்டார். பத்மாசனி ஸ்ரீரங்கத்துப் பெண்ணை ஸ்ரீதரனுக்கு முடித்துவிட வேண்டும் என்று ஒரே அடியாக இருந்தாள். அப்போதுதான் ஸ்ரீதரன் வழக்கம்போல் முட்டுக்கட்டை போட்டான்.

**தா**யும் பிள்ளையும்தான் ஸ்ரீரங்கத்துக்குப் போய்த் திரும்பி வந்தார்கள். ஸ்ரீரங்கத்தி லிருந்துவந்த ஸ்ரீதரன் மூக்கைத் தொங்கப் போட்டுக் கொண்டிருந்தான். பத்மாசனி எவ் வளவோ பிடிவாதமாகக் கேட்டுப் பார்த்து விட்டாள். அவளுக்கு முடிவை ஸ்ரீரங்கத்தி லேயே சொல்லி, கல்யாணத்தை நிச்சயம் செய்து கொண்டு போய்விட வேண்டும் என்று ஆசை. ஆனால் ஸ்ரீதரன் இடம் கொடுத்தால் தானே! 'ஊருக்குப் போய்க் கடிதம் எழுது வோம்' என்று அலட்சியமாகச் சொல்லி விட்டு வந்து விட்டான்.

ஊர் வந்து சேர்ந்தவுடன் ஸ்ரீதரனின் வாயைப் பார்த்துப் பார்த்து ஏமாந்ததுதான் மிச்சம். அவன் ஏதாவது மனம் விட்டுப் பேசி னால்தானே! அவன் மௌனப் பிள்ளையா ராகவே இருந்தான்!

"என்னடா, ஊர் வந்து இரண்டு நாள் ஆச்சு. அவர்களுக்கு ஏதாவது கடிதம் எழுத வேண்டாமா!" என்று ஒரு நாள் பேச்சை ஆரம்பித்தாள் பத்மாசனி.

"யாருக்குக் கடிதம் எழுத வேண்டும்! நீ இப்படிப் பறக்கிறாய்..." என்றான் ஸ்ரீதரன்.

"ஸ்ரீரங்கத்துக்குத்தான் கடிதம் எழுத வேண்டும். ஒன்றும் தெரியாதவனைப் போலப் பேசுகிறாயே..." என்றாள் அவன் தாயார்.

"கடிதாசு தானே எழுதணும்; பேஷாய் எழுதேன். நான் வேண்டாம் என்று சொன் னேன்!" என்றான் ஸ்ரீதரன்.

"ரொம்ப நன்றாக இருக்கிறது. உன்னுடைய அபிப்பிராயத்தைச் சொல்லாமல் நான் எப்படி எழுதுகிறது...!"

"ஸ்ரீரங்கத்தைப் பற்றித்தானே! அந்த ஊர் மிக மிக அழகாய் இருக்கிறது. காவேரியும் கொள்ளிடமும் பிரியும் இடத்தில் ஆரம்பமாகி அந்த ஆறுகள் கூடுமிடத்தில் முடியும் அந்தப் புண்ணிய க்ஷேத்திரத்தைப் பற்றி எவ்வளவோ பாகவதோத்தமர்கள் பாடிப் பாடிப் பரவசம் அடைந்திருக்கிறார்கள்" என்று கூறிச் சிரித் தான் ஸ்ரீதரன். உண்மையில் அந்த ஊர் அவ னுக்கு ரொம்பவும் பிடித்திருந்தது.

"ஸ்ரீதரா! இதோ பார் நான் உன்னோடு விளையாட வரவில்லை. எனக்கு ஏதாவது பதில் சொல்லப் போகிறாயா, இல்லையா!" கெஞ்சாத தோஷமாகக் கேட்டாள் பத்மாசனி.

"பெண்ணுக்கு உயரம் போதவே போதாது. மரப்பாச்சி போல் குட்டையாக இருக் கிறாள்......" என்று கூறிவிட்டு முகத்தைத் திருப்பிக் கொண்டான் ஸ்ரீதரன்.

"ஸ்ரீதரா, இதுதானே உன் கடைசி முடிவு!"

"அம்மா எதற்காக இப்படி அவசரப்படு கிறாய்! பெண்ணின் அப்பா எங்கேயோ தில்லி யில் இருக்கிறார். அவருக்குப் பெண்ணின் கல் யாணத்தைப் பற்றி அக்கறையில்லை. பெண் ணின் மாமா என்னடா என்றால் இங்கு எல்லாம் செய்து விடுவதாகக் கூறுகிறார். இப்பேர்ப்பட்ட இடத்திலா சம்பந்தம் வைத் துக் கொள்வது!"

"நமக்கு ஏன் அந்தக் கவலை யெல்லாம்! நம் சம்மதத்தைச் சொல்லிவிட்டால் பாக்கியை அவர்கள் பார்த்துக் கொள்ளுகிறார்கள். நான் சொல்வதைத் தட்டாதே. அந்தப் பெண்ணி னால் உனக்கு அதிர்ஷ்டம் வர இருக்கிறது. ஜோஸ்யர் கூடச் சொன்னார். ராமமூர்த்தி சர்மா சொன்னால் அது பலிக்காமல் போகாது. நீதான் 'சரி' என்று சொல்ல வேண்டும்..." என்றாள் பத்மாசனி.

அம்மாவிடம் அநுதாபமே ஏற்பட்டது ஸ்ரீதரனுக்கு. அவனுக்குக் கல்யாணத்தில் முதலில் விருப்பமில்லை. அதுவும் ஸ்ரீரங்கத்துப் பெண்ணை அவனுக்குக் கட்டோடு பிடிக்க வில்லை. அப்படி இருக்கும்போது அவன் எப்படித் தன் சம்மதத்தைக் கொடுப்பான்! அம்மா கேட்கும் கேள்விக்குப் பதில் சொல்ல முடியாமல் சும்மா நின்று கொண்டிருந்தான்.

"என்னடா வெறுமனே நின்று கொண் டிருக்கிறாய்! அவர்களுக்கு என்ன பதில் சொல்லப் போகிறாய்...!" என்று பத்மாசனி அம்மாள் நிர்ப்பந்தப் படுத்தினாள்.

"என்னைத் தொந்தரவு செய்யாதே, அம்மா!" என்று கூறிவிட்டு அவன் பதிலுக்குக் கூடக் காத்திராமல் நகர்ந்தான் ஸ்ரீதரன்.

**ஸ்ரீ**ரங்கம் சமாசாரம் 'டப்' பென்று நின்றவுடன் பத்மாசனிக்கு வாழ்க்கையிலேயே வெறுப்பு ஏற்பட்டு விட்டது. அவளுக்கென்று இருப்பது ஒரே பிள்ளை. அவனும் அவள் சொற்படி நடக்காமல் தான்தோன்றித் தன மாக இருந்தால் பத்மாசனியின் உள்ளம் எப்படித் திருப்தி யடையும்! அது சதா சஞ் சலப்பட்டுக் கொண்டிருந்தது. ஆனால் அந்தச் சஞ்சலத்தி லிருந்துதான் ஒருநாள், "இனி ஸ்ரீதரனைக் கல்யாண விஷயமாக நிர்ப்பந்தப் படுத்துவதில்லை" என்ற வைராக்யம் பிறந்தது.

தாயார் மனத்தை நோக அடித்து விட் டோமே என்ற ஏக்கம் ஸ்ரீதரனுக்கு மட்டும் இல்லாமல் இருந்ததா! ஆனால் அவன் என்ன செய்வான்! அவன் நாட்டமெல்லாம் பெரிய உத்தியோகத்தைச் சம்பாதிப்பதிலேயே இருந் தது. அம்மாவின் நிர்ப்பந்தத்தின் பேரில்தான் அவன் ஸ்ரீரங்கம் போகச் சம்மதித்தான். ஸ்ரீரங்கத்தில் அவனுக்கு எல்லாம் பிடித்திருக் தது. ஆனால் பெண்ணைத்தான் பிடிக்கவில்லை. அப்படி இருக்கும்போது மனச்சாட்சிக்கு விரோதமாக அவன் எப்படி அவளைக் கல்யா ணம் செய்து கொள்ளச் சம்மதம் கொடுப் பான்! இந்தச் சின்ன விஷயம் ஏனோ அம்மா வுக்குத் தெரியவில்லை!

இப்படி நாட்கள் போய்க் கொண்டிருந்த போதுதான் ஸ்ரீதரன் உத்தியோக விஷயத் தில் ஒரு மாறுதல் ஏற்பட்டது.

ஸ்ரீதரன், பம்பாயிலுள்ள ஒரு பெரிய கம்பெனிக்கு மனுப் போட்டிருந்தான். மனு அனுப்பும்போது உத்தியோகம் கிடைக்கும் என்று அவன் கொஞ்சமும் நினைக்க வில்லை. நல்ல சம்பளத்தில் பெரிய பொறுப் பான உத்தியோகம் அது. அந்த உத்தியோகத் துக்காகத்தான் அவனைப் பார்த்துப் பேச, 'இண்டர்வியூ' செய்ய அழைத்திருந்தார்கள்.

கடிதம் கையில் கிடைத்தவுடன் சிட்டுக் குருவியைப்போல் பறந்தான் ஸ்ரீதரன். "அம்மா, இந்த உத்தியோகம் மட்டும் கிடைக் கட்டும். அப்புறம் நீ யாரைக் கல்யாணம் செய்து கொள் என்று சொல்லுகிறாயோ அவளையே கல்யாணம் செய்து கொள்ளு கிறேன்" என்றான் உற்சாகமாக. பத்மாசனியும்

வெகு சந்தோஷத்துடன் பிள்ளையைப் பம்பாய்க்கு அனுப்பி வைத்தான்.

பெரிய பெரிய சிபார்சுப் பத்திரங்களுடன் பம்பாயை அடைந்தான் ஸ்ரீதரன். ஆனால் பம்பாயை அடைந்தவுடன்தான் உத்தியோகம் கிடைப்பது அவ்வளவு சுலபமான காரியமல்ல என்பது அவனுக்குத் தெரிந்தது. கம்பெனி நல்ல பெரிய ஸ்தாபனம். உத்தியோகமும், நல்ல சம்பளமும் எல்லோரையும் கவருவதாக இருந்தன. எனவே அந்த ஸ்தானத்துக்கு நல்ல போட்டி யிருந்ததில் வியப்பொன்றுமில்லையல்லவா!



அக்டோபர் 20 ல் கோவை தமிழ் எழுத்தாளர் கிளைச் சங்கம் டி.கே.எஸ். சகோதரர்களுக்கு ஒரு பாராட்டு விருந்தளித்தது.

கோவை மாணவர் இலக்கிய மன்றத்தில் நடந்த இந்தப் பாராட்டு விருந்துக்குத் திரு சி.எஸ். ரத்தினசபாபதி முதலியார் தலைமை தாங்கிச் சிறப்பித்தார். தமிழ் எழுத்தாளர் சங்கத் தலைவர் திரு ம.பொ. சிவஞானம் விழாவில் கலந்துகொண்டு சொற்பொழிவாற்றினார். தமிழ் எழுத்தாளர் சங்கம் கோவைக் கிளையின் தலைவர் திரு சீனிவாசன் திரு டி.கே.எஸ். சகோதரர்களை வானளாவப் பாராட்டினார். ராஜராஜ சோழனுக்கும், ராஜேந்திரனுக்கும் வரவேற்பளிப்பது போலவே ராஜ மரியாதை செய்து டி.கே. ஷண்முகத்துக்கும், டி.கே. பகவதிக்கும் வரவேற்பளித்துப் பாராட்டினார். பாராட்டுக்கு நன்றி கூறும் திரு டி.கே. ஷண்முகத்தையும், திரு ம. பொ. சி., திரு பகவதி, திரு சிவதாணு முதலியவர்களையும் மேலே படத்தில் காணலாம்.

ஆனால் ஸ்ரீதரன் எடுத்துச் சென்ற சிபார்சுக் கடிதங்கள் பயனில்லாமல் போயின. அவனுடைய நண்பர்கள் அக் கடிதங்களைப் பார்த்துவிட்டு, "ஸ்ரீதரா, இக் கடிதங்களைக் காண்பித்தாலே உனக்கு வேலை கிடைக்காது. தெரிந்ததா!" என்று சொல்லிவிட்டார்கள். ஸ்ரீதரனுக்கு ஒன்றும் புரியவில்லை. வேலையை எப்படியும் வாங்கி விட வேண்டும் என்ற தீர்மானம்மட்டும் உள்ளத்தில் வலுவாக இருந்தது. ஆனால் அதற்கு மார்க்கம்தான் தெரியவில்லை.

**மா**துங்காவில் உள்ள சந்தான கோபால கிருஷ்ணன் சிபார்சு செய்தால், கட்டாயம் உத்தியோகம் கிடைக்கும் என்று நண்பர் ஒருவர் ஸ்ரீதரனிடம் சொன்னார். அவரும் தென்னாட்டைச் சேர்ந்தவர்தான். எனவே ஸ்ரீதரனுக்கு அவர் ஏதாவது செய்தாலும் செய்யக்கூடும் என்றும் நண்பர் சொன்னார். ஸ்ரீதரன் எப்படியாவது அவரைப் பார்த்து, அவர் சிபார்சைப் பெற்றுவிட வேண்டும். அதுதான் அவன் இருக்கும் கொஞ்ச நேரத்தில் செய்ய வேண்டிய காரியம்.

ஸ்ரீமான் சந்தான கோபால கிருஷ்ணன் ஸ்ரீதரனைக் கண்டவுடன் அன்பு ததும்பப் பேசினார். தம்மால் முடிந்ததைக் கட்டாயம் செய்வதாகச் சொல்லி அனுப்பினார்.

சந்தான கோபால கிருஷ்ணன் சிபார்சு என்றால் சாமான்யமா! ஸ்ரீதரன் உத்தியோக விஷயமாக மானேஜரைச் சந்தித்தபோது அவர், "மிஸ்டர் ஸ்ரீதரன்! உங்களைப் பற்றித்தான் சந்தானகோபால கிருஷ்ணன் டெலிபோன் செய்தார். அவர் சிபார்சு செய்த பிறகு வேறு எதுவும் எங்களுக்குத் தேவை இல்லை. நீங்கள் அடுத்த மாதம் வந்து வேலையை ஒப்புக் கொள்ளலாம். சம்பளமும் அவர் சிபார்சை முன்னிட்டு எண்ணூறு ரூபாயாக உயர்த்தியிருக்கிறோம். உங்களுக்கு என் வாழ்த்துக்கள்" என்று கூறிக் கைகுலுக்கினார்.

ஸ்ரீதரன் மளமள வென்று உயர்ந்து விட்டான். எதிர்பாராதது நடந்தே விட்டது. அவனால் எதையும் நம்ப முடியவில்லை. உட்கார்ந்திருந்த இடம், கம்பெனி மானேஜர் பேசியது, எல்லாம் பூலோகத்தில் தானா அல்லது சுவர்க்கலோகத்திலா என்பது பற்றித் தெரியவே அவனுக்கு வெகு நேரம் பிடித்தது.

கம்பெனியை விட்டவுடன் நேராகச் சந்தான கோபாலகிருஷ்ணனின் பங்களாவை நோக்கி டாக்ஸியில் பறந்தான் ஸ்ரீதரன். பங்களாவில் சந்தான கோபால கிருஷ்ணன் இல்லை. ஆபீஸிலிருந்து இன்னும் வரவில்லை என்று வேலைக்காரன் சொன்னான். 'அவர் வரும்வரை காத்திருப்போம்' என்று ஹாலில் இருந்த நாற்காலியில் அமர்ந்து கொண்டான் ஸ்ரீதரன்.

சிறிது நேரம் கழிந்த பிறகு மெல்லிய சங்கீத நாதம் காற்றில் மிதந்து வந்தது. சிறிது சிறிதாக நாதத்தின் ஒலி பெருகிக் கொண்டே வந்தது. ஸ்ரீதரன் ஒலி வந்த திக்கை நோக்கிப் பார்வையைச் செலுத்தினான்.

என்ன ஆச்சரியம்! அவன் கண்களை அவனாலேயே நம்ப முடியவில்லை. ஒரு யுவதி பட்டுத் துணிக்குப் பூ தைத்துக்கொண்டு மெதுவாகப் பாடிய வண்ணம் மாடியிலிருந்து கீழே இறங்கி வந்து கொண்டிருந்தாள். ஸ்ரீதரன் கண்களைக் கசக்கிக் கொண்டு அவளை ஏறிட்டுப் பார்த்தான். அவன் கண்கள் அவனை ஏமாற்றுகிறதா...! இல்லவே இல்லை. அவள்... அவள்... வேறு யாருமில்லை......ஸ்ரீரங்கத்தில் எந்தப்

பெண்ணை அவன் நேரில் பார்த்தானே, அவளே தான்...அன்ன நடைபோட்டு ஒயிலாக நடந்து வந்து கொண்டிருந்தாள்.

'ஸ்ரீரங்கத்தில் இருந்தவள், இங்கு எப்படி வந்தாள்!' என்று ஸ்ரீதரன் யோசனையில் ஆழ்வதற்குள் இன்னொரு ஆச்சர்யம் அவனுக்குக் காத்துக் கிடந்தது.

"அப்பா வர நேரமாகுமா, குழந்தை! யாரோ வந்து காத்துக்கொண் டிருக்கிறாங்க" என்றான் வேலைக்காரன். "யாரது!..." என்று கேட்ட வண்ணம் ஸ்ரீமதி ஹாலில் உட்கார்ந்த ஸ்ரீதரனைக் கண்டு திடுக்கிட்டாள். வெட்கம் பிடுங்கித் தின்ன உள்ளே விர் என்று சென்று விட்டாள்.

ஸ்ரீதரன் கல்லாய்ச் சமைந்து போனான். ஸ்ரீரங்கத்துப் பெண்ணின் தகப்பனார் தான் இந்தச் சந்தான கோபால கிருஷ்ணன் என்பது தெரிந்தபோது அவன் உள்ளத்தை யாரோ சக்கையாய்ப் பிழிவதைப்போலிருந்தது. "ஆகா! எப்பேர்ப்பட்ட உத்தமரின் பெண் இவள். எவ்வளவு துச்சமாக எண்ணி விட்டோம்!" என்பதை நினைக்கும்போது யாரோ தன்னை வாணலியில் இட்டு வறுப்பதைப் போலிருந்தது. நல்ல வேலை எக்கச்சக்கமாகக் கடிதம் எழுதாமல் இருந்தோமே என்று தன்னையே சாந்தப்படுத்திக் கொண்டு சந்தானகோபால கிருஷ்ணன் வரவை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தான்.

வாசலில் கார் வந்து நின்றது. சந்தான கோபாலகிருஷ்ணன் மிடுக்காக உள்ளே நடந்து வந்தார். ஸ்ரீதரன் உட்கார்ந் திருப்பதைக் கண்டு, "என்னப்பா, எப்போது வந்தாய்!" என்று முகமலர்ச்சியோடு கேட்டார்.

ஸ்ரீதரன் எழுந்து நின்று கொண்டான். "இப்போதுதான் ஸார் வந்தேன். உங்கள் உதவிக்கு மிக்க நன்றி, ஸார். நீங்கள் செய்த சிபார்சு காரணமாகத்தான் எனக்கு வேலை கிடைத்தது!" என்றான் நன்றியறிதலோடு.

இரண்டு டம்ளரில் காப்பி கொண்டு வந்தாள் சந்தான கோபாலகிருஷ்ணனுடைய பெண். ஸ்ரீரங்கத்தில் அவள் ஸ்ரீதரனுக்கு இப்படித்தான் காப்பி கொண்டு வைத்தாள். அப்போது அவள் அவனுக்கு வேம்பாக இருந்தாள். இன்று......இன்று அந்த வேம்பு எப்படியோ இனிக்கிறது.

"உட்கார், ஸ்ரீதரன். என் சிபார்சு ஒரு புறம் இருக்கட்டும். உன்னுடைய தகுதியும் அதற்குப் பக்கபலமாக அமைந்ததல்லவா! என்றைக்கு வேலைக்கு வரப் போகிறாய்!" என்று கேட்டார் சந்தான கோபாலகிருஷ்ணன்.

"அடுத்த மாதம் முதல் தேதி ஸார்..." என்று சொல்லித் தயங்கினான் ஸ்ரீதரன். அவனுக்கு எப்படியாவது தான் ஸ்ரீரங்கம் சென்றதும், அங்கு சந்தான கோபாலகிருஷ்ணனின் பெண்ணைப் பார்த்ததையும் சொல்லி விட வேண்டும் என்று ஆவல். இல்லா விட்டால் அந்தப் பெண் கட்டாயம் தந்தைக்குச் சொல்லி விடுவாள். அதற்குள் தானே முந்திக் கொண்டு எல்லாவற்றையும் கூறி விட்டால் சந்தான கோபாலகிருஷ்ணனுக்கு எவ்வளவு திருப்தியாக இருக்கும்! ஸ்ரீரங்கத்தில் இருக்கும்பொழுது அவள் குட்டையாக இருந்தாள். இன்று இங்கு அவள் குட்டையாக இல்லை. ஸ்ரீதரனுடைய இதயத்தை அவள் எப்படியோ கவர்ந்து விட்டாள்......அதற்குக் காரணம்...! அவனுக்கே தெரிய வில்லை!

"ஸார், ஒரு விஷயம் சொல்ல வேண்டும். நாலு மாதங்களுக்கு முன் ஸ்ரீரங்கம் சென்றிருந்தேன்......" என்று இழுத்தான் ஸ்ரீதரன்.

சந்தான கோபாலகிருஷ்ணன் அவன் பேச்சை வாங்கிக் கொண்டு, "அது எனக்கு முன்பே தெரியுமே! உனக்கு அவ்வளவாக அபிப்பிராயம் இல்லை என்றும் கேள்விப் பட்டேன். அதனால் என்ன...! ஒருவன் தாலியை இன்னொருவன் கட்ட முடியுமா, ஸ்ரீதரா!" என்றார் அநாயாசமாக.

ஸ்ரீதரனுக்குச் சொரேல் என்றது. தன் அபிப்பிராயம் தெரிந்த பிறகா இப்படி அவர் உதவி செய்திருக்கிறார்......! அதிசய மனிதர் தான். அவனுக்கு ஒன்றுமே புரியவில்லை. தலை சுற்றியது. எனினும் ஒருவாறு சமாளித்துக்கொண்டு, "அப்படி இல்லை, ஸார்! அது... நான் எதுவுமே எழுதவில்லை......" என்றான் நா தழுதழுக்க.

"ஸ்ரீதரா, எதற்காக முடிந்த விஷயத்தைப் பிரஸ்தாபிக்கிறாய்! உன் அபிப்பிராயம் அறிந்த பிறகுதான் நான் வேறு வரன் தேட ஆரம்பித்தேன். கடவுள் அருளினால் என் ஸ்ரீமதிக்கு இன்னொரு இடம் நிச்சயமாகிவிட்டது. தைப்பிறையில் கல்யாணம். நீ அவசியம் வரவேண்டும். நீ என் மகளைக் கல்யாணம் செய்து கொள்ளாத காரணத்தினால் உனக்கு நான் உதவி செய்ய வேண்டாம் என்றிருக்கிறதா! இது வேறு விஷயம், அது வேறு விஷயம். தெரிந்ததா!" என்றார் சந்தான கோபாலகிருஷ்ணன் புன்முறுவல் தவழும் முகத்தோடு.

"மனித குணத்தில் தங்கம் என்று சொல்லுகிறார்களே, அதுதான் இதுவா!" என்று எண்ணி மெய் சிலிர்த்தான் ஸ்ரீதரன்.




கணவன் தன்னைக் கடைத் தெருவுக்கு அழைத்த போது செல்லாயிக்கு ஏற்பட்ட உணர்ச்சியில் ஆனந்தமும் அதிசயமும் கலந்திருந்தன.

கெட்டியான துணியில் அகலக் கரை போட்ட தாழம்பூ வர்ணச் சேலையை இரண்டு சுற்றுப் போட்டுப் படிவாகக் கட்டிக் கொண்டிருந்தாள். அதே மாதிரித் துணியில் ஜாக்கெட். வாரி முடித்த தலை. மஞ்சள் மின்னிய மதி முகத்தில் செந்நிறக் குங்குமத் திலகம். கழுத்திலே புது மெருகு ஒளி வீசும் தாலிச் சரடு. கையிலே இரண்டொரு வளையல்கள். மூக்குக் குத்திக் கொள்வது அநாகரிகம் என்று நினைக்கும் பெண் குலத்தைத் தலை குனியச் செய்வது போலிருந்தது அவள் மூக்கில் அணிந்திருந்த பேஸரியின் ஒளி. போதும் போதாததற்குச் சிவப்புக் கல் பதித்த தோடு காதுகளில். இத்தனை அலங்காரங்களோடு புறப்பட்ட அவள், எந்தப் பட்டணத்து யுவதியின் கண்களிலாவது பட்டிருந்தால் அவர்களது எக்காளச் சிரிப்புக்கு ஆளாகியிருப்பாள். அத்தகைய அடக்கம் செறிந்த அழகு மாரிமுத்துவின் மனத்தைக் கவர்ந்ததென்னவோ உண்மை.

மயிலைக் காளை பூட்டிய வண்டியினுள் அவள் உட்கார்ந்து கொண்டதும் கோச்சுப் பெட்டியில் ஏறி அமர்ந்து, தானே வண்டியை ஓட்டத் தொடங்கினான். வண்டி புறப்படத் தொடங்கியது. மாரிமுத்துவுக்கு இந்த உலக நினைவே இல்லை. மனைவியும் தானும் ஏதோ ராஜ பவனி வருவது போன்ற உணர்வில் வண்டியைத் தட்டி விட்டான். 'ஜல் ஜல்' என்று சலங்கை ஒலியோடு வண்டியும் புறப்பட்டது.

சற்றைக் கொருதரம் மனைவியின் பக்கம் திரும்பி ஏதாவது பேச்சுக் கொடுத்துக் கொண்டே வந்தான். "இந்தா! ஏ, செல்வி! கடையிலே போயி பட்டிக்காட்டுப் பெண் மாதிரி ஒண்ணும் தெரியாமே கெக்கே பிக்கேன்னு முழிக்காதே. நாசுக்காக எல்லாம் தெரிந்தமாதிரி......"

"இந்தாங்க...இப்படி யெல்லாம் பரிகாசம் பண்றதானா இப்பவே வண்டியிலேயிருந்து குதிச்சுடுவேன்."

"பாரு...பாரு...செல்வி எது சொன்னாலும் கோவிச்சுக்கிறே! இனிமே வீட்டுக்குத் திரும்புகிற வரையில் உன் கூடப் பேசவே போகிறதில்லே...."

"பேச வேண்டாம். ஆனால் கடை வீதி இதுதான் என்பதை மட்டும் சொல்லி விட்டு..." என்று கூறித் தெருவைச் சுட்டிக் காட்டினாள்.

"உன்னோடு வம்பளந்து கொண்டே வந்ததில் நாம் இறங்க வேண்டிய கடை வந்ததுகூடத் தெரியவில்லை, பார். நல்ல சமயத்திலே குறிப்பு கொடுத்தாய்" என்று விளையாட்டும் வேடிக்கையுமாகப் பேசியபடியே வண்டியை விட்டு இறங்கினான்.

* * *

வெகு நேரம் கடையில் தேடி மாரிமுத்து வேண்டிய துணிமணிகளை எடுத்துக் கொண்டான். கடை வீதியில் வேலை முடிந்த பின் வண்டியைச் சாப்பாட்டு விடுதிப் பக்கம் நிறுத்தி, செல்வியைச் சாப்பிட அழைத்தான். அவள் வண்டியை விட்டு இறங்கவே மறுத்து விட்டாள். "வந்த வேலை முடிந்து விட்டது. வீட்டிலேயே போய்ச் சாப்பிட்டுக் கொள்ள

லாம். உங்களுக்குப் பசியாக இருந்தால் காப்பி மட்டும் சாப்பிட்டுவிட்டு வாருங்கள். வீட்டிலே சமைத்த ஆகாரம் வீணாகிவிடும்'' என்று சொல்லி விட்டாள்.

அவன் வராத போது தான் மட்டும் சென்று சாப்பிட விரும்பாமல் அவனும் வீட்டுக்குத் திரும்பி விட்டான்.

வந்த களைப்பு. பசிவேறு. பரபரப்போடு கணவனுக்கு உணவுகளைப் பரிமாறினாள். அவன் சாப்பிட்ட பின், தானும் உணவருந்தியபின் சற்று உட்காரப் போனாள்.

"செல்வி! கையோடு கையாகத் துணிமணிகளைப் பிரித்துச் சிப்பந்திகள் சரக்கு வேறாகவும் நம்முடையவைகளை வேறாகவும் வைத்து விடுவோம். மூட்டைகளை இப்படிக் கொண்டு வா'' என்றான்.

தனித் தனியே சிப்பந்திகளின் பெயர் எழுதி அவரவர்கள் துணிமணிகளின் மீது ஒட்டி வைத்தான். சிப்பந்திகள் உடையில் பட்டு வேட்டி இருப்பதைக் கண்ட செல்வி, 'என்னங்க! உங்களுக்கு எடுத்த வேட்டியைச் சிப்பந்திகள் உடையோடு கலந்து வைச்சிருக்கீங்களே'' என்று கூறி வியந்தபடியே பட்டு வேட்டியைத் தனியாகக் கையிலெடுத்துக் கொண்டாள்.

"ஒரு காலத்திலே நானும் சிப்பந்தியாக இருந்தவன் தானே? இன்று உழைப்பாலும் அதிர்ஷ்டத்தாலும் முதலாளி ஆகியிருக்கிறேன். முதலாளி ஆனதினாலேதான் செல்லாயியின் முதலாளியாகவும் ஆக முடிந்தது! அது போகட்டும். பட்டு வேட்டி எனக்கில்லை. எனக்கு எங்க மாமனாரல்லவா எடுத்துக் கொடுக்கணும்?''

"மாமனார் சீரு வரத்தானே போகுது! இருந்தாலும் நாம் எடுத்து வந்த வேஷ்டி உங்களுக்கில்லாமல் எந்த மருமகனுக்குச் சீர் வழங்க?''

"சீர் வழங்கத்தான். ஆனால் மருமகனுக்கல்ல! உன்னை என்னிடம் சேர்த்த நண்பனுக்குப் பரிசாக இந்தப் பட்டு வேஷ்டியை வழங்கப் போகிறேன்'' என்றான் மாரிமுத்து.

அவனது மன வானிலே முந்தைய சம்பவம் 'பளிச்'சென்று மின்னியது.

* * *

**பா**ல் வியாபாரி காசிலிங்கத்தைப் பற்றி அறியாத ஓட்டல்காரர்கள் அந்த ஊரில் இல்லை என்றே சொல்லலாம். பாதி நகரமாகிவிட்டிருந்த அந்த ஊருக்குப் பக்கத்துக் கிராமத்திலிருந்து பால் எடுத்து வந்து வியாபாரம் செய்து வந்தான் காசிலிங்கம். கிராமத்தில் ரூபாய்க்கு இரண்டு படியாக வாங்கி வந்து தங்களுக்கு ஒன்றரைப்படியாக ஊற்றுவதாகத்தான் கடைக்காரர்கள் நம்பினார்கள். காசிலிங்கமும் ஆரம்பத்தில் அப்படித்தான் செய்து வந்தான். நாள் போகப் போக ரூபாய்க்கு அரைப்படி லாபம் மட்டும் கிடைத்தது. அவன் மனத்துக்குத் திருப்தி அளிக்கவில்லை. கொஞ்சம் தண்ணீரைக் கலந்து பார்த்தான். பொருளாசை கொண்ட மனம் அதிலும் திருப்தியடையாமல் போகவே, பாலைக் கொண்டு வந்து சுண்டக் காய்ச்சி, பால் ஆடையை எடுத்துக் கொண்டு, பாலை ஆற வைத்துக் கடைகளுக்குக் கொடுத்தான். ஆடையை வெண்ணெயாக்கி வியாபாரம் செய்ததில் இரு மடங்கு லாபம் கிடைக்கத் தொடங்கவே, சுறுசுறுப்படைந்தான் காசி.

வியாபாரம் பெருகியது; பணமும் குவிந்தது. அவனது ஒரே மகள் செல்லாயி வளர்ந்து, மங்கைப் பருவமடைந்து விட்டாள். அவளுக்கு வரன் தேடும் முயற்சியைத் தொடங்கினான்.

காசி பால் வியாபாரம் தொடங்கியதிலிருந்தே "பத்ம விலாஸ்'' அவனது வாடிக்கைக் கடையாகி விட்டது. பத்ம விலாஸ் முதலாளி இறக்கும்போது அவருக்கு வேறு வாரிசு இல்லை. பல வருஷங்களாகத் தம் கடையிலேயே வேலை பார்த்து, அவர் நம்பிக்கையைப் பெரிதும் பெற்றிருந்த மாரிமுத்துவையே வாரிசாக்கி விட்டு மறைந்தார்.

அடக்கமும் நேர்மையும் நிறைந்த மாரிமுத்துவைக் குழந்தையிலிருந்தே அறிந்திருந்த காசிலிங்கம், அவனையே தன் மருமகனாக்கிக் கொள்ள மனத்துக்குள் திட்டமிட்டிருந்தான். அவனது வியாபாரத் திறன் எப்படி இருக்கிறதென ஆராய இடையே சில மாதங்கள் காத்திருந்தான்.

மாரிமுத்து முதலாளியாகிய சில மாதங்களுக்குள்ளாகவே எதிர்பார்த்ததை விடமிகுந்த திறன் அடைந்திருந்தான். முதலாளி என்னும் கர்வம் சிறிது மில்லாதபடி எந்த வேலையிலும் தானே முன்னின்று கண்காணித்து வந்தமையால் பொருளாதாரத்தில் அதிக லாபம் கிடைத்தது. கிடைத்த லாபத்தில் சிப்பந்திகளுக்கும் நேர்மையான பங்கு கொடுத்து, தொழிலாளிகளின் அன்பையும் ஆதரவையும் பெற்று விட்டான்.

அப்படிப்பட்ட யோக்கியமான பையனை வேறு யாராவது தட்டிக் கொண்டு போகுமுன் தானே முந்திக் கொள்ள வேண்டுமென்ற எண்ணத்துடன் மத்தியஸ்தர்கள் மூலம் பெண் விஷயத்தைப் பற்றி மாரிமுத்துவுக்குத் தெரியப்படுத்தியிருந்தான்.

செல்லாயி சின்னவளாக இருந்தபோது கடைக்குப் பல முறை வந்திருக்கிறாள். அப்போது மாரிமுத்து அவளைப் பார்த்திருக்கிறான். அவள்தான் தனக்கு மனைவியாகப் போகிறவள் என்று தெரிந்த பின் அவளைப் பார்க்க வேண்டுமென ஆவல். ஆனால் செல்லாயியோ பெரியவளாகிய பின் வெளியே எங்கும் செல்வதில்லை. அதனால் அவளைப் பார்க்க முடியவில்லை.

எப்படியாவது விவாகத்துக்கு முன் ஒரு தடவை பார்க்க வேண்டுமென்றிருந்த தன் எண்ணத்திற்குச் சந்தர்ப்பம் என்றும் சாக்குக் கிடைக்கும் என்று நம்பி யிருந்தான்.

அவன் எதிர்பார்த்த அந்தச் சந்தர்ப்பமும் விரைவிலேயே வந்தது.

* * *

காய்ச்சிய பாலை இறக்கித் தண்ணீர்த் தொட்டிக்குள் ஆற வைத்து விட்டுத் திரும்பியபோது, பக்கத்து வீட்டுக் கடிகாரத்தில் மணி நாலு அடித்தது. 'ஐயய்யோ! மணி நாலாயிருச்சே. இதுக்குள்ளே வாடிக்கைக்காரங்களுக் கெல்லாம் பால் போயிருக்கணுமே. மணி நாலடிச்சாச்சுன்னு வீட்டைத் தேடி ஆள் வந்து சூழ்ந்துக்கு வாங்களே. இத்தனை பாலும் எப்போ ஆறி, எப்போ கடைகளுக்கு ஊற்றுவது!' என்கிற பரபரப்பிலே பக்கத்திலே கிடந்த ஓலையை எடுத்துக் கொதித்த பால் ஆறுவதற்காக வேகமாக விசிறிக் கொண்டிருந்தாள் செல்வி.

இத்தனை நேரம் அடுப்பு முன் நின்ற வெப்பம்; நேரத்திற்குப் பால் போய்ச் சேர வேண்டுமே என்கிற பரபரப்பு-எல்லாமாய்ச் சேர்ந்து வியர்த்துக் கொட்டிக் கொண்டிருந்தது. அவள் உடம்பில் பாலுக்காக வீசிய ஓலைக் காற்றுப் படவே சற்று இதமாய் இருந்தது. 'அப்பாடா! இது என்ன பிழைப்போ! பாலைக் கறந்தோம், கடைகளுக்கு ஊத்தினோமென்றில்லாமல் எதுக்காக இத்தனை பக்குவம் செய்கிறார்களோ, அப்பனும் ஆயாவும்!' என்று தனக்குள் அலுத்துக் கொண்டவளாய் ஓலை விசிறியைப் பலமாக விசினாள்.

"யாரம்மா வீட்டிலே?" என்ற அதிகாரக் குரலைக் கேட்டுக் கதிகலங்கிய செல்வி வாசலுக்கு ஓடிவந்தாள். வாடிக்கைக்காரர் வீட்டைத் தேடி வந்து விட்டார் என்று அவள் நினைத்தது சரியே.

"யாருங்க நீங்க?" என்று நீட்டி முழங்கிக் கொண்டு, வாசலுக்கு வந்து எட்டிப் பார்த்தபோது வயதுக் காளை மாரிமுத்து வாசலில் நிற்பதைக் கண்டு துணுக்குற்றாள்.

யாரைப் பார்க்க வேண்டுமென்ற ஆவலில் சந்தர்ப்பத்தைப் பயன் படுத்திக் கொண்டு வந்தானோ அவளே எதிரே வந்த போது ஒரு கணம் பிரமித்து நின்று விட்டான். பாவாடையும் மேல் சட்டையும் பரட்டைத் தலையுமாய் நிற்கும் செல்வியைப் பார்த்திருக்கிறான். இப்போது யௌவனத்தின் படியிலே காலை வைத்து நின்ற செல்வியை—வனப்பின் போதையிலே மிதக்கும் மங்கையை, எதிரே கண்டதும் எதுவும் பேச முடியாதபடி சிலையாக நின்றதில் வியப்பில்லை. நிலைமையைச் சமாளித்துக் கொண்டு செல்வியே முதலில் பேசத் தொடங்கினாள்.




"யாருங்க நீங்க—உங்களுக்கு என்ன வேணுங்க?"

"ஏம்மா உங்கப்பாரு......எங்கே? இன்னிக்கு ஏன் மணி நாலாகியும் பால் கடைக்கு வரவில்லை? எத்தனை வாடிக்கைக்காரர்களுக்கு நான் சால்ஜாப்பு சொல்லுவது? நாலுக்குள்ளே கடைக்குள் ஒரே கூட்டமா கூடி விடுகிறது காப்பிக்கு. ராக்கி நேரத்திலே பால் வாராமே கூட்டம் கலைஞ்ச பிறகு பாலை வாங்கி நாங்க குளிக்கவா....?" என்று சற்றுப் படபடப்பாகவே பேசினான் மாரிமுத்து.

"அப்பனும் ஆத்தாவும் பக்கத்து ஊருக்கு அவசர காரியமாகப் போயிருக்காங்க. நாளைக்கு வந்து விடுவாங்க; இன்னிக்கு ஒருநாள் மட்டும் என்னை வியாபாரத்தைப் பார்த்துக்கிடச் சொல்லிவிட்டுப் போயிருக்காங்க. இப்பத்தான் காய்ச்சி இறக்கினேன். ஆறினதும் ஆள்க்காரன் கிட்டக் கொடுத்



## பூச்சி சாஸ்திர நிபுணர்கள், கொசுக்களுக்கு வைத்திருக்கும் பெயர் "அனோபீலஸ் ஸ்டீபென்ஸி லிஸ்டன்"!

கொசுவை, வேறு பெயர் கொண்டு அழைப்பதனும் அதன் உபத்திரவம் மிகுந்த தன்மை மாறி விடாது. உலகெங்கிலும் டாக்டர்களும், பூச்சி சாஸ்திர நிபுணர்களும் கிட்டத்தட்ட 1000 விதமான கொசுக்களைப் பற்றிப் பரிசீலனைகள் நடத்தியிருக்கிறார்கள். மலேரியா, பைலேரியா, டெங்கு ஜுரம், மஞ்சள் ஜுரம் முதலிய வியாதிகள் பரவுவதற்குக் காரணம் இந்த கொசுக்கள் தான்.

**எனவே, முன் கூட்டியே ஜாக்கிரதையாக இருங்கள்!**

உங்கள் அறையின் கதவையும், ஜன்னல்களையும் நன்றாகச் சாத்தி விட்டு மேஜைகள், நாற்காலிகளின் அடிப்புறம் உட்பட அறை முழுவதும் டீல்டிரின் சேர்ந்த ஷெல்டாக்ஸ் தெளியுங்கள். தெளித்து, குறைந்தது 10 நிமிஷ நேரம் வரை, அறையை அப்படியே சாத்தி வைத்திருங்கள். பிறகு, செத்து விழுந்து கிடக்கும் பூச்சிகளை யெல்லாம் பெருக்கி வெளியே தள்ளுங்கள்.

புதிய டீல்டிரின் சேர்ந்த ஷெல்டாக்ஸ், டீல்டிரின் நீண்ட நாள் உழைக்கும் சக்தியுடன், கிருமிகளை க்ஷணத்தில் ஒழிக்கும் சக்தி வாய்ந்த மருந்துச் சத்துக்களையும் சேர்த்துத் தயாரிக்கப்பட்டிருக்கிறது. எனவே, டீல்டிரின் சேர்ந்த ஷெல்டாக்ஸ், பறக்கும் பூச்சிகளை யெல்லாம் விரைவில் வீழ்த்தி ஒழித்துக் கட்டுவதுடன் சுவர்களின் மேலும், குப்பைத் தொட்டிகளுக்குள்ளும், வீட்டிலுள்ள சாமான்களின் மேலும் இதைத் தெளித்து வைத்தால், கொல்லும் சக்தி நிறைந்த இதன் திவலைகளின் மீது பட்ட மாத்திரத்தில் எல்லா விதமான பூச்சிகளும் உடனே நாசமடைகின்றன.




### டீல்டிரின் சேர்ந்த ஷெல்டாக்ஸ்

கொசுக்கள், ஈக்கள், எறும்புகள், குளவிகள், கரப்பான் பூச்சிகள், கறையான்கள், தேள்கள், உண்ணிகள், தெள்ளுப் பூச்சிகள், மூட்டைப் பூச்சிகள், வண்டுகள் முதலிய சகல விதமான பூச்சிகளையும் நிச்சயமாக நிர்மூலமாக்கும், சக்தி மிகுந்த கிருமிநாசினி.

பர்மா - ஷெல் ஸ்தாபனத்தாரால் இந்தியாவில் தயாரிக்கப்பட்டது

ASP/BS-5034

தனுப்பறேன்.....கோவிச்சுக்காதீங்க......'' என்று தட்டுத்தடுமாறிப் பேசி முடித்தான்.

"என்னது! பாலைக் காய்ச்சினுயா? எதுக்காக பின்னே பாலைக் காய்ச்சறது? பால் வந்ததும் அப்படியே கொடுத்தனுப்பினுல் நாங்க காய்ச்சிக் கொள்ளமாட்டோம்? காய்ச்சின பாலை யாரு வாங்குவார்கள்?''

"என்னங்க, தினமும் தான் காய்ச்சி, ஆற வைச்சுத்தானே கொடுக்கிறோமுங்க. இன்னிக்கு மட்டும் புதுசில்லையே!''

"என்னது? தினமும் காய்ச்சி ஆறவச்சுக் கொடுக்கிறதா? அப்படியா சங்கதி? காய்ச்சி, ஆடை எடுத்த பாலையா எங்களுக்குக் கொடுக்கிறான் காசிலிங்கம்? வரட்டும், அவனைப் பேசிக்கிறேன். நாளை முதல் பால் வேண்டாம் என்று சொல்லி விடு'' என்று கோபத்திலே பொரிந்து தள்ளி விட்டான் மாரிமுத்து.

காசிலிங்கம் ஊரிலில்லை என்பது தெரிந்தே, செல்லியைக் காண வேண்டுமென்ற ஆசையில் பால் கேட்கும் சாக்கில் அவன் வந்திருந்தான். ஆனால் இப்போது செல்லி சொன்னதைக் கேட்டதும், அவளைப் பார்ப்பதற்காகத் தான் வந்ததையோ, அடுத்த மாதம் அவளுக்கும் தனக்கும் திருமணம் நடக்கப் போவதையோ நொடிப்பொழுதில் மறந்து விட்டான். வியாபாரத்தில் மோசடி என்கிற எண்ணமே அவனைப் படபடப்புக்குள்ளாக்கியது.

ஆத்திரமாகப் பேசியவன் மேலே அங்கே நிற்க முடியாதவனைப் போல், "காசிலிங்கம் வரட்டும். அவனைச் சும்மா விட்டேனு, பார்!'' என்று உறுமிக் கொண்டே 'விர்' என்று போய் விட்டான்.

* * *

தொழில் ரகசியம் என்பது தெரியாமலே உளறிக் கொட்டிவிட்டாள் பேதைப் பெண் செல்லி. மாரிமுத்து கோபமாகப் பேசியபோதுகூடக் காரணத்தை அறிந்து கொள்ளவில்லை. "எதற்காக இந்த ஆளு இப்படித் துள்ளிக் குதிக்கிருரு. நாம் தினமும்தான் காய்ச்சிக் கொடுக்கிறோமே. இன்னிக்கு மட்டும் புதுசாகவா அப்படிச் செஞ்சோம்? நீ உடனே போயி அந்த ஆளை என்னு ஏதுன்னு கேட்டுட்டு வாப்பா!'' என்று தந்தையைத் துரிதப்படுத்தினுள்.

"அடி பாவி மகளே, அது நம்ம தொழில் ரகசியமாயிற்றே!'' என்று அவள் தந்தை விவரமாகச் சொன்ன போதுதான் புரிந்தது. தன்னுடைய தவறு தந்தையின் வியாபாரத்துக்கு எத்தனை அனர்த்தம் விளைவிக்குமோ என்று அஞ்சினுள் செல்லி.

காசிலிங்கம் சமாதான முறையில் சொல்லிப் பார்த்தான் மாரிமுத்துவிடம். "கடைகளுக்குக் கொடுத்தது போக மீதி இருக்கிறதைத்தான் வீட்டில் காய்ச்சி வைத்திருப்போம். குழந்தை தெரியாத்தனமா அத்தனை பாலையும் கொட்டிக் காய்ச்சியதோடல்லாமல் தவறுதலாக வேறு வார்த்தையையும் கொட்டி விட்டாள். அதை நம்பாதீங்க'' என்று சமாதான முறையில் சொல்லிப் பார்த்தான். மாரிமுத்துவோ ஒரே பிடிவாதமாக இருந்தான். இனிமேல் பால் வாடிக்கை வேண்டாமென்று மறுத்ததோடு, இதுவரை ஏமாற்றி வந்ததற்காகவும் மேலதிகாரிகளுக்கு எழுதி அனுப்பி, அபராதம் விதிக்கப் போவதாகவும் கருவிக் கொண்டிருந்தான்.

சமாதான முறைக்கு ஒத்துவராத மாரிமுத்துவைப் பயமுறுத்திப் பணிய வைக்க முயன்ருன் காசிலிங்கம்.

மாரிமுத்து தன் சம்பந்தமாக மேலதிகாரிகளுக்குத் தெரியப்படுத்துவதாயிருந்தால், 'அடுத்த மாதம் நடக்கவிருக்கும் திருமணம் நின்று போய் விடும் என்பதைச் சொல்லி விட்டு வா' என்று தன் வேலையாள் பொன்னன் மூலம் சொல்லி அனுப்பினுன் காசிலிங்கம்.

* * *

மறுநாள் மாலை பத்து மணி சுமாருக்குப் பொன்னன் 'பத்ம விலாஸ்' ஓட்டலுக்குச் சென்ருன். வாசலில் வந்து தயங்கித் தயங்கி நின்ற பொன்னனைக் கண்டதும் அடங்கிக் கிடந்த மாரிமுத்துவின் கோபம் சீறிப் பாய்ந்தது.

"என்னய்யா உன்னைத் தூது அனுப்பிஞரா? ஊரை ஏய்த்துச் செய்கிற வியாபாரத்துக்கு உடந்தையாகக் கையாளு வேறே......ஏனய்யா நீயாவது பாவ புண்ணியத்துக்கு அஞ்சி நீதி நியாயத்தைச் சொல்ல வேண்டாம்...அக்கிரமமாகச் சேர்க்கிற காசு அழிகிற காலம் வந்துட்டுது. அதுதான் என்கிட்ட சிக்கிக் கொண்டான். நீ எங்கே வந்தே......உங்க முதலாளி என்னதுக்குச் சொல்லி விட்டாரு......?''

"முதலாளி அனுப்பி நானு வரலேங்க.''

"அப்போ நீயாகவே வந்தாயாக்கும்... வந்த விஷயத்தைச் சொல்லு.''

"செல்லித் தங்கச்சி அனுப்பிச்சுங்க.''

"என்னது செல்லியா......?''—அவனையறியாது குழைவு ஏற்பட்டது கேள்வியில்.

"ஆமாங்க,தங்கச்சிதான் அனுப்பிச்சுது.'' மாரிமுத்துவின் முக மாறுதல் பொன்னனுக்குத் தெம்பை அளித்தது......

"அப்படி என்ன விஷயம்? இப்படி வந்துதான் சொல்லேன்'' என்று ஆவலுடன் வினவித் தன் மேஜைக்கு அருகே அழைத்தான் மாரிமுத்து.

"அடுத்தமாதம் உங்க கல்யாணம் முடிகிற வரை அப்பனைப் பத்தி ஒண்ணும் எழுதி அனுப்ப வேண்டாமின்னு கேட்டுக்கிட்டு வரச் சொன்னுள்.''

"இன்னும் கல்யாணம் நடக்கப் போகிறது என்று கனவு கண்டு கொண்டிருக்கிறானோ!" என்று ஏகத்தாளமாகச் சொல்ல நினைத்த சொல் பரிதாபமாக எழுந்தது.

அவனது பலவீனத்தை உணர்ந்து கொண்ட பொன்னன் மேலும் அவனிடம் தொடர்ந்து சொன்னான்.

"என்னங்க! அற்ப விஷயத்துக்காக மனம் நிறைந்து முடிவு செய்த கல்யாணத்தை முறித்து விடறதா?......அப்படி விரோதமிருந்தால் கல்யாணத்துக்கு அப்பாலே உங்க இஷ்டம்போல நடந்துங்களேன்......" என்றான்.

சிந்திக்கும் பாவம் மாரிமுத்துவின் வதனத்திலே தெளிந்தது. "உங்களுக்குச் செல்வி தங்கச்சி மேலே உண்மையான அன்பிருந்தால் கண்ணாலம் முடிகிறவரை விரோதத்தை நிறுத்தி வைக்கும்படியாக உறுதி வாங்கிக்கிட்டு வரச் சொல்லிச்சுங்க......" என்றான். அவனது குரலிலேதான் எத்தனை குழைவு!

"போ, போ, எல்லாம் பார்த்துக்கலாம்!" என்று மாரிமுத்து கூறிய பாவனையிலிருந்தே தனக்கு வெற்றி என்பதை ஊகித்துக் கொண்டான் பொன்னன்.

* * *

விவாகத்துக்குப் பின் ஒரு நாள். "என்னங்க, நீங்க! அப்பா மேலே ஏதோ தாவா போடணும் என்று கலியாணத்துக்கு முன்னாலே சொல்லிக்கிட்டிருந்தீங்களே? இப்ப உங்களுக்கு அந்தச் சிரமமே வைக்காமல் அப்பாரு வியாபாரத்தையே உங்க கையிலே ஒப்படைக்க வேணுமின்னு தீர்மானித்திருக்கிறார். இனிமேல் போடணுமானால் உங்க பேருலேயே போட்டுக் கொள்ள வேண்டியதுதான்" என்றாள் செல்வி.

எத்தனைதான் பணக்கார மாமனாராக இருந்தாலும், எத்தனையோ சிறப்பாக அவன் கல்யாணத்தைச் செய்திருந்த போதிலும், காசிலிங்கம் தேடிய பணம் துரோகமான முறையில் கிடைத்தது என்ற நினைவு வந்தபோது ஆத்திர மெழுந்தது.

"உன் வார்த்தைக்காகப் பொறுத்திருந்தேன், செல்வி. இல்லையானால் உன் தந்தையை எப்பொழுதோ காட்டிக் கொடுத்திருப்பேன்......"

"என்னது! என் வார்த்தைக்காகவா?" என்று ஒன்றும் புரியாமல் திருதிருவென்று விழித்தாள் செல்வி.

"தங்கச்சி சொன்னதாக நான்தான் அவரிடம் சொன்னேன்!" என்று சொல்லிக் கொண்டே வந்தான் பொன்னன்.

"என்னது? நீ சொன்னாயா!......"

"ஆமாங்க, ஆயிரம் பொய் சொல்லி ஒரு கல்யாணத்தை முடிக்கலாம்னு பெரியவங்க சொல்லுவாங்க! ஒரு கல்யாணத்துக்காக ஒரு பொய் சொன்னதில் தப்பில்லையல்லவா?" என்று கூறிக் குறும்பாகச் சிரித்தான் பொன்னன்.

அவன் மனத்திலேதான் எத்தனை எஜமான விசுவாசம். வீட்டின் வேலைக்காரன் தான். ஆனாலும் செல்லாயியைத் தன்னுடன் பிறந்தவளாகக் கருதினான். இரு தரப்பாரின் அசட்டுப் பிடிவாதத்தினாலே நின்றுவிட இருந்த கல்யாணத்தைப் பொன்னன் ஒரு பொய் சொல்லி முடித்து வைத்தான்.

* * *

களங்கமற்ற அவனது செயலை நினைத்த போது அவனுக்கு இந்தப் பட்டு மட்டுந் தானா பரிசு என்று தோன்றியது செல்விக்கு.

"என்னங்க, பட்டு வேஷ்டியைக் கொடுத்து ஏமாற்றி விடலாமென்று நினைக்காதீங்க. நம்மிருவரையும் அவன் சேர்த்து வைத்தது போல அவனுக்கும் துணைதேடி வைக்கும் பொறுப்பு உங்களைச் சேர்ந்தது!" என்றாள் செல்வி.

"அது நீ சொல்லு முன்னாலேயே நானே தீர்மானித்து விட்டேன், செல்வி. அடுத்த தீபாவளி பொன்னனின் தலை தீபாவளிதான், பாரேன்!" என்றான் மாரிமுத்து.



நாட்டின் தொழில் வளம் வெகு வேகமாகப் பெருகி வருகிறது என்று பலரும் சொல்லக் கேட்டு வருகிறோம். 'ஆம், இது முற்றிலும் உண்மை' என்று சொல்லும் வகையில் நான்கு மாதங்களுக்கு முன்பு நம் நாட்டில் மோட்டார் சைக்கிள்கள் உற்பத்தி செய்யத் திரு எஸ். சங்கரன் முன் வந்தார். ஒரு தொழிற்கூடத்தைத் திறந்தார். 'ராயல் என்பீல்ட் மோட்டார் 'சைக்கிள்ஸ்' கம்பெனியின் மானேஜிங் டைரக்டரான திரு சங்கரன் சமீபத்தில் இங்கிலாந்துக்குச் சென்று தொழிற்சாலைக்கு வேண்டிய முக்கியமான இயந்திரங்களைத் துரிதமாக அனுப்பி வைக்க ஏற்பாடு செய்து விட்டு வந்திருக்கிறார். விரைவில் இந்தத் தொழிற்சாலையே நம் நாட்டுக்குத் தேவைப்படும் அத்தனை மோட்டார் சைக்கிள்களையும் உற்பத்தி செய்து அனுப்பும் என்று நம்பப்படுகிறது. திரு சங்கரன் அவர்களின் முயற்சி வெல்வதாக!

# சிறிது







# பெரியது




**FIAT**

**சிக்கனத்தின் சிகரம்-உல்லாஸ உழைப்பிலும் சிக்கனம்-காலனுக்கு 35 மைல்.**

**PLYMOUTH**

**அழகிற்கும், அமைதிக்கும் ஏற்ற ஆனந்தமூட்டும் வசதி.**

**சுந்தரம் மோட்டார்ஸ் லிட்.,** 37, மவுண்ட் ரோடு, மதராஸ்-6.

**டி. வி. சுந்தரம் அய்யங்கார் & ஸன்ஸ் லிட்.,**

மதுரை, திருச்சி, திருநெல்வேலி, புதுக்கோட்டை, சேலம், கோயமுத்தூர்,

TVSZ-71 TM

டீலர்கள்:

பியட் & ப்ளிமத் கார்களுக்கு — ● மலபார் ஜில்லா: வி. வி. ஆட்டோமோபைல்ஸ் லிமிடெட், கோழிக்கோடு ● தென் கனரா ஜில்லா: யு. சுப்ராய நாயக், கண்டோன்மெண்ட், மங்களூர் ● நெல்லூர் ஜில்லா: டி. என். ஆட்டோமோபைல்ஸ், நெல்லூர் ● குண்டூர், கிருஷ்ணா, மேல் கோதாவரி ஜில்லாக்களுக்கு: சுரபதி காரேஜ், (ஜெனரல் மெஷினரி & ஆட்டோ ஸ்டோர்ஸ்) காந்தி நகர், விஜயவாடா. பியட் கார்களுக்கு மட்டும் - ● திருவாங்கூர்-கொச்சி ராஜ்யத்திற்கு: கொல்லம் ஆட்டோமோபைல்ஸ், தபால் பெட்டி 32, கொல்லம். ப்ளிமத் கார்களுக்கு மட்டும் - ● திருவாங்கூர்-கொச்சி ராஜ்யத்திற்கு: பி. என். கிருஷ்ண அய்யர் அண்டு சன்ஸ் லிட்., திருச்சூர் ● மைசூர் ராஜ்யத்திற்கு: டோலோஸ் காரேஜ், நெ. 29, மகாத்மா காந்தி ரோடு, பெங்களூர்

1 ; தா ; தா ; தா பா தா | நீ ஸா ; ஸ்ரி | நீ நி ரி ஸ் நி பா ||
கை வ ல்யம் ம று | மையி ல் ம - | - ட்டு - மோ - -
2 ; தா ; தா ; தா பா தா | நீ ஸா ; நீ | ஸா ரீ,க் ரிஸ் நி பா ||
கை வல் யம் ம று | மை யில் ம | - ட்டு - மோ - - -
த நி =
- - உ ல க வா ழ் வி லும்

**சரணம்**

;, தா த தா ; தா பா தா | நீஸா ; ஸா | ஸ் நி ரி ஸ் நி பா,த ||
த் யான யோ க ஜ ப | த பங் கள் | அ - றி யே - ன் - -
தபம தா த தா ; தா ப த நீ | த நி ஸா ; ஸ்ரி | நிஸ் ரி,க்ரிஸ் நி பா ||
- - - த் யான யோ க ஜ - ப | த - ப ங்க - | ன - றி - யே - ன் - -
;, நீ ப ம ரி ரீ,ம ரீ,மரீ ஸா | ரீ, ம பா ப ம | ; ப ரி ஸ் தா , ||
ஸ த் ஜ ன - ஸங் - - - ங்கம்இ | ண ங் - கி யும் - | அ றி - யேன்
;, ப த ப ஸா , நி ரீ ஸா ; | ;, ரீ ஸ் ஸ் நி | ஸா ; ; ; ||
கா - ன சா - ஸ்த்ர மு ம் | க ற் ற றி - | யேன்
*
;, ப த ப ஸா , நி ரீ ஸா ; | ;, ரி ம் ரி ஸா | ஸா நி ரி ஸ் தா ||
கா - ன சா - ஸ்த்ர மு ம் - | க - ற்ற றி | யேன் - ம - னம்
தா தா தா தா ; பா தா நீ | ஸா ; ; ஸ் நி | நீ நி ரி ஸ் நி பா ||
க வி வி லேன் மு ரு க | னே கு - | ரு ட - னே - ன்
தா தா தா தா ; ; ப த நீ | த நி ஸா ; நீ | ஸா ரீ,க்ரிஸ் நி பா ||
க வி வி லே - - ன் மு - ரு | க - னே கு | கு ட - னே - ன் - -
த நி =
- - ன உ ல க வ ா ழ் வி லு ம்

* இந்த அடையாளம் காகலி நிஷாதத்தைக் குறிக்கும்.

## டி.கே.சி.யின் கடிதங்கள்

திருக்குற்றாலம்
31—10—48

அன்று உங்கள் எல்லாரிடமும் இருந்து விடைபெற்றுக் கொண்டு காரில் ஏறிய போது ரொம்பக் கஷ்டமாய்த்தான் இருந்தது. எல்லார் முகத்திலும் அன்பும் பரிவும் நிறைந்திருந்தன. ரயிலில் இரவு போகும் போது ஒரு படமாகவே மனக் கண் முன் எல்லா முகங்களும் வந்து போயின.

காலையில் 7 மணிக்குத் திருச்சி ஜங்ஷன் போய்ச் சேர்ந்தது ரயில்.

மறு நாள் 25ந் தேதி மாதர் சேவா சங்கம். மாலை 6 மணிக்குக் கூட்டம். நல்ல கூட்டம். எல்லாரும் அறிவாளிகள். 200 பேர் பெண்மணிகள். தனி இடத்தில் 100 ஆடவர்கள் வந்திருக்க இடம் பண்ணி வைத்திருந்தார்கள். இடத்தை வெகு அழகாக அலங்கரித்திருந்தார்கள். அதைப் பற்றியே பேச ஆரம்பித்தேன்.

"சேரா தனஉள
வோ இரு சேர்ந்தார்க்கு
வேதம்செப் பும்
பேரா யிரம்,பொன்
முடியா யிரம்,நறை
பெய்துள வத்
தாரா யிரம்நம்
இருக்குரு கூர்ச்சட
கோபன்சொன் ன
ஆரா அமுத
கவிஆ யிரம்அவ்
அரியினுக் கே!"

என்கிற பாட்டையும் சொல்லி முடித்தேன். எல்லாம் தாயார் லக்ஷ்மி, தேவியாய்க் கிடைத்த "லக்" தான் அந்த விஷ்ணுவுக்கு என்பதுதானே விஷயம்!

கேட்பானேன், சேவா சங்கத்துக்கு ஒரே சந்தோஷம். எல்லாரும் என்னைக் குழந்தையாகப் பாவித்து அருமை பாராட்டினார்கள். வெள்ளி கட்டிய ஒரு அழகிய சங்கையும் அவர்களது மனப் பாங்குக்கு ஏற்கப் பரிசளித்தார்கள். சங்கை மறக்க முடியாது. அதை விட மறக்க முடியாது அவர்களுடைய உள்ளன்பை.

இனிமேல் சென்னைக்குப் போகும் போதும் குற்றாலம் திரும்பும் போதும் சேவா சங்கம், வழி மறித்து விடுவார்கள் என்று பயமாகவே இருக்கிறது.

[illegible]
டி. கே. சிதம்பரநாதன்

ஒவ்வொரு இரவும் அதே கதை தான். குழந்தை நிம்மதியில்லாமல் அயர்ந்து போயிருந்தான். பகலிலோ அதிலும் மோசம். தாயார் ஆத்திரப்பட்டிருந்ததில் ஆச்சரியமொன்றுமில்லை.





ஒரு நாள் அவள் அண்டை வீட்டுக்காரியின் யோசனையைக் கேட்டாள். அவள் சொன்னாள் "குழந்தை சந்தோஷமாயும் ஆரோக்கியமாயுமிருக்க அவனுக்கு உணவு கணக்காய் புகட்ட வேண்டும்" தவிர 'க்ளாக்ஸோ'வை வாங்கும்படி அவள் வற்புறுத்திச் சொன்னாள்.

'க்ளாக்ஸோ' ஒரு புஷ்டியான பால்-உணவு. உறுதியான எலும்பும் பற்களும் வளர விடமின் 'டி'யும் ரத்தத்தை வளம்பெறச் செய்ய இரும்புச் சத்தும் இதில் சேர்க்கப்பட்டுள்ளன.






அப்பாடா! குழந்தை எவ்வளவு விரைவில் வளர்ச்சியடைந்தான் என்பதை நீங்கள் நம்பவே மாட்டீர்கள். விரைவில் அவனுக்கு ஒரே ஆனந்தம் தான்! இரவு முழுவதும் நேர்த்தியாய் தூங்கலானான், நிதானமாய் எடையும் அதிகமாயிற்று.

**Glaxo**

'க்ளாக்ஸோ' குழந்தைகளின் மிகச் சுத்தமான பால் உணவு




**எஸ். வைத்தியநாதன்**

சோதனைப் பரிசோதித்த டாக்டரின் முகம் திகைப்பையும் கவலையையும் காட்டியது. "ஜுரம் ரொம்பக் கடுமையாகத்தான் இருக்கிறது. நேற்றுப் பரிசோதனை செய்தபோது நோய் ஒரு கட்டுப்பாட்டுக்குள் இருந்தது. எனக்கும் தைரியமாக இருந்தது. இன்று எனக்கே சற்றுக் கவலை ஏற்படும்படி ஜுரத்தின் கடுமை அதிகரித்திருக்கிறது; கபமும் ரொம்ப அதிகமாயிருக்கிறது" என்றார்.

"ஸார், ஸார்! இப்படிச் சொல்கிறீர்களே! என் ஒரே செல்வம் ஸார், அவன்!" என்று துயரத்துடன் அரற்றினான் வெங்கடரத்தினம்.

அவன் மனைவி மகாலக்ஷ்மியோ துக்கம் தாங்காமல் திணறியபடி, பேசும் சக்தியைக்கூட இழந்து கண்ணீர் உகுக்கத் தொடங்கினாள்.

டாக்டர் "அடியோடு நம்பிக்கை இழக்க வேண்டாம் நீங்கள். குணமாவதற்கும் வழி இருக்கிறது" என்றார்.

தம்பதிகள் இருவரும் பரபரப்புடன் ஏக காலத்தில் "குணமாகிவிடுமா?" என்றார்கள்.

"கடவுள் அருளால் ஆகிவிடும் என்றே நம்புவோம். சமீபத்தில் இவ்வகையான ஜுரத்துக்கு அற்புதமான இன்செக்ஷன் மருந்து ஒன்று கண்டு பிடிக்கப்பட்டிருக்கிறது. இப்போதுதான் ஆரம்பமாதலால் அம்மருந்து பரவலாகத் தாராளமாகக் கடைகளுக்கு இன்னும் விநியோகிக்கப்படவில்லை. சென்னையில் மாத்திரம் கொஞ்சம் கிடைக்கிறது தற்போது. ஆனால் உங்களுடைய நல்லதிர்ஷ்டத்தின் காரணமாக அந்த 'இன்செக்ஷன் ட்யூப்' இரண்டு இவ்வூரில் இப்போது இருக்கின்றன. இவ்வூர்ப் பெண்கள் ஆஸ்பத்திரியில் இரண்டு மாதமாக ராஜீவி என்றொரு டாக்டர் வந்திருக்கிறாள். அவள் தன் நோயாளி ஒருத்திக்காக அந்த மருந்தை ஒரு வாரம் முந்தி சென்னைக்கு ஆள் அனுப்பி வரவழைத்தாள். ஆனால் அம்மருந்துக்கு அவசியமில்லாமல் போயிற்று. அது அவளிடம் சும்மாத்தான் இருக்கிறது. அதைப் போய் வாங்கிக் கொண்டு வந்து வைத்துவிட்டு எனக்குத் தகவல் அனுப்புங்கள், வருகிறேன்" என்று கூறிப் புறப்பட்டார் டாக்டர்.

ராஜீவியா! திடீரென்று அவனுடைய உள்ளத்தில் கரை புரண்ட மகிழ்ச்சி வெள்ளம், தோன்றியது போலவே திடீரென ஏன் மறைந்து விட்டது? பயமும் சோகமும் அவன் முகத்தில் குடிகொள்வானேன்?

வெங்கடரத்தினம் பி. ஏ. பாஸ் பண்ணிவிட்டு ஊரோடு இருந்து வந்தான். உத்தியோகம் எதுவும் ஆகவில்லை இன்னும். அவனுடைய தகப்பனார் ஏழெட்டு மாதங்களுக்கு முன்தான் காலமானார்.

அவனும் அவன் தாயாரும் வசித்துக் கொண்டிருந்த வீட்டைத் தவிர, அவனுக்குச் சொந்தமான இன்னொரு சிறு வீடு அதே தெருவில் இருந்தது. அச் சிறு வீட்டில் ஸப்தகிரி என்ற பள்ளி ஆசிரியர் ஒருவர் குடியிருந்தார்.

அவர் ஆரம்பப் பள்ளி ஒன்றில் ஆசிரியர். ஏழை. அவருடைய பள்ளிக்கூடத்தில் மூன்று நான்கு மாதங்களுக்கு ஒரு முறைதான் சம்பளம் வரும்; அவ்வளவு திவ்யமான நிர்வாகம்! எனவே அவர் மிகச் சிரமப்பட்டுக் கொண்டிருந்தார்.

அவருக்கு இரண்டு புதல்விகள்; சுமதி, ராஜீவி என்று. மூத்தவளாகிய சுமதிக்குச் சில மாதங்களுக்கு முன்தான் பகீரதப் பிரயத்தனம் செய்து அவர் விவாகம் செய்திருந்தார். ஆகவே, அந்தச் சமயத்தில் அவர் சொல்லொணாச் சிரம தசையிலிருந்தார். அது காரணமாக வெங்கடரத்தினத்துக்கு அவர் மூன்று மாதம் வாடகை பாக்கி தரவேண்டியிருந்தது.

வெங்கடரத்தினம் மிகவும் அகம்பாவங் கொண்டவன். நெஞ்சில் ஈரமில்லாதவன்; ஏழைகள் என்றால் துச்சமாகத் தூக்கி எறிந்து பேசி விடும் சுபாவமுள்ளவன். அதுவும் தவிர உலக அனுபவமில்லாத இளைஞன். ஸப்தகிரி சால்ஜாப்புச் சொல்லிக் கொண்டிருந்ததைக் கண்டு அவனுக்கு அசாத்திய கோபம் வந்துவிட்டது. அவர் வீட்டுக்குப் போய்க் கூச்சல் போடத் தொடங்கினான் ஒரு நாள்.

ஸப்தகிரி அன்று ஊரிலில்லை. பணம் வாங்கிக் கொண்டு வருவதற்காகத்தான் அவருடைய வெளியூர் சிநேகிதர் ஒருவரிடம் சென்றிருந்தார். அந்தத் தகவலை அவருடைய மனைவி வெங்கடரத்தினத்திடம் கூறி,



அக்டோபர் 2-ந் தேதி பிரதம மந்திரி நேரு சென்னைக்கு விஜயம் செய்தபோது, பெரம்பூர் 'கோச்பாக்டரி'க்குச் செல்லும் வழியில் புரசை எம். ஸி. டி. எம். பள்ளிகளின் மாணவ மாணவியர் அவரை வரவேற்று மாலை சூட்டினர். எம். ஸி. டி. எம். சிதம்பரம் செட்டியார் நினைவு ஆரம்பப் பள்ளியின் மாணவி காயத்திரி நேருஜிக்கு மாலைசூட்டுவதைப் படத்தில் காணலாம்.

இன்னும் இரண்டு நாட்கள் பொறுமையாயிருக்கும்படியும் அவனுக்குச் சேர வேண்டிய பணம் முழுதும் வந்து விடும் என்றும் தெரிவித்தான்.

வெங்கடரத்தினம் சமாதானம் அடையவில்லை. "எத்தனையோ நான் பார்த்தாச்சு. வாடகை கொடுக்க வக்கில்லாவிட்டால் வீட்டைக் காலியல்லவா செய்து விடவேணும்! இன்றே காலி செய்து விடுங்கள்! இல்லையென்றால் சாமான்களைத் தூக்கித் தெருவில் எறிந்து விடுவேன்" என்று வாயில் வந்தவாறு கத்தினான். வீட்டில் ஆண் பிள்ளை இல்லையே என்பதைக்கூடப் பொருட்படுத்தவில்லை. சிறுமி ராஜீவி நல்ல ஜுரத்துடன் படுத்துக்கொண்டிருந்ததையும் லட்சியம் பண்ணவில்லை. ஸப்தகிரியின்மனைவிக்கு அவமானம் தாங்காமல் உடல் குன்றியது. "வீணுகக் கலாட்டா பண்ணுகிறீர்கள்! இன்று மாலைக்குள் உங்கள் வாடகை பாக்கி முழுவதையும் கொடுத்துத் தீர்த்து விட்டு வீட்டையும் காலி பண்ணி விடுகிறேன்" என்றாள்.

அவள் தன் கழுத்திலிருந்த ஒரே ஆபரணத்தை, சுமங்கலிகள் கழற்றத் தயங்கும் நகையை விற்று விட்டு வந்து, சொன்னபடி அவனுடைய பாக்கியைத் தீர்த்து விட்டாள். அடுத்த தெருவில் அதிர்ஷ்டவசமாகக் காலியாக இருந்த ஒரு வீட்டுக்கு அன்றே குடியும் போய் விட்டாள், அக்கம் பக்கத்து வீட்டுக்காரர்கள் ஒத்தாசையுடன். இவ்வளவும் ஸப்தகிரி மறுநாள் இரவு ஊரிலிருந்து வருவதற்குள் நடந்துவிட்டது.

வெங்கடரத்தினத்துக்கு இரண்டொரு மாதங்களுக்குள்ளேயே கடலூரில் மராமத்து இலாகா ஆபீஸில் உத்தியோகம் கிடைத்தது: கடலூருக்குப் போய் விட்டான். அங்கு இரண்டு வருஷங்கள் இருந்தான். அங்கிருக்கும்போது அவனுக்குக் கல்யாணமும் நடந்தது. அப்புறம் பல ஊர்களுக்கு மாற்றலாகிக் கடைசியில் தஞ்சை ஜில்லாவில் ஒரு ஊருக்கு வந்து சேர்ந்தான்.

**வா**ழ்க்கைச் சக்கரத்தின் சுழற்சியில் திடீரென்று ஒரு மாறுதல் ஏற்பட்டது. இருந்தாற்போலிருந்து ஸப்தகிரிக்குப் பெரிய அதிர்ஷ்டம் அடித்தது. அவருடைய அத்தை ஒருத்தி — பணக்காரி — திடீரென்று ஒரு நாள் கண்ணை மூடி விட்டாள். சந்ததி எதுவும் அவளுக்குக் கிடையாது. அவளுடைய மூப்பதாயிரம் ரூபாய் சொத்துக்கு ஸப்தகிரி வாரிசு ஆனார். பள்ளிக் கூடத்துக்கு ஒரு கும்பிடு போட்டு விட்டுச் சொத்தை நிர்வகிப்பதற்காகக் கிளம்பி விட்டார்.

ராஜீவிக்குக் கல்யாணம் செய்யும் உத்தேசத்தோடு அவளுடைய படிப்பை எஸ். எஸ். எல். ஸி. யோடு நிறுத்த முயன்றார் தந்தை. ஆனால் ராஜீவிக்குக் கல்யாணத்தில் நாட்டம் செல்லவில்லை. அவளுடைய அக்கா சுமதியின் இல்லற வாழ்க்கை மிகவும் பரிதாபப்படக் கூடியதாய் அமைந்து விட்டது. அதைக் கண்டுதான் மனத்தில் ராஜீவிக்கு வெறுப்புண்டாகி விட்டது. எனவே தான் மேலே படிக்கப் போவதாயும் கல்யாணம் தேவையில்லையென்றும் பிடிவாதமாகக் கூறி விட்டாள்.

சுமதி புக்ககத்தில் அனுபவித்துக்கொண்டிருந்த துன்பமெல்லாம் ஸப்தகிரிக்கு மாத்திரம் தெரியாதா என்ன? ஆகவே சின்ன மகளை அவள் இஷ்டப்படியே நடக்க அனுமதித்து விட்டார்.

உரியகாலத்தில் ராஜீவி எம். பி. பி. எஸ். பட்டம் பெற்று டாக்டரானாள். ஆஸ்பத்திரியில் உத்தியோகம் கிடைத்தது. இரண்டு ஊர்களில் வேலை பார்த்து விட்டு மூன்றாவதாக வெங்கடரத்தினம் இருந்த ஊரில், பெண்கள் ஆஸ்பத்திரியில் டாக்டராக மாற்றலாகி வந்திருந்தாள்.

ராஜீவி டாக்டருக்குப் படித்துக் கொண்டிருந்தாள் என்ற விஷயத்தை ஏற்கனவே பராபரியாகக் கேள்விப்பட்டிருந்தான் வெங்கடரத்தினம். எனவே ராஜீவி என்ற பெரு லேடி டாக்டர் தங்கள் ஊருக்கு வந்திருக்கிறாள் என்ற செய்தியை அறிந்ததுமே அவள் பழைய ராஜீவியாகத்தானிருக்கவேண்டும் என்று அனுமானித்துக் கொண்டான். அப்புறம் ஒரு நாள் அவளை 'ஸ்டெதாஸ்கோப்'பும் கையுமாகக் கடைத் தெருவில் தூரத்திலிருந்தே கண்டு, தன்





# 'அனஸின்'

விஞ்ஞான முறையில்

## நான்கு மருந்துகளின்

ஒரு கலப்பு.

'அனஸின்' விஞ்ஞான முறைப்படி சேர்க்கப்பட்ட நான்கு மருந்துகளின் கலப்பாகும். அவை நரம்புகளின் முக்கிய சேர்க்கை பாகங்களில் கூட்டாக வேலை செய்து விரைவில் வலி, தலைவலி, ஜலதோஷம், ஜுரம், பல்வலி, மற்றும் தசை நார்களில் நோவு இவற்றை நீக்கும். அனஸினில் அடங்கிய சில நான்கு மருந்துகள் —

1. கொயினா: ஜுரத்தடுப்பு குணமும், பலவிருத்தி செய்வதற்கும் பிரசித்தி பெற்றது. ஜுரத்தை குறைப்பதில் மிகத் துரிதமானது.
2. காப்பின்: பலஹீனத்திற்கும், மனச்சோர்வுக்கும் மிதமான தூண்டுகோல் மருந்தாக விதிக்கப்பட்டிருக்கிறது.
3. பினஸிடின்: ஜுரத்தடுப்பு, வலி நிவாரணத் தன்மைகளுக்கு பெயர் பெற்றது.
4. ஆஸிடில் ஸலிஸிலிக் ஆஸிட்: தலைவலி அது போன்ற எல்லா வலிகளையும் போக்குவதற்கு மிகவும் உபயோகமுள்ளது.

அனஸினிலுள்ள இந்த நான்கு மருந்துகளும் ஒரு டாக்டரின் குறிப்புக்கு ஒப்பாகும். 'அனஸின்' இருதயத்திற்கு தீங்கு விளைவிப்பதோ அல்லது வயிற்றுக்கு கோளாறு உண்டாக்குவதோ கிடையாது. வலி, தலைவலி, ஜலதோஷம், ஜுரம், பல்வலி மற்றும் தசைகளில் வலி முதலியவற்றிலிருந்து விரைவிலும், பத்திரமாகவும், நிச்சயமாகவும் நிவாரணம் பெற எப்பொழுதும் அனஸினையே கேட்டு வாங்குங்கள்




லக்ஷக்கணக்கான மக்களுக்கு நிவாரணம் அளிக்கின்றது.




அனுமானம் சரிதான் என்பதை உறுதி பண்ணிக் கொண்டான். பதினைந்து வருஷங்களுக்கு முன்னால் பண்பற்ற முறையில் பேசி வீட்டை விட்டு விரட்டிய குடும்பத்தைச் சேர்ந்த அதே ராஜீவியின் தயவை நாட வேண்டி வரப்போகிறது என்று அவனுக்குத் தெரியுமா என்ன? பதினைந்து வருஷங்களுக்கு முன் தான் செய்த காரியத்துக்காக வெங்கடரத்தினம் இப்போது மிகவும் வருத்தப் பட்டான்!

அவன் எவ்வளவோ தூரம் மனத்தைத் திடப்படுத்திக் கொள்ள முயன்றான்; என்றாலும் ராஜீவியிடம் போய்க் கேட்பதற்கு அவனுக்குத் துணிவு பிறக்கவில்லை. கொடுக்க மாட்டான் என்பது நிச்சயமாகத் தெரிந்திருக்கும்போது போவது அடி முட்டாள்தனம் அல்லவா? ஆயினும் அதற்காகக் குழந்தை கோபுவை இறக்கும்படி விட்டுவிடுவதா? ஒன்றும் புரியாமல் துயரத்துடன் குமைந்த அவனுக்கு ஒரு யோசனை தோன்றியது. தன் மனைவியை அவனிடம் அனுப்பி, 'டாக்டர் தண்டாயுதம் இன்ஜெக்ஷன் ட்யூப் இருக்கும் தகவல் சொன்னார்' என்று சொல்லிக் கேட்கச் சொன்னால் என்ன? ஆம், அதுதான் சரி!

"லக்ஷ்மி! இந்தா!" என்று மனைவியை அழைத்து அவன் கூறினான்:—"அந்த ராஜீவி பெண்மணியாக இருப்பதால் அவளைப் போய்க் கேட்க எனக்குச் சங்கோசமாயிருக்கிறது. ஆகையினால் நீ போ! டாக்டர் தண்டாயுதம் சொன்னார் என்று சொல்லு. 'நீ யார்?' என்று அவன் கேட்டால் 'என் கணவர் மராமத்திலாகா ஆபீஸில் ஹெட்-கிளார்க்காக இருக்கிறார்' என்று சொல்லு. தாமதம் பண்ணாமல் மருந்தைச் சீக்கிரம் வாங்கிக் கொண்டுவா!" இவ்வாறு கூறி அவளை அனுப்பினான்.

லக்ஷ்மி கிளம்பிப் போனாள். வெங்கடரத்தினம் தன்னுடைய யுக்தியைத் தானே மெச்சிக் கொண்டான். ராஜீவிக்கு லக்ஷ்மி இன்னாருடைய மனைவி என்பது எப்படித் தெரிந்திருக்கப் போகிறது?

அரை மணியில் லக்ஷ்மி திரும்பி வந்தாள். "கொடுத்தானா?" என்று வினவினான் வெங்கடரத்தினம்.

"கொடுக்காமலென்ன! உடனே கொடுத்து விட்டான்...... இன்னொரு ஆச்சரியமான சங்கதியை உங்களுக்கு இப்போது சொல்லப்போகிறேன்...அந்த ராஜீவிக்கு உங்களை நன்றாகத் தெரியுமாமே!"

திடுக்கிட்டான் அவன். "தெரியுமா!" என்று வியப்பை அபிநயித்தான்.

"நன்றாகத் தெரியுமாம்...உங்கள் ஊரில் உங்கள் வீட்டில் குடியிருந்தானாமே, பதினைந்து வருஷங்களுக்கு முன்!"

"அந்த ராஜீவியா இவன்!" என்று ஒன்றும் தெரியாதவனைப் போல் நடித்த வெங்கடரத்தினம் "நீ என் மனைவி என்பதை அவன் எப்படிக் கண்டு பிடித்தான்?" என்று வியப்புடன் கேட்டான்.

"நீ யார், உன் கணவருக்கு என்னவேலை, உனக்கு எந்த ஊர், உன் புருஷருக்கு எந்த ஊர்?" என்று எல்லாவற்றையும் அவன் விசாரித்தான். நான் கூறினேன். 'அடடே! நீ நம்ப வெங்கடரத்தினத்தின் மனைவியா?' என்று வியப்புடன் கூவின அவன் எல்லா விவரங்களையும் கூறினான்."

"எல்லா விவரங்களையுமா!"

"அதுதான் அவன் உங்கள் வீட்டில் குடியிருந்தது, அவனுடைய அப்பா அம்மா, அக்கா ஆகியவர்களைப் பற்றிய சமாசாரங்கள் எல்லாவற்றையும் கூறினான். உங்களை ரொம்பவும் நல்லவர் என்று சிலாகித்துப் பேசினான். மருந்தின் கிரயம்கூட 'இப்போது வேண்டாம், குழந்தையின் உடம்பு குணமான பிறகு வாங்கிக் கொள்கிறேன், அவசரமில்லை' என்று கூறி விட்டான். நம் வீட்டுக்கு அழைத்தேன். இன்னொரு நாளைக்கு வருகிறேன் என்று சொன்னான்."

"அப்படியா!" என்று அதிசயத்துடன் சொன்ன வெங்கடரத்தினத்துக்கு, '**இன்னா செய்தாரை ஒறுத்தல். அவர் நாண நன்னயம் செய்து விடல்**' என்னும் வள்ளுவர் வாக்கு நினைவுக்கு வந்தது.



# விளையாட்டு அரங்கம்

**பந்து**

"இளமையில் கல்" என்ற ஔவை வாக்கியம் விளையாட்டு அரங்கத்திலும் முற்றிலும் உண்மை. சிறு பிராயத்திலே, விளையாட்டு மனப்பான்மை இருக்கும் காலத்திலே நன்றாக ஒவ்வொரு ஆட்டத்திலும் பயிற்சி பெற்றால் தான் 20 அல்லது 25 வயதிற்குள் உலகப் பிரசித்தி பெற முடியும். ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையுமா என்ற சான்றோர் வாக்கியத்தைத்தான் சமீபத்தில் சென்னைக்கு விஜயம் செய்த ஜெஸி ஓவன்ஸ் எல்லா இடங்களிலும் எடுத்துரைத்தார்.

ஜெஸி ஓவன்ஸ் யார் என்பதைப் பற்றிச் சொல்ல வேண்டியது அவசியம் இல்லை. ஏனென்றால் அவர் மிகப் புகழ் பெற்றவர். அவர் ஓட்ட விளையாட்டுக்களில் இணையற்றவர். அவர் இந்த விஷயத்தைப் பற்றி ஏதாவது சொன்னால், அவர் வார்த்தைகளுக்கு உலகத்திலேயே மதிப்பு உண்டு. உலகத்தில் வேகமாக ஓடக்கூடிய ஒரு மனிதர் இருபதாவது நூற்றாண்டில் இருக்கிறார் என்றால், அந்த மனிதர் ஜெஸி ஓவன்ஸ்தான்.

ஓவன்ஸ் ஒரு நீக்ரோக்காரர். அவரிடம் எந்த வித மத, வர்ண துவேஷமும் கிடையாது. "எல்லோரும் ஓர் குலம்" என்ற மிகப் பரந்த மனப்பான்மை உடையவர். அவருக்கு வாழ்க்கையில் இரண்டு லட்சியங்கள்தான் இருந்தனவாம்; இரண்டையும் பூர்த்தி செய்து விட்டாராம். ஒன்று, ஒலிம்பிக் விளையாட்டில் தமது தாய்நாடான அமெரிக்காவின் கொடி உயரப் பறக்க வேண்டும். இரண்டாவது, இந்தியாவிற்கு விஜயம் செய்து இந்தியர்களுடன் அளவளாவ வேண்டும்.

முதல் முதலில் 1936-ம் வருஷம் ஜெர்மனியில் நடந்த ஒலிம்பிக் விளையாட்டில் ஓவன்ஸுக்கு என்றும் அழியாத புகழ் கிடைத்தது. அமெரிக்க நாடு முழுதும் பெருமையால் பூரித்தது. நான்கு பந்தயங்களில் முதல் ஸ்தானம் பெற்று நான்கு தங்கப்பதக்கங்களைப் பெற்றார். அன்று அவர் ஏற்படுத்திய இரண்டு ரிகார்டுகளை இருபது வருஷம் கழித்து இன்று வரை ஒருவரும் மீறவில்லையென்றால் அவருடைய திறமையைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமா என்ன!



ஓடுவதற்குமுன் எப்படித் தயார் செய்து கொள்ள வேண்டும் என்று காண்பிக்கிறார் ஜெஸி ஓவன்ஸ்.

இந்தியாவுக்கு வந்து நம்முடன் அளவளாவ வேண்டுமென்ற ஓவன்ஸின் இரண்டாவது லட்சியமும் இப்பொழுது நிறைவேறி விட்டது. நம்மவர் ஓட்ட விளையாட்டுக்களில் முன்னேற்ற மடைவதற்கு ஓவன்ஸ் ஆங்காங்கே சில முக்கிய விதிகளை எடுத்துரைத்திருக்கிறார். ஓட்டப் பந்தயத்துக்கு எப்படித் தயார் செய்து கொள்வது, எப்படி ஓட ஆரம்பிப்பது என்பவை பற்றி நடை முறையில் காண்பித்திருக்கிறார்.

"ஓட்ட விளையாட்டில் ஒருவன் புகழ் எய்த வேண்டுமானால், பதின் மூன்று அல்லது பதினான்கு வயதிலேயே பயிற்சியை ஆரம்பிக்க வேண்டும். கால் பந்து விளையாடக் கூடாது. ஓடும்போது விரல்களைக் கெட்டியாக மூடிக் கொண்டால் ரத்த ஓட்டம் பாதிக்கப்படும். சாப்பாடு விஷயத்தில் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். ஒரு நிபுணரிடம் போதனையும் பயிற்சியும் பெற்றுக் கொள்ள வேண்டும். தினமும் குறைந்தது ஐந்து மைல் தூரம் ஓடிப் பயிற்சி செய்ய வேண்டும்" என்று ஓவன்ஸ் புத்திமதி கூறியிருக்கிறார். களியாட்டங்களில் வெற்றி பெற்றால் மட்டும் போதாது. நன்றாகக் கல்வியும் கற்க வேண்டும் என்பது ஓவன்ஸ் அவர்களின் புத்திமதி.

பெண்கள் ஓட்ட விளையாட்டுக்களில் ஈடுபடுவதைப் பற்றி எதிராஜ் கல்லூரி மாணவிகளுக்கு ஓவன்ஸ் சொன்னது என்ன தெரியுமா! ஓடுவதும், குதிப்பதும் பெண்களுக்கு ஏற்றதல்ல என்று சொன்னார். ஓட்ட விளையாட்டுக்களில் முதல் ஸ்தானம் பெறவேண்டுமென்றால் நன்றாகப் பயிற்சி செய்ய வேண்டும். மென்மையான சரீரமுடைய பெண்களால் தாங்க முடியாது. தசைகள் கடினமானால் பெண்களின் அழகு குறைந்து விடும். "எனக்கு மூன்று பெண்கள் இருக்கின்றனர். அவர்கள் டென்னிஸ் தான் விளையாடுகின்றனர்" என்று கூறினார்.

மூன்று குழந்தைகள் பிறந்த பிறகும், பிளான்கர்ஸ் கோயன் என்ற டச்சு மாது ஒலிம்பிக் ஓட்டப் பந்தயங்களில் முதல் ஸ்தானம் பெற்றார். சமீபத்தில் டயனா லெதர் என்ற பிரிட்டிஷ் ஸ்திரீ ஐந்து நிமிஷங்களுக்குள் ஒருமைல் ஓடிப் புகழ் எய்தினார். பெண்கள் ஆண்களுக்குச் சரிநிகரில்லை என்றெவரால் சொல்ல முடியும்! ஆனால் அழகைக் குறைக்கும் ஓட்ட விளையாட்டுக்கள் மட்டுமே வேண்டாம் என்கிறார் ஓவன்ஸ்.

# அரிசிப்பல் அரும்பிடும் புன்முறுவல்!

குழந்தைக்கு முதல் பல் அரும்பிவிடத் தொடங்குவதைக் காண, வீட்டில் ஏக அமர்க்களம்! அவன் வளர்ந்து வருகிறான் என்பதை உணர்த்துகிறது அது. அவன் வாயில் விரலைக்கொடுக்க இனி எவரும் அஞ்சுவார்கள்.

ஆனால் அச்சமயத்திலும், தனது கவலை தானே கவனித்துக்கொள்ள அவனால் முடியாதே! அவன் விஷயத்தில் அடிக்கடி கவனம் தேவை —முக்கியமாக அவனுடைய தளிர்போன்ற சருமத்திற்கு விசேஷ பராமரிப்பு அவசியம். ஜான்ஸன்ஸ் பேபி பௌடர் அவனுடைய சருமத்தை மென்மையாகவும் மழமழப்பாகவும் வைத்திருப்பதுடன், எரிச்சலின்றி பாதுகாக்கவும் செய்யும்.

டாக்டர்கள் ஜான்ஸன்ஸ் பேபி பௌடரை 70 ஆண்டுகளுக்கு மேலாக சிபாரிசு செய்து வருகின்றனர். இன்றே ஒரு டின் வாங்குக!




## Johnson's BABY POWDER

## ஜான்ஸன்ஸ் பேபி பௌடர்

**சருமத்திற்கு ஹிதமளிப்பதில் உலகிலேயே நிகரற்ற பௌடர்**

**இலவசம்**

குழந்தை பராமரிப்பு புத்தகத்தின் இலவச பிரதிக்கு எழுதுங்கள்—குழந்தையை சரியான முறையில் எப்படி பேணி வளர்ப்பது, பல் முளைக்கும்போது என்ன செய்யவேண்டும், அவனை குளிப்பாட்டும் முறை, எப்படி நல்ல பழக்க வழக்கங்கள் கற்றுக்கொடுப்பது முதலிய, பெற்றோருக்கு இன்றியமையாத, அநேக விஷயங்கள் இதில் அடங்கியிருக்கிறது. இவ்விலாசத்திற்கு எழுதவும்:

**ஜான்ஸன் & ஜான்ஸன் (கிரேட் பிரிட்டன்) லிட்.**

JB. 993 டிபார்ட்மென்டு 21 (எச்), த.பெ. 1976, பம்பாய்



# நெஞ்சுணர்ந்த குற்றம்

ஸ்ரீப்ரியா

தம் பெயருக்கு வந்த கவரைப் பரபரப்புடன் பிரித்துப் படித்தார், சுந்தரேசக் குருக்கள். அவர் மகள் சுசீலாதான் எழுதியிருந்தாள், பம்பாயிலிருந்து. கடிதத்தில் கண்களை ஓட விட்ட குருக்களின் உடல் நடுங்கிற்று. மெய் சிலிர்த்தது.

“அன்புள்ள அப்பா அவர்களுக்கு, நமஸ்காரம். இந்த வாரக் கடைசியில் நான் இவருடன் புறப்பட்டு அங்கு வருகிறேன். போன மாதம் திடீரென்று இவருக்கு ஒருநாள் ஜுரம் வந்து ரொம்ப அதிகமாகி விட்டது. டாக்டர்கள் ஏதோ விஷ ஜுரம் என்று கூறிக் கை விட்டனர். இரவு முழுதும் எனக்குத் தூக்கம் இல்லை. மறுநாள் விடியற் காலை. மணி நாலு இருக்கும். ஒரு கனவு. பச்சைப் பட்டு உடுத்தி ஒரு சுமங்கலி; வாட்ட சாட்டமான உருவம். அவளைப் பார்த்ததும் ஏனோ எனக்கு நம்மூர் அம்மனின் நினைவு வந்தது. அவள் என் தாலிக்கொடியைப் பிடித்திழுத்து, ‘உனக்கு இனி இது வேண்டாம். அதன் காரியம் ஆகி விட்டது’ என்று கூறுவது போலிருந்தது. விதிர்த்து அலறி எழுந்தேன். அவர் அருகே சென்றதும், ஜுர வேகம் தாளாது அவர் சோர்ந்து அயர்ந்திருக்கக் கண்டேன். என் படபடப்பு தணியவில்லை. ‘தாயே, எனக்கு மாங்கல்யப் பிச்சை கொடு. என் கொடி திருமாங்கல்யத்தை உனக்குச் சாத்துகிறேன்’ என்று பிரார்த்தனை செய்து கொண்டேன். அதற்குப் பிறகு ஜுரம் மந்திரத்துக்குக் கட்டுப்பட்டாற்போல் ‘விடுவிடு’ என்று இறங்கி விட்டது. உடம்பும் குணமாகி விட்டது. பிழைத்தெழுந்த பிரார்த்தனை செய்யவே இப்பயணம்......”

கடிதத்தைப் படித்து முடித்த குருக்கள் மேனி எங்கும் பொடிப்ப, நெற்றியிலே, வியர்வை துள்ளியெழ அவரது உள்ளத்திலே “தாயே, இந்த ஏழையை மன்னித்துவிடு” என்ற குரல் ஆலயமணியாக உரத்து ஒலித்தது.

அன்று சந்தனக்காப்பு. பூக்கள் குடலை குடலையாகக் குவிந்து கொண்டிருந்தன. அண்டா நிறைய மணம் கமழும் சந்தனம். தேவஸ்தானத்துக் குமாஸ்தா நகைகளைப் பெட்டியுடன் கொண்டு வந்து வைத்தார். அருகே சிறு பையன் ஒருவன் அபிஷேகாதிகளுக்குக் குருக்களுக்கு உதவி செய்து கொண்டிருந்தான். சுந்தரேசக் குருக்கள் இயந்திர கதியில் வேலை செய்து கொண்டிருந்தார். அம்மனுக்கு அபிஷேகம் செய்ய முதற் பணியாக எண்ணெய்ப் பிசுக்கேறிய திரையை இழுத்து மூடினார். பருவ மங்கை போல் பூரித்து நின்றது அம்மனின் தெய்விக வடிவு.

உடற்கட்டுடன் ஒய்யாரமாக நின்ற தேவியின் இடத்தில் அவர் மகள் சுசீலா பருவ மங்கையாக நாணிக் கோணி நின்றாள். இளமை வாடுமுன்னர் அவளது திருமணம் நடத்தப்பட வேண்டும் என்பதை வலியுறுத்தியது அவளது எழில்.

கண்ணைப் பறிக்கும் அழகு வாய்ந்த தேவியின் சிலைக்குப் பட்டுடை உடுத்தினார் குருக்கள். பழம் புடவையில் தமது வறுமைக்குள் அடங்கி நிற்கும் பெண்ணின் நினைவு வந்தது. சந்தனத்தை அப்பினார் அங்கம் அங்கமாக. சுசீலாவின் தாழம்பூ மேனி நினைவில் மறுபடி குறுக்கிட்டது. ஆயிற்று, இனி செம்பொன் நகைகள் பூட்ட வேண்டியதுதான். பையன் பக்தியுடன் ஜாக்கிரதையாக எடுத்துக் கொடுக்க, குருக்களும் ஒவ்வொன்றாகப் பாங்காக அமைத்துச் சூடி அழகு பார்த்தார்.

அந்த நகைகளில் ஒரு எட்டுப் பவுன் மட்டும் அவருடையதாயிருந்தால் சுசீலாவின் திருமணம் சென்ற வருஷமே முடிந்திருக்கும். சீ, என்ன எண்ணம்! குருக்கள் இதயத்தினின்று பீறிட்ட வெய்துயிர்ப்பு கர்ப்பக் கிரகத்தின் வெக்கையில் கலந்தது. மலர் மாலைகளை அணிவித்த குருக்கள் அடர்சோதி முன் சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்கரித்தார். “தாயே, ஒரே மகளைப் பெற்றும் அவளை வாழ வைக்க வழியின்றித் திகைக்கிறேன், வழி சொல்” என்று உள்ளம் உருகி, பிரார்த்தனையும் செய்து வேண்டிக் கொண்டார்.

கூட்டம் வழி பிதுங்கியது. அஷ்டோத்திரமும், தீபாராதனையும், பிரசாத விநியோகமும் பிறவும்! குருக்கள் அவசரத்தில் இரண்டு மூன்று அர்ச்சனைகளைச் சேர்த்துக்கூடச் செய்ய ஆரம்பித்து விட்டார். ‘ஓம், ஓம்’ என்ற ஓசை கற்பூர மணத்துடன் கர்ப்பக்கிரகத்தில் நிரம்பி வழிந்தது. இப்போது சுந்தரேசக் குருக்களுக்குத் துணையாக வேறு இரு அர்ச்சகர்கள் வந்து சேர்ந்து கொண்டனர்.

அன்று முதல் தை வெள்ளிக்கிழமை. நான்கைந்து நாட்களுக்கு முன் தன் மகளுக்கு நல்ல வரனாக அமைந்து விட்டதை முன்னிட்டு, 'கஜானனு பாங்க்' ஜெகதீசய்யர் மகிழ்ச்சியுடன் செய்யும் நற்பணி அன்றையக் கட்டளை. குருக்களின் மனம் எல்லாம் ஒரு எட்டுப் பவுன் கொடி திருமாங்கல்யம் போட இயலாது தட்டிப்போன பம்பாய் வரனைப் பற்றிய சிந்தனையிலேயே இருந்தது.

எட்டுப் பவுன்! ஒரு சாதாரணக் குருக்களின் வரும்படிக் கால எல்லைக்குள் அகப்படாத ஒரு 'லக்ஷ்யம்' அது! அது கிடைத்தால் பம்பாய்ப் பிள்ளை உண்டு. இல்லாவிடில் இன்னும் கமலாவுக்குக் கன்னி வாழ்வு எத்தனை நாட்களுக்கோ!

அவசர அவசரமாக ராமசாமிக் குருக்கள் ஒரு ரோஜா மாலையைக் கொண்டு வந்து சாத்தினார். சந்தனத்தின் உடலில் சிவந்த ரோஜா வண்ணக் கோலமிட்டது. மற்றும் ஒரு அர்ச்சனைக்கு அதற்குள் அழைப்பு வந்த அவசரத்தில் ராமுக் குருக்கள் மாலையைச் சரியாக முடித்து வைக்காமல் சூட்டிடவே அவர் நகர்ந்த சில நிமிஷங்களுக்கெல்லாம் மாலை நழுவியது. ஒரு நிமிஷம்! பூஜையில் அமர்ந்திருந்த சுந்தரேசக் குருக்கள் கண்களைத் திறந்தார். நழுவிய மாலையைத் தூக்கினார். மாலையில் சிக்கியதொரு வஸ்து அவர் கைகளை நெருடியது. திடுக்கிட்ட குருக்கள் நிமிர்ந்தார். அம்மன் கழுத்தில் சிவப்பு கல்லட்டிகைக்கும் வைரம் இழைத்த திருமங்கல்யக் கொடிக்கும் இடையே பசுமைச் சந்தனத்தின் மீது பதிந்த ஒரு இரட்டை வடமாலையின் வடு நன்கு தெரிந்தது. அம்மனின் முகாரவிந்தத்தை நோக்கிய சுந்தரேசக் குருக்களை அவளது குமின் சிரிப்பு மெய் சிலிர்க்க வைத்தது.

'சீ, தெய்வ சொத்து' என்றது மனச்சாட்சி. 'அன்னையே மனம் கனிந்து உருகிப் பிரார்த்தனைக்குச் செவி சாய்த்து அளிக்கும் பரிசு' என்று அதற்கு மறுப்பு விடுத்தது வறுமை. கர்ப்பக்கிரகத்தின் புகை சூழ்ந்த ஒளி, அருகே ஒருவருமற்ற தனிமை; — சுந்தரேசக் குருக்கள் மனத்தைத் திடப்படுத்திக் கொண்டார். ராமுக் குருக்கள் திரும்பி வந்து கொண்டிருந்த நேரத்தில் ரோஜா மாலை தேவியின் கழுத்திலுள்ள பொன்னுபரணங்களை மறைத்துக் கொண்டு திகிலுவின் சிரிப்புடன் மிளிர்ந்து கொண்டிருந்தது. அர்த்த ஜாமப் பூஜைக்குப் பின்னர் அம்மன் சந்நிதியின் கதவுகளை இழுத்துச் சாத்திப் பூட்டினார் சுந்தரேசக் குருக்கள்.

இரும்பு அழிக்கதவுகளைப் பற்றி நின்று அன்னையின் இருக்கையைச் சற்று ஊடுருவினார் குருக்கள். தேஜோ மயமாய்ச் சற்றுமுன் நின்ற நாயகி ஒற்றைக் குத்து விளக்கின் மங்கிய ஒளியில் பொலிவிழந்து காணப்படுவதற்குத் தனது இழிவான செயலே காரணம் என நினைந்துருகினார். அவளது நெற்றிப் பொட்டுக்குக் கீழே நிலைத்து நின்ற சுடர்விழிகள் மட்டும் தன்னைச் சுட்டெரிப்பது போன்ற பிரமை! நாளைக் காலை தேவஸ்தானத்துக் குமாஸ்தா நமச்சிவாயம் வந்து நகைகளை எண்ணிப் பார்த்து வாங்குகையில் விஷயம் வெட்ட வெளிச்சமாகி விடும். அத்தனை குருக்களையும் பாராக்காரனையும் விசாரித்துத் தனது குற்றத்தைப் போலீஸார் கண்டு பிடித்து விட்டால்......!

தனது கைகள் பற்றி நிற்பது சிறைக் கதவுகளின் இரும்புக் கம்பிகளா அல்லது சந்நிதியின் இரும்புக் கதவுகளா என்ற சந்தேகம் தோன்றியது, வெடவெடத்த குருக்களது உள்ளத்திலே!

"வீரப்பா நான் வருகிறேன்" என்று சொல்லிக் கொண்டே சாவிக் கொத்தை அவனிடம் தந்து விட்டுத் தனக்குரிய தேங்காய் மூடியுடன் புறப்பட்டார். இறுதிக் கும்பிடு ஒன்றைக் கோபுர வாயிலில் வழங்கிவிட்டு இருட்டில் மெதுவாக நகர்ந்தார் சுந்தரேசக் குருக்கள்!

அவரது மடியிலும் மனத்திலும் கனம்!

* * *

அன்று இரவு சிவராத்திரிதான். சுந்தரேசக் குருக்களது முயற்சிக்கு அப்பால் நின்றாள் சித்திரா தேவி. அவர் முன் தோன்றியதெல்லாம் தேவியின் சிலையும், இரட்டை வடமாலையும்தான்.

வயிற்றைக் கழுவ ஏற்றுக் கொண்ட பரம்பரைத் தொழில் என்றாலும் சிலையைக் கழுவிச்



சிங்காரித்துப் பூஜை செய்யத் துவங்கிய நாள் முதலாக, நிலையான பக்தியுடனும் தூய்மையான உள்ளத்துடனும் இந்த நாற்பது வருடக் காலப் பொழுதைத் தள்ளி விட்டார். வறுமையின் சிறுமையில், பெண்பேரிலுள்ள அன்பினால் ஒரு கண வெறியில் நெறி தவறினாலும் அது அவரது ஆயுசிலே நெஞ்சாலும் நினைக்கக் கூடாத ஒரு செயலல்லவா! அதற்கெல்லாம் சேர்த்துத்தான் இன்று செய்தாரோ! அதுவும் எங்கே! அவருடைய தாயினிடமே! அன்றாடப் பொழுதுக்குக் கஞ்சி ஊற்றும் தெய்வத்தினிடம் கைவைத்து விட்டாரே! மனவேதனை அவரை அழுத்தியது.

குருக்களின் மனத்தில் திடீரென்று ஓர் ஒளி; மனத்தில் ஒரு திடம். காலத்தின் மாறுபாடுகளுக்கெல்லாம் ஈடு கொடுத்து அழியாமல்



சென்னை ஷெனாய்நகர் வெஸ்ட் என்ட் கிளப்பில் அக்டோபர் 16ல் "தமிழ்ச் செல்வம்" என்னும் நாடகம் மிகவும் சிறப்பான முறையில் நடந்தது. நாடகத்தில் வரும் உயர்ந்த கருத்துக்களையும் நடிகர்களின் சிறந்த நடிப்பினையும் சபையோர் மிகவும் பாராட்டினர். இதில் நடித்தவர்கள் அனைவரும் ஷெனாய்நகரில் உள்ள மாணவர்கள்தாம் என்பது குறிப்பிடத் தக்கது. நடுவில் அமர்ந்திருப்பவர் நாடகத்தை டைரக்ட் செய்த திரு பி. எஸ். பொன்னு அரங்கம் அவர்கள். அன்று திரளான மக்கள் கூடி விருந்து நாடகத்தைக் கண்டு களித்தனர்.

கம்பீரமாக நிற்கும் ஆலயக் கோபுர திசையை நோக்கிக் கையெடுத்துக் கும்பிட்டார். கங்குல் கரையு முன் எழுந்து அன்னையின் பொருளை அன்னைக்கே அளிக்கும் திவ்விய கருமத்தைச் செய்திடும் உறுதியுடன் அவர் நித்திரையில் ஆழ்ந்து விட்டார்.

'சாமீ, சாமீ' — வீரப்பனின் பரபரப்பும் கூப்பாடும் சுந்தரேசக்குருக்களைத் தூக்கிவாரிப் போட்டுத் துயில் எழச் செய்தன. "சாமி, மோசம் போச்சுங்க. கோயிலில் திருடன்! எல்லாம் போச்சுங்க." காவல்கார வீரப்பனும், காளியும் கதறினர்கள்.

"பாவிப் பயலுக! தெய்வச் சொத்துலே கை வச்சுட்டானுவளே எவனுகளோ!"

விடியற்காலத்துக் குளிரிலும் குருக்களுக்கு உடல் முழுதும் குப்பென்று வியர்த்தது; தலை கனத்தது. அவர் செயலிழந்து நின்றார்.

ஒரு மாதகாலம் ஊரே அமர்க்களப்பட்டு நின்றது. திருட்டுக்குப் பிறகு மறைந்து போன பகல் பாராக்காரன் துணை கொண்டு திருடர்கள் எடுத்தோடிய நகைகள் ஜாபிதாவில் சங்கிலியையும் இணைத்துக் கொண்டார் சப்-இன்ஸ்பெக்டர். சங்கிலி மறைந்த மாயம் குருக்களுக்கும் எங்கும் நிறைந்து நின்ற அன்னைக்கும் மட்டும் தெரிந்த இரகசியமாயிருந்தது.

சுசீலாவின் திருமணம் பம்பாய்ப் பையனுடன் விமரிசையாக நடந்தேறி, அவளும் புக்ககம் சென்று விட்டாள். அதன்பின் குருக்கள் நடைப்பிணமானார்.

அதன்பின் தலை நிமிர்ந்து நோக்காமலே குருக்கள் அன்னைக்குப் பணியாற்றினார். நிமிரப் பயம்; குற்றமுள்ள நெஞ்சு குறுகுறுத்தது.

அதற்குப் பிறகு நான்கைந்து வருடங்கள் பத்து பதினைந்து சந்தனக் காப்புகளுடன் ஓடி மறைந்தன. ஆனால் பழைய சந்தனக் காட்சியின் கம்பீரம் மறைந்து விட்டதாகவே குருக்கள் கருதினார். அவர் ஆயுளில் முதன் முதலாகப் பணம் சேர்க்கலானார். ஆம், அன்னைக்குத் தமது கடனைத் தீர்க்கத்தான். அதுவரை அவருக்கு நிம்மதியேது!

கன்னிப் பருவத்தில் நின்ற சுசீலாவை விட அவளது திருமணம் அவரைச் சித்திரவதைக் குள்ளாக்கியது.

* * *

"அது என்ன கடிதம்!"

குருக்கள் அமர்ந்திருந்த தோற்றம் அவர் மனைவிக்கு வயிற்றைக் கலக்கியது. ஆனால் செய்தியை அறிந்ததும் அவளது விசாரம் நீங்கி விட்டது.

"எல்லாம் அம்பாள் இருப்பதூன். சுசீலாவுக்கு நல்ல இடத்தில் கல்யாணம் ஆனால் சந்தனக் காப்பிடுவதாக நானே வேண்டிக் கொண்டிருந்தேன். ஆனால் அவளும் உடனே ஊருக்குப் போய் விட்டாள். உங்களுக்கும் பிறகு சௌகரியமில்லை. அம்பாளுக்கும் இப்போது தான் நம் சந்தனத்தைப் பூசிக்கொள்ள ஆசை வந்திருக்கிறது. அதையும் இத்துடன் சேர்த்து வைத்துக் கொள்வோம்" என்றாள்.

"பேஷாக வைத்துக் கொள்வோம். எனக்கும் வெகு நாட்களாகவே இந்த எண்ணம் உண்டு. எல்லாப் பிரார்த்தனைகளையும் சேர்ந்தாற்போலவே செய்து விடுவோம்!" என்று சொன்ன சுந்தரேசக் குருக்களுக்கு இத்தனை நாட்களும் மனத்தைச் சுமையாக அழுத்தி வந்த பாரம் குறைந்தாற் போலத் தோன்றியது.

அன்று தை வெள்ளிக்கிழமை!

தம் கையால் மகள் தந்த திருமாங்கல்யக் கொடியை அன்னையின் கழுத்தில் சாத்திய சுந்தரேசக் குருக்களின் கண்கள் தமது பாவத்தைக் கழுவிக் கொள்ளும் முறையில் தாரை தாரையாக நீரைப் பொழிந்தன.

தர்மகர்த்தாப் பிள்ளை ஓடிவந்தார்!

"என்ன குருக்கள்வாள்! கேட்டீங்களா! நகைகளைத் திருடின பசங்க மதுரைக்குப் பக்கத்திலே பிடிபட்டுட்டாங்களாம். ஸப்-இன்ஸ்பெக்டர் ஐயா புறப்பட்டுப் போறாங்களாம்!" என்று கூறினார்.

சுந்தரேசக் குருக்கள் அமைதியாகச் செய்தியைக் கேட்டார்.

அருகிலிருந்த ராமுக் குருக்கள், "தேவி சக்தி இல்லையோ! தன்னை வஞ்சித்தவரைச் சும்மா விடுவாளா!" என்று கூறிவிட்டு அன்னையின் திசைக்கு அஞ்சலி செய்தார். சுந்தரேசக் குருக்களின் கரங்களும் குவிந்தன.




# ஓ.கே வனஸ்பதி

ருசிகரமான உணவுகள் தயாரிக்க ஏற்றது.

ஏன் தெரியுமா ?

- அதிகமான போஷாக்குச் சக்தி அளிப்பதற்காக ஒவ்வொரு அவுன்ஸ் ஓ. கே. வனஸ்பதியிலும் 700 I.U. வைட்டமின் 'A' சேர்க்கப்பட்டிருக்கிறது.
- ஓ. கே. வனஸ்பதி 'ஏர்-டைட் லீவர் லிட்' டின்களில் பாக் செய்யப்படுகிறது. இதனால் கடைசி அவுன்ஸ் வரை 'ஓ. கே.' வனஸ்பதி புதுமை கெடாமலும், சுகாதாரமாகவும் இருக்கிறது.
- ஓ. கே. வனஸ்பதி கெடுதல் எதுவும் செய்யாத உணவுத் தயாரிப்பு சாதனம். ஏனென்றால் அது நயம் தாவர எண்ணெயிலிருந்து சுகாதாரமான முறையில் தயாரிக்கப்படுகிறது.
- காலியானதும், ஏர்-டைட் ஓ. கே. லீவர் லிட் டின்னை, உங்கள் அடுப்பங்கரையில் சுகாதாரமான முறையில் சாமான்களைப் பத்திரப்படுத்தி வைக்க உபயோகியுங்கள்.




¼, 1, 2, 5, & 10 பவுண்டு டின்களில் இப்பொழுது கிடைக்கிறது.





தயாரிப்பவர்கள்

## தி ஈஸ்ட் ஏஷியாடிக் கம்பெனி (இந்தியா) லிமிடெட், மதராஸ்.

EP




## 43. சத்தி முற்றம்

நாரைப் பாட்டுப் பாடி இந் நாட்டில் நல்ல புகழ் பெற்றார் ஒரு கவிஞர். அவர் காவிரி நாட்டுச் சத்தி முற்றத்திலே பிறந்தவர்; வறுமையிற் செம்மையுற்று வாழ்ந்தவர். பல்லாண்டுகளாகத் தம்மோடு உறவு கொண்ட வறுமையை ஒழிக்க ஒரு வழி தேடினார். பசுந்தமிழ் வளர்க்கும் பாண்டிய மன்னனைக் கண்டால் கலி தீரும் என்று கருதினார். காதல் மனையாளிடம் விடைபெற்றுப் பாண்டி நாட்டின் தலைநகராகிய மதுரைமா நகரை அடைந்தார்.

அந்நகரில் அவரை அறிந்தார் எவரும் இல்லை. அரண்மனைக் காவலாளரைக் கடந்து மன்னன் முன்னே செல்லுதற்கேற்ற ஆடையும் அணியும் அவரிடம் இல்லை. தன்னைப் போன்ற நல்லிசைப் புலவர் ஒருவர் முன்னொருகால் பாடிய பாட்டை நினைந்தார்; நெஞ்சம் குழைந்தார்.

"விரகர் இருவர் புகழ்வாரும் வேண்டும்
விரல்நிறைய மோதிரங்கள் வேண்டும்
—அரையில் ஒரு
பஞ்சேனும் பட்டேனும் வேண்டும் அவர்
கவிதை
நஞ்சேனும் வேம்பேனும் நன்று"

என்று உலகியல் அறிந்த அக் கவிஞர் உரைத்த உண்மையை உணர்ந்து உருகினார். அந்திமாலை வந்தது. அற்றார்க்கும் அலந்தார்க்கும் உறைவிடமாகிய அம்பலத்திற் போந்து சளிப்புற்றுச் சாய்ந்தார், சத்தி முற்றப் புலவர்.

அவர் மனம் சஞ்சலத்தில் ஆழ்ந்தது. "வறுமையுற்ற மனையில் வாழும் மனையாள் என் வரவு நோக்கிக் காத்திருப்பாளே" என்று வருந்தினார். "பாண்டியனைக் கண்டு வரும் கணவன், பொன்னும் பொருளும் கொண்டு வரும்" என்று வழிமேல் விழி வைத்துப் பார்த்திருப்பாளே என்றெண்ணி மனம் பதைத்தார்.

அப்போது ஆகாய வழியே ஆணும் பெண்ணுமாய்ப் பறந்து சென்ற நாரைகளைக் கண்ணுற்றார். அப் பறவைகள் தென் குமரித் துறையிலே வயிரார மீன் அருந்திக் காவிரி நாட்டை நோக்கிச் செல்லும் காட்சி அவர்க்கு இன்பம் அளித்தது. அவற்றை "நாராய், நாராய்" என்று நயந்து அழைத்தார்; அவற்றின் வாயழகையும், காலழகையும் அருமையாகப் புகழ்ந்தார்.

"நாராய் நாராய் செங்கால் நாராய்
பனம்படு பனையின் கிழங்குபிளந் தன்ன
பவளக் கூர்வாய்ச் செங்கால் நாராய்"

என்று பரிந்து பாடினார். "சிவந்த காலும் செம்பவள வாயும் உடைய நாரைகாள்!

உம்மிடம் ஒன்று சொல்கின்றேன்! சிறிது செவி சாய்த்தருளுங்கள். நீங்கள் செல்லும் திசையில் காவிரி நாட்டிலே சத்திமுற்றம் என்ற ஊர் ஒன்று உண்டு. அங்குள்ள குளத்தின் அருகே என் குடிசையைக் காண்பீர்! வாடிய முகத்தோடு என் வரவு பார்த்து வாசலில் காத்திருப்பாள் என் மனையாள். அவளிடம் போந்து "தமிழ் மன்னன் அரசு வீற்றிருக்கும் மதுரையம்பதியில் ஆடையின்றி வாடையில் மெலிந்து, கையையும் காலையும் சுருட்டி மடக்கி, பெட்டிப் பாம்புபோல் பெருமூச்செறியும் ஏழையாகிய என்னை அம்பலத்திலே கண்டோம் நாங்கள் என்று அன்பு கூர்ந்து சொல்லுங்கள்" என்று வேண்டினர்.

"நீயும் உன் பெடையும்
தென்திசைக் குமரி யாடி வடதிசைக்
காவிரி யாட ஏகுவிர் ஆயின்
சத்திமுற் றத்து வாவியிற் சென்று
நனைசுவர்க் கூரை கனைகுரற் பல்லி
வரவுபார்த் திருக்கும் மனைவியைக் கண்டுஎம்
கோமான் வழுதி கூடல் மன்றத்து
ஆடையின்றி வாடையில் மெலிந்து
கையது கொண்டு மெய்யது பொத்தி
காலது கொண்டு மேலுறத் தழீஇ
அலகுநீறந் தன்ன பல்லினன் ஆகிப்
பேழைசெய் பாம்பென உயிர்க்கும்
ஏழை யாளனைக் கண்டனம் எனுமே"

(பெடை - பெண் நாரை; வாவி - குளம்; வழுதி - பாண்டியன்; கூடல் - மதுரை; மன்றம் - அம்பலம்; பேழை - பெட்டி.)

என்ற பாட்டைக் கேட்டான் அவ்வழியாக ஆலயத்திற்குச் சென்ற அரசன். நாரையை நோக்கிப் புலவர் பாடிய பாட்டின் நயம் அவன் உள்ளத்தைக் கொள்ளை கொண்டது. திருஞான சம்பந்தர் ஈசனிடம் நாரையைத் தூது விட்ட பாசுரம் அவன் நினைவிற்கு வந்தது. பெருமை சான்ற சிறுத்தொண்டர் பணிசெய்த செங்காட்டங்குடியில் கோயில் கொண்ட ஈசனிடம் ஓர் இள நாரையைத் தூதனுப்புகின்றார் திருஞான சம்பந்தர்.

"கான் அருகும் வயல் அருகும்
கழி அருகும் கடல் அருகும்
மீன் இரிய வரு புனலின்
இரைதேர் வெண்மட நாராய்
தேன் அமர் தார்ச் சிறுத்தொண்டன்
செங்காட்டங் குடிமேய
வான் அமரும் சடையார்க்கு என்
வருத்தம் சென்று உரையாயே"

என்ற அருமைத் திருப்பாசுரத்தைப் பாடிப் பாடிப் பரவசமுற்றான்.

ஆலய வழிபாட்டை முடித்து மாளிகைக்குத் திரும்பிய மன்னன் மனம் சத்திமுற்றப் புலவர் பாடிய நாரைப் பாட்டை நாடிற்று. நாரையின் நீண்ட அலகிற்குப் பனங்கிழங்கை உவமையாகச் சொல்லிய நயத்தை நினைந்து நினைந்து நெஞ்சம் தழைத்தான். மறு நாள் அம்பலத்தில் இருந்த புலவரை அவைக் களத்திற்கு வருவித்தான்; அவர் பாட்டின் அருமையைப் பாராட்டினான். பெரும் பரிசில் அளித்து அவர் வறுமையைப் போக்கினான்.

இப்புலவர் பிறந்த ஊராகிய சத்தி முற்றம் சாலப் பழைமை வாய்ந்தது. கும்பகோணத்திற்கு அருகேயுள்ள இவ்வூர் தேவாரப் பாடல் பெற்றுள்ளது.

**“ அந்தா அடியேன் அடைக்கலம்**<br>
**கண்டாய் அமரர்கள்தம்**<br>
**சிந்தா திருச்சத்தி முற்றத்து**<br>
**உறையும் சிவக்கொழுந்தே ”**

என்று மனமுருகிப் பாடினார் திருநாவுக்கரசர்.

இத்தகைய பெருமை சான்ற ஊரின் பெயர் நாளடைவில் சத்தி முத்தம் எனச் சிதைந்து வழங்கலாயிற்று. காற்று, நாற்று என்ற சொற்கள் காத்து, நாத்து என வழங்குதல் போன்று முற்றம் முத்தம் ஆயிற்று.

இவ்வாறு சிதைந்த அச் சொல்லின் அடியாக எழுந்தது ஒரு சிறந்த கதை. சக்தியாகிய உமையாள் சிவனருள் பெறுவதற்கு நெடுங் காலம் தவம் புரிந்த இடமே சத்தி முத்தம். உமா தேவியின் தவத்தை மதித்து ஈசன் காட்சியளித்தான்; ‘என்ன வரம் வேண்டும்’ என்று அன்புடன் வினவினான். அப்போது காதலுற்ற உமையாள் ‘உம்மை இவ்விடத்தில் முத்தமிட வேண்டும்’ என்று வேண்டினாள். அதற்கு ஈசனும் இசைந்தான். சத்தி முத்தமிட்ட இடம் அன்று தொட்டு சத்தி முத்தம் என்னும் பெயர் பெற்றது என்று ஒரு கதை முளைத்தது. இதற்குச் சான்றாக,

**“ மட்டார் குழலி மலைமகள்**<br>
**பூசை மகிழ்ந்தருளும்**<br>
**சிட்டா திருச்சத்தி முற்றத்து**<br>
**உறையும் சிவக்கொழுந்தே ”**

என்ற தேவாரத் திருப்பாசுரம் எடுத்துக் காட்டப்படுகின்றது.




**மா**றிக் கொண்டே இருக்கும் இந்த உலகத்தில் மாறுதலே இல்லாமல் நின்று போனவன் நான்! பச்சோந்தி காட்டும் வர்ண ஜாலங்களைப் போல நிமிஷத்துக்கு நிமிஷம் வேறுபாடுடன் விளங்கும் இவ்வுலகில் வேறுபாடுகளுடன் மாறுபட்டு அன்றுபோல் இன்றும் வாழ்கிறவன் நான்! இன்று போலவே என்றும் வாழ்வேன் என்ற நம்பிக்கையும் எனக்குண்டு.

அன்று பார்த்த கண்ணுக்கு அழிவில்லாமல் பல வருஷங்களாக, ஒரே மாதிரித் தோற்றத்துடன் நான் இருப்பதாக என்னுடைய உறவினர்களும் நண்பர்களும் எனக்கு நற்சாட்சிப் பத்திரம் கொடுத்திருக்கிறார்கள். இது பெருமைப்படக் கூடியதுதான் என்பதை ஒப்புக் கொள்ளுகிறேன். வாலிபத்தின் முறுக்கில் நான் இருந்த அன்றும், வயோதிகத்தின் வாயிற்படியில் நான் நிற்கும் இன்றும் என்னுடைய தலை மயிரின் நிறம் கறுப்பாகவே இருந்து வருகிறது. காலம் என்னும் தேவன் என்னுடைய நெற்றியில் அவனுடைய தேர்க்கால்களைப் பதிய வைக்கவில்லை; வயோதிகத்தின் முத்திரையைப் பதிய வைத்து முதுமையின் வடுவைத் தாடைகளில் உழுது, நரையினை விதைக்கவில்லை. இதற்கெல்லாம் நான் நன்றி செலுத்தத் தயங்க மாட்டேன். ஆனால் வாழ்க்கையில் வெற்றி பெற்று மேலும் மேலும் முன்னேற வேண்டிய பல துறைகளில் இருபது வருஷங்களுக்கு மேலாக ஒரு மாறுதலும் இல்லாமல் நான் இருப்பதுதான் எனக்கு மிகவும் வருத்தத்தை அளிக்கிறது.

இரண்டு மாமாங்க காலம்-கிட்டத் தட்ட கால் நூற்றாண்டாக, மாதம் முப்பது ரூபாய் வாடகை கொடுத்துக் கொண்டு ஒரு தனி வீட்டில் நானும் என்னுடைய குடும்பத்தினரும் வசித்து வருகிறோம். ஒரே வீட்டில் வசித்து வருவதால் அந்த வீடு எனக்குச் சொந்தம் என்று பலர் நினைப்பது எனக்குத் தெரியும். ஆனால் என்னுடைய வீட்டுக்காரர் அப்படி நினைப்பதில்லை என்பது அவர் ஒவ்வொரு மாதமும் இரண்டாம் தேதி காலையில் வந்து வாடகைப் பணத்தைத் தட்டிக் கொண்டு போவதிலிருந்து தெரிகிறது! ஆனால் பதினைந்து வருஷங்களுக்கு முன் பதினைந்து ரூபாய் வாடகையில் ஒண்டுக் குடி இருந்த என்னுடைய நண்பர்களில் பலர் இன்று முப்பதினாயிரம் இருபதினாயிரம் ரூபாய் பெறுமான வீடுகளுக்குச் சொந்தக்காரர்களாக இருக்கிறார்கள்! இதை நினைக்கும் போது மனம் என்னமோ செய்யும். காலம் முழுவதும் வாடகை வீட்டிலேயே கழிக்க வேண்டுமென்பது என் விதி போலும் என்று சமாதானம் செய்து கொள்வேன்.

முப்பது வருஷங்களுக்கு முன்—எனக்குக் கல்யாணம் நடப்பதற்கு முன்—நான் வாங்கின சைக்கிள் வண்டியைத்தான் நான் இன்னமும் உபயோகித்து வருகிறேன். ஒரு தலைமுறையாக என்னுடைய கால் வண்ணத்தைக் கண்டு காதலித்து என்னுடனே

இணை பிரியாமல் இருக்கும் சைக்கிள் வண்டியைத் திரஸ்கரிக்கும் உத்தேசம் எனக்கில்லைதான். இருந்தாலும் நான் புதிய சைக்கிளை விட்டுக் கொண்டு 'ஜம்' என்று திரிந்து அட்டகாசம் புரிந்த அந்த ஆதி நாட்களில் காலில் செருப்புக்குக் கூட விதியற்று 'நடராஜா ஸர்விஸில்' ஊரைச் சுற்றி வளைய வந்து கொண்டிருந்தவர்களில் பலர் இன்று சொந்தக் காரில் மனைவி குழந்தைகளுடன் உல்லாசமாகப் பவனி வருகிறார்கள்!

முப்பது வருஷங்களாக நான் ரயிலில் மூன்றாவது வகுப்புப் பிரயாணியாகவே இருந்து மூட்டையோடு மூட்டையாக உருண்டு, மூட்டைப் பூச்சிகளினால் கடியுண்டு பிரயாணம் செய்து வந்திருக்கிறேன்-வருகிறேன். (என்னுடைய சகவாஸ தோஷத்தினால்தானோ என்னமோ மற்றைய வகுப்புகளின் பெயர்கள் மாறி உயர்ந்திருக்கும்போது இந்த மூன்றாவது வகுப்பு மாத்திரம் இன்னமும் மூன்றாவது வகுப்பாகவே இருந்து வருகிறது!) அப்பொழுதெல்லாம் டிக்கெட் இல்லாமலோ அல்லது பிளாட்பாரம் டிக்கெட்டுடனோ பிரயாணம் செய்தவர்கள் எல்லாம் இடை நடுவில் குறுக்கு வழியில் எப்படியோ பணம் சம்பாதித்து விட்டு இப்பொழுது முதல் வகுப்பிலும் தவறினால் ஆகாய விமானத்திலும் சுகமாகப் பிரயாணம் செய்கிறார்கள் என்பதை நினைக்கும்போதுதான் நான் எவ்வளவு அதிர்ஷ்டக் கட்டை என்பது புரிகிறது.

இருபது வருஷங்களாக மாடு போல உழைக்கும் என்னுடைய காரியாலய அதிபருக்கு என் மீது கருணை பிறக்கவில்லை. சம்பள உயர்வு, உத்தியோக உயர்வு, அதிகார உயர்வு ஒன்றுமில்லாமல் ஒரே சீராக என்னுடைய காரியாலய வாழ்வு இருந்து வருகிறது. பதினைந்து வருஷங்களுக்கு முன்பு என்னிடம் வேலை கற்றுக் கொண்ட சிறு பையன்கள் [இன்று] என்னையே கட்டி மேய்க்கும் அதிகார பீடத்துக்கு வந்து அமுல் நடத்தும் அளவுக்கு முன்னேற்றம் அடைந்திருக்கிறார்கள்! பத்து வருஷங்களுக்கு முன் என்னிடம் வந்து, 'உங்கள் ஆபீசில் ஒரு சின்ன வேலையாவது எனக்குப் பண்ணி வையுங்கள்' என்று கெஞ்சின பேர்வழிகள் இன்று சொந்தமாகத் தொழில் நடத்திக் கொண்டு செல்வத்தில் கொழிக்கிறார்கள். பத்தே வருஷங்கள் அவர்களுடைய வாழ்க்கையில் ஒரு மகத்தான புரட்சியை உண்டாக்கப் போதுமானதாக இருந்திருக்கின்றன! ஆனால் முப்பது வருஷங்கள் கால வெள்ளத்தில் கரைந்திருந்தும் அவை என்னுடைய வாழ்க்கையை ஓர் இம்மி அளவு கூட மாற்றச் சக்தியற்றிருக்கின்றன!

எனக்குத் தெரிந்து எத்தனை எத்தனை பேர் இந்த இடைக்காலத்தில் மடுவின் ஆழத்திலிருந்து மலையின் உச்சி வரையில் ஏறி இருக்கிறார்கள்? எக்ஸ்ட்ராக்களாகச் சினிமா உலகில் பிரவேசித்து, கையில் தட்டையோ அல்லது சட்டியையோ ஏந்தி நின்ற நடிகைகளும் நடிகர்களும் இந்தப் பத்துப் பதினைந்து வருஷங்களில் நட்சத்திரப் பதவிக்கே வந்திருக்கிறார்கள்! தலைக்கு நான்கைந்து கார்களும், நான்கைந்து வீடுகளும், நான்கைந்து லட்ச ரூபாய்களும் வைத்திருக்கிறார்கள்! எஸ். எஸ். எல். ஸி. வகுப்பில் என்னுடன் படித்துப் பிறகு நான் பி. ஏ. பாஸ் செய்த பிறகும் அந்த எஸ். எஸ். எல். ஸி. பரீட்சையைப் பிடிவாதத்துடன் பாஸ் செய்யாத என்னுடைய நண்பன் ஒருவன் இந்த இருபது வருஷங்களில் ஒரு பிரபலமான சினிமா டைரக்டர் ஆகி இருக்கிறான். இங்கிலீஷ் வார்த்தைகள் கட்டுப் போட்டாலும் அவனுடைய வாயில் நுழையா—அப்பொழுது. இப்பொழுதோ என்றால் அவன் வாயில் இங்கிலீஷ் தவிர வேறு ஒன்றும் நுழைவதில்லை! (அடிக்கடி சிகரெட் நுழைவது

## இலங்கையில் குன்றக்குடி அடிகள்



அருட்திரு குன்றக்குடி அடிகளார் இலங்கையில் சுற்றுப் பிரயாணம் செய்து நித்திக்கும் நீக் தமிழில் தெய்வ நெறியைப் பற்றிப் பிரசங்கமாரி பொழிந்தார்கள். சமய மறுமலர்ச்சியைப் பற்றி சாங்கோ பாங்கமாகப் பல இடங்களில் பேசினார்கள். அவர் சென்ற இடங்களில் எல்லாம் அடிகளின் சொற்பொழிவைக் கேட்க இலங்கை மக்கள் திரளாக வந்தனர்.

மட்டக்களப்புக்கு அடிகள் விஜயம் செய்தபோது மக்கள் குதூகலத்துடன் வரவேற்றனர். கழுதாவளையில் தமிழ்ப் பெருமக்கள் பூரண கும்ப மரியாதையுடன் அடிகளை வரவேற்று மகிழ்ந்தனர். அக்கரைப்பற்று ஸ்ரீ ராமகிருஷ்ண சங்க வித்யாலயத்தில் அடிகளார் விஜயத்தின் ஞாபகார்த்தமாக மாங்கன்றை நட்டது வன மஹோத்ஸவ வைபவமாகத் திகழ்ந்தது. விபுலானந்தா மணிமண்டபத்துக்குச் சென்று திருப்பெருந்திரு தெய்வசிகாமணி பரமாச்சாரியார் சிவபூஜை செய்து அருள் நெறியைப் பற்றி அருமையான பிரசங்கம் செய்தார். சிவானந்த வித்யாலயத்தில் பாரதி விழாவுக்குத் தலைமை தாங்கிச் சிறப்பித்தார். அக்கரைப்பற்றில் விபுலானந்த மணி மண்டபத்தில் அடிகளார் சொற்பெருக்காற்றுவதை மேலே படத்தில் காணலாம்.

இந்த விதிக்கு விலக்கு!) இங்கிலாந்துக்கும் அமெரிக்காவுக்கும் சுற்றுப் பிரயாணம் செய்ய அடிக்கடி அவன் கிளம்பி விடுகிறான்! ஆனால் நானோ சென்னையை விட்டு நூறு மைல்களுக்கப்பால் போய் அறிய மாட்டேன். விழுப்புரமும் வேலூரும் என் பிரயாண எல்லைகள்!

சினிமா பார்ப்பதை எடுத்துக் கொள்ளுங்களேன். நானும் விவரம் தெரிந்த நாளிலிருந்து நாடகங்களும் சினிமாக்களும் விடாமல் பார்த்து வருகிறேன். இந்த முப்பது வருஷங்களாக நான் கடைசி வகுப்புக்கு அடுத்த வகுப்பான எட்டணா, பத்தணா ஆசனங்களிலேயே உட்கார்ந்து என்னுடைய பொழுதைப் போக்கி வந்திருக்கிறேன். இப்பொழுதும் அதற்கு மேல் பணம் கொடுத்து மேல் வகுப்புகளில் உட்கார்ந்து படமோ நாடகமோ பார்க்கச் சக்தியற்றவனாக இருக்கிறேன் நான். ஆனால் இருபது வருஷங்களுக்கு முன் (நாடகங்களில்) தரை மகா ஜனங்களில் ஒருவராகவும், (சினிமாக்களில்) திரை மகா ஜனங்களில் ஒருவராகவும் இருந்த என்னுடைய நண்பர்களில் பலர் இன்று இரண்டரை ரூபாய் வகுப்பில்—மேலே பால்கனியில்—உட்கார்ந்து கொண்டு என்னைக் கீழ்ப் பார்வையாகப் பார்க்கிறார்கள்!

"இப்படி முன்னேற்றம் என்பதே இல்லாமல், இருந்த இடத்திலேயே மைல் கல்லைப்போல நின்று போய் விட்டோமே!" என்ற சிந்தனை தோய்ந்த முகத்துடன் ஒரு நாள் உட்கார்ந்த போதுதான் அந்த ஞானோதயம் எனக்கு ஏற்பட்டது. 'தம்மின் மெலியாரை நோக்கித் தமதுடைமை அம்மா பெரிதென்று அகமகிழ்க!' என்ற மூதுரையும் என்னுடைய நெஞ்சில் பளிச்சிட்டது. அன்று வரை சோகம் படர்ந்திருந்த என் முகத்தில் மகிழ்ச்சியின் ரேகை, திருப்தி பரவலாயிற்று.

சொந்த வீட்டுக்காரராயிருந்தவர்கள் இன்று எத்தனை பேர் நடுத் தெருவில் ஒண்ட இடமின்றி இருக்கிறார்கள்? தனி வீட்டில் குடி இருந்து ஏகபோகமாக இருந்தவர்களில் இன்று எத்தனை பேர் ஒண்டுக் குடியில் உழலுகிறார்கள்? முன்பு நட்சத்திரப் பதவி வகித்து ஆயிரக் கணக்கில் பணம் குவித்து அட்டகாசம் புரிந்த நடிக நடிகைகள் இன்று எக்ஸ்ட்ராக்களால் கூட மதிக்கப்படாமல் மூலையில் மறைந்து நிற்க வில்லையா? இதையெல்லாம் நினைத்துப் பார்க்கவேதான் எனக்குப் புதுத் தெம்பு ஏற்பட்டது. மாறும் உலகில் மாறாமல் மைல் கல்லைப் போல் இருக்கிறேனே என்று கவலைப்பட்ட நான், மாறும் சமுத்திரச் சுழலில் மணல் மேடு போல் கரைந்து மறைந்து ஒழியாமல் இருக்கிறேனே என்பதை நினைத்து இன்று மனம் மகிழ்கிறேன். கிட்டத்தட்ட ஒரு தலை முறையாக, ஒரே படியாக என்னுடைய வாழ்க்கையை-அதிக இன்பமும் அதிக துக்கமும் இல்லாமல் அமைத்துக் கொடுத்த ஆண்டவனுக்கு நன்றி செலுத்துகிறேன். நான் மாற விரும்பவில்லை!

# பாஷை நெருக்கடி

கொழும்பு, அக்டோபர் 28உ

இலங்கையின் உத்தியோக பாஷைப் பிரச்னை சென்ற வாரம் ஒரு புதிய பெரிய நெருக்கடியை அடைந்திருக்கிறது. இந்த நெருக்கடி அரசாங்கக் கட்சியிலேயே ஒற்றுமையையும் கட்டுப்பாட்டையும் சீர்குலைக்கும் அளவுக்கு முற்றிக் கொண்டு வருகிறது.

பாஷைப் பிரச்னை பற்றிய சர்ச்சையை முடித்து வைப்பதற்காகப் பிரதம மந்திரி ஸர் ஜான் கொத்தலாவல பார்லிமெண்டில் ஒரு அறிக்கையை விடுவித்தபொழுது, தமிழ், சிங்களம் ஆகிய இரண்டும் இலங்கையின் உத்தியோக பாஷைகளாயிருக்க வேண்டுமென்பது தான் சர்க்கார் கட்சியின் கொள்கையென்றும், சிங்களவர்களைப் போலவே தமிழர்களும் தங்களுடைய மொழி, பண்பாடு, கலாசாரம் முதலியவற்றைப் பாதுகாத்துக் கொள்ள விரும்புவது இயற்கையானதுதான் என்றும் கூறினார். பிரதமர் இதோடு நின்றிருந்தால் வகுப்புவாதிகளுக்கு ஊக்கமளியாமல் இருந்திருக்கலாம். அரசாங்கத்தின் தற்போதைய பாஷைக் கொள்கையில் மாறுதல் ஏதாவது செய்வதாயின் அரசாங்கக் கட்சி மகாநாடுதான் செய்ய வேண்டுமென்று பிரதமர் தெரிவித்தார். இது தமிழரை ஒழித்துக் கட்ட ஒரு காலில் நிற்கும் வகுப்புவாதிகளுக்கு வழிகாட்டிக் கொடுத்த மாதிரியாகி விட்டது. சிங்களத்தை மாத்திரமே இலங்கையின் அரசாங்க பாஷையாகப் பிரகடனப் படுத்த வேண்டுமென்று ஒரு தீர்மானத்தைச் சர்க்கார் கட்சியில் கொண்டுவர ஒரு சிங்கள அங்கத்தினர் முன்னறிக்கை கொடுத்து, அந்தத் தீர்மானத்தை விவாதிக்கச் சர்க்கார் கட்சியின் விசேஷ மகாநாடு ஒன்றைக் கூட்ட வேண்டுமென்று கேட்டிருக்கிறார்.

பிரதமர் ஸர் ஜான் இப்பொழுது ஆஸ்திரேலியாவில் ஆறுவார காலம் சுற்றுப் பிரயாணம் செய்யப் புறப்பட்டுப் போயிருக்கிறார். ஆஸ்திரேலியாவிலிருந்து அவர் திரும்பியவுடன் மேற்படி தீர்மானத்தைப் பற்றி விவாதிக்க அரசாங்கக் கட்சி மகாநாடு ஒன்றை அவர் கூட்டியாக வேண்டும். நாட்டில் பெரிய நெருக்கடியை உண்டு பண்ணக் கூடிய பிரச்னையில் மக்கள் பொறுமையும் சகிப்புத் தன்மையும் காட்ட வேண்டுமென்று ஸர் ஜான் ஆஸ்திரேலியாவுக்குப் புறப்படுகையில் சொல்லிவிட்டுப் போயிருக்கிறார். அவருடைய இந்த உபதேசம் பிள்ளையைக் கிள்ளி விட்டுத் தொட்டிலையும் ஆட்டிய கதையைப் போலிருக்கிறதென்று பாரபட்சமின்றி எழுதும் 'ஸிலோன் டைம்ஸ்' பத்திரிகை கூடத் தாக்கியிருந்தது.

சர்க்கார் கட்சியில் தமிழ் அங்கத்தினர்களும் தமிழைத் தாய்பாஷையாகக் கொண்ட முஸ்லிம் அங்கத்தினர்களும் அநேகர் இருக்கிறார்கள். தமிழும் அரசாங்க பாஷையாக இருக்கும் என்ற வாக்குறுதியின் பேரிலேயே இவர்கள் சர்க்கார் கட்சியில் சேர்ந்தார்கள். சிங்களத்தை மட்டும் அரசாங்க பாஷையாக்குவது என்று சர்க்கார் கட்சி தீர்மானிக்குமானால் அதன் பிறகு ஸர் கந்தையா வைத்தியநாதன், ஸ்ரீ வி. குமாரசாமி, ஸ்ரீ ராசமாணிக்கம், ஸ்ரீ நடேசன் போன்ற தமிழ் அபிமானிகள் சர்க்கார் கட்சியில் தொடர்ந்து இருப்பதற்கில்லை. தொடர்ந்திருந்தால் அவர்களுக்குத் தமிழ் மக்களின் ஆதரவு தொடர்ந்து கிடைப்பதற்கும் இல்லை. சிங்களத்தை மட்டும் ராஜாங்க பாஷையாக்குவதைக் கடுமையாக எதிர்ப்பேன் என்று மந்திரி டாக்டர் கலீல் ஏற்கனவே தெரிவித்திருக்கிறார். அவர் தெரிவித்திருக்கும் இந்த அபிப்பிராயம் இலங்கை முஸ்லிம்களின் அபிப்பிராயமாகக் கொள்ளலாம். சர்க்கார் கட்சியிலுள்ள தமிழ் பேசும் அங்கத்தினர்கள் தங்களுக்குள் ஒரு மகாநாடு கூடி நிலைமையை ஆராயத் திட்டமிட்டிருக்கிறார்கள். அவர்கள் கூட்டாகச் சர்க்கார் கட்சியிலிருந்து வெளியேறுவதென்று தீர்மானித்தால் ஆச்சரியப் படுவதற்கில்லை.

இந்த நிலைமையில் பிரதம மந்திரி ஸர் ஜான் சர்க்கார் கட்சியைச் சீர்குலையச் செய்யாமல் பாதுகாக்க வேண்டுமானால் அவருடைய கடமை தெளிவானது. இலங்கை சிங்களவர்களுக்கு மட்டும் சொந்தமல்ல என்பதையும் இந்நாட்டில் சிங்களவர்களுக்கு இருக்கும் உரிமை தமிழர்களுக்கும் முஸ்லிம்களுக்கும் உண்டு என்பதையும் தமது சகாக்களுக்கு எடுத்துக் காட்ட வேண்டும். தமிழ், சிங்களம் ஆகிய இரண்டையும் உத்தியோக பாஷைகளாக்குவது என்ற கட்சிக் கொள்கையை மாற்றுவதற்கு உடன்படாமல் இருக்க வேண்டும். இவ்வித நடவடிக்கை எடுக்கும் துணிச்சல் ஸர் ஜான் ஒருவருக்கு மட்டும்தான் உண்டு என்பதில் ஆட்சேபணையில்லை. இந்தத் துணிச்சலை அவர் நெருக்கடியான இந்தக் கட்டத்தில் காட்டி ஜனநாயக தர்மத்துக்கு உயிர் கொடுப்பாரா என்பதே கேள்வி.

— ரஜனி

# நான்தான் டீ

நான் நாட்டிற்குச்
செல்வத்
தைக்கொண்டு
வருகிறேன்

என் கதை சிலருக்கு கட்டுக் கதையாகத்தோன்றலாம், ஆனால் அது முற்றிலும் உண்மையே! தோட்டத்தில் வளர்ந்த நாளில் என்னைச் சுற்றி ஏகராக் கணக்காக வளரும் தேயிலை அனைத்தையும் மக்கள் குடிக்கமுடியுமென்று கனவிலும் நான் எண்ணவில்லை...இந்த நாட்டை விட்டு வருஷாவருஷம் கடல்கடந்து கோடிக்கணக்கான வீடுகளில் சந்தோஷமூட்டுவேன் என்றும் நினைக்கவேயில்லை.

இன்று, என்னுடைய தாய்நாட்டுக்கு 147 கோடி ரூபாய் கொடுக்க வேண்டுமாயினும் வெளிநாட்டு மக்கள் தேநீர் குடிக்காமலிருக்க முடியவில்லை. நம்நாட்டு ஏற்றுமதி வியாபாரத்தில் மிக்க அதிகமாக நாட்டுக்கு சம்பாதித்துக் கொடுத்தது நான்தான்.

இதுமட்டுமல்ல மத்ய, ராஜ்ய சர்க்காருக்கும் ஏற்றுமதி வரி, கலால், விவசாயவரி, ஸேல்ஸ் வரி, சுங்கம், வருமான வரி முதலியன மூலம் நிறைய பணம் கொடுக்கிறேன். என் உதவியினால் எங்கள் அரசாங்கம் இத்தனை திட்டங்களை நிறைவேற்றுவது கண்டு நான் பெருமிதம் கொள்கிறேன்...என்னுடைய நாட்டின் செல்வத்தையும் பலத்தையும் நாளுக்கு நாள் பெருக்கும் திட்டங்கள்.




நான்தான் டீ — தேசப்பணி செய்கிறேன்



# தக்ஷிண ரயில்வே & இண்டக்ரல் கோச் பாக்டரி

வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்படும் ரயில்வே இயந்திர சாதனங்களின்

## காட்சிக் கூடம்

பெரம்பூர் காரேஜ் ஒர்க்ஸ் ரயில்வே ஸ்டேஷன் சமீபத்தில்

எல்லா வேலை நாட்களிலும் காலை 10 முதல் 1 மணி வரையிலும் மாலை 2 முதல் 5 மணி வரையிலும் சனிக்கிழமைகளில் 10 முதல் 1 மணி வரையிலும் பொதுமக்களின் பார்வைக்குத் திறந்து வைக்கப்படும். ஞாயிற்றுக்கிழமைகளிலும் மற்ற விடுமுறை நாட்களிலும் காட்சிக் கூடம் மூடப்படும்

பல பிரபல தொழில் பிரமுகர்கள் காட்சிக் கூடத்தைப் பார்வையிட்ட பின் அவர்கள் தெரிவித்த அபிப்பிராயங்களில் சிலவற்றைக் கீழே தருகிறோம்.

★ "பிற தொழில்களில் ஈடுபட்டிருப்பவர்கள் எவ்விதம் ரயில்வேக்களுக்கு உதவலாம் என்பதை இக்காட்சி தெள்ளத் தெளிவாக எடுத்துக் காட்டுகிறது."

★ "இந்திய வியாபாரிகள் இதைப் பார்த்து எப்படி இந்தியத் தொழில்களை அபிவிருத்தி செய்யலாம் என்று தெரிந்து கொண்டு அவைகளைக் கடைப்பிடிக்கட்டும்."

★ "நமது தொழில் முன்னேற்றத்துக்காக ஏற்படுத்தப்பட்ட இக்காட்சியைப் பார்த்து பரம திருப்தி அடைந்தேன்."

★ "நன்கு அமைக்கப்பட்ட பொருட்காட்சி."

★ "இக்காட்சிசாலையில் வைக்கப்பட்டுள்ள சில ரக அபூர்வமான சாமான்களை சிறு மூலதனத்துடன் நடத்தப்படும் தொழிற்சாலைகள் உற்பத்தி செய்யக்கூடும்."

★ "தொழிற்துறையிலுள்ள எல்லா பகுதியையும் ஒருங்கே காணுமாறு நன்கு ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது."

★ "எங்களுக்கும் மற்றும் வருங்கால உற்பத்தியில் ஈடுபடக் கூடியவர்களுக்கும் எத்தகைய தேவைகளைப் பூர்த்தி செய்ய வேண்டியிருக்கும் என்பதை உங்கள் காட்சிசாலை மிகத் தெளிவாக எடுத்துக் காட்டுகிறது. வந்தனம்"

நீங்கள் இன்னும் இந்தக் காட்சிக் கூடத்தைப் பார்க்காவிடில் விரைவில் விஜயம் செய்து காட்சிக்கு வைக்கப்பட்டுள்ள 1,236 பொருள்களை பார்வையிடக் கேட்டுக்கொள்வதோடு, அவைகளில் எந்தப் பொருள்களை நீங்கள் உற்பத்தி செய்து ரெயில்வேக்களுக்கு சப்ளை செய்ய முடியும் என்பதையும் நிர்ணயிக்கக் கோருகிறோம். காட்சிப் பொருள்களின் காட்லாக் காட்சிக்கூடத்தில் 0—12—0 விலைக்குக் கிடைக்கும்.

மேலும் விவரம் தெரிந்து கொள்ள விரும்பினால் காட்சிக் கூடத்தின் நிர்வாகிக்கு எழுதிக் கேளுங்கள். போன்: 61653

கண்ட்ரோலர் ஆப் ஸ்டோர்ஸ்,
தக்ஷிண ரயில்வே, சென்னை - 23




## 30. சகோதரி சாவித்திரி




'அன்னை காவேரிதான் எனக்குப் புகல். என்னைப் போன்ற தாயற்ற அனாதைகளுக்குத் தாயும் தந்தையும் அந்தக் காவேரி அன்னைதானே!' என்று எண்ணி அந்தத் துயரமான முடிவுக்கு வந்த சந்திரிகா, கண்ணீர் வடித்துக் கொண்டே கடிதம் எழுதினாள் அல்லவா? அப்படி எழுதி வைத்துவிட்டு அவள் மறைந்ததால் தானே இத்தனை குழப்பங்களும் சேர்ந்தன? ஆனால் உண்மையில் சந்திரிகா என்ன ஆனாள்? ரவீந்திரனுடைய வீட்டிலிருந்து அவள் இரவு அத்தனை நேரத்துக்குப் பிறகு யாருக்கும் தெரியாமல் வெளியே கிளம்பிய பின் என்னதான் நடந்தது?

ஆண்டார் தெருவில் இரவு சுமார் மூன்று மணிக்கு யாரோ ஒரு பெண் நடந்து போனதைக் கண்டதாக ரோந்து சென்ற போலீஸ்காரர்கள் சொன்னது உண்மைதான். அந்த நேரத்தில் அப்படி ஆண்டார்தெரு வீதியிலே நடந்து சென்றவள் சந்திரிகாவே தான். அவள் காவேரிக் கரையை நோக்கித்தான் நடந்தாள். அதுவும் உண்மைதான். ஆனால் அப்படி அவள் காவேரியை நோக்கி நடந்து சென்றபோதுதான் அந்த மனப்போராட்டமும் நடந்தது!

திருச்சிராப்பள்ளியில் சிந்தாமணிப் படித்துறையைத் தாண்டினால் ஆழமான ஒரு கசம் இருக்கிறது என்று சந்திரிகாவுக்குத் தெரியும். கேள்விப்பட்டிருக்கிறாள். அந்த இடத்தை நோக்கித்தான் அவள் நெடுஞ்சாலை வழியாக நடந்து கொண்டிருந்தாள்.

அப்பொழுது அந்தச் சாலை வழியாக உறங்கிக் கொண்டே நடந்து செல்கிற மாடுகள், பாரமான வண்டியையும் உறங்கி விழும் வண்டிக்காரரையும் சேர்த்து இழுத்துக் கொண்டு, தங்களைத் தாங்களே ஓட்டிக் கொண்டே வழி நடந்தன. வரிசை வரிசையான அந்தப் பார வண்டிகளுக்குப் பின்னால் கடைசியிலே வந்த ஒரு பார வண்டியில் மட்டும், வாலிபன் ஒருவன் உறங்காமல் கண் விழித்தவாறு பாடிக்கொண்டேயிருந்தான். தன்னுடைய காதலியை நினைத்து உறக்கம் வராத விழிகளை நன்றாகத் திறந்து வைத்துக் கொண்டு இருந்தாலும், அவனுடைய பார்வையெல்லாம் பாதையிலே இல்லை. அந்தப் பார்வை மனத்துக்கு உள்ளே சென்று, அங்கே மனப் பீடத்தில் அமர்ந்திருக்கும் அவனுடைய காதலியைத்தான் கற்பனையிலே பார்த்துச் சொக்கிக் கொண்டிருந்தது. வாயோ அந்தப் பாட்டை ஆனந்தமாகப் பாடிய வண்ணம் அப்படியே அசை போட்டுக் கொண்டு இருந்தது.

**பருப்பு பிடிக்கும் வண்டி—இது**
**பட்டணந்தான் போகும்வண்டி**
**பருப்பிலே ஆகட்டுண்டி—தங்கரத்தினமே**
**பதக்கம் பண்ணிப் போடுறேண்டி**
**—பொன்னுரத்தினமே**

**அரிசி பிடிக்கும் வண்டி—இது**
**அவினாசி போகும் வண்டி**
**அரிசியிலே ஏறட்டுண்டி—தங்கரத்தினமே**
**அட்டி பண்ணிப் போடுறேண்டி**
**—பொன்னுரத்தினமே**

கொன்னு பிடிக்கும் வண்டி—இது
கோட்டைதாண்டிப் போகும் வண்டி
கொன்னுவிலே ஏறட்டுண்டி—தங்கரத்தினமே
கொலுசு பண்ணிப் போடுறேண்டி
—பொன்னுரத்தினமே

வாழப் பிறந்த வண்டி—இது
வாழவகை செய்யும் வண்டி
மானப் பிறவியல்லோ—தங்கரத்தினமே
மனுசப் பிறவியடி !
—பொன்னுரத்தினமே

சாலை யோரமாக நடந்து சென்ற சந்திரிகா இந்தப் பாடல் காதில் விழுந்



ததும் திகைத்துப் போய் நின்றான். எத்தனையோ வர்ண மெட்டுக்களையும், தென்னாட்டு சங்கீதத்தின் வகை தொகைகளையும் கேட்டுப் பண்பட்டிருந்த அவனுடைய செவிகளில் இந்தப் பாட்டின் எளிமையான மெட்டும், அந்த வண்டிக்காரனின் இயற்கையான குரலும் அதில் இழைந்து வந்த பாடலின் உணர்ச்சியும், அதில் ஊடுருவி நின்ற தன்னம்பிக்கையும் புகுந்து மனத்தை என்னவோ செய்தன.

எத்தனையோ வறுமையிலும் துன்பத்திலும் சிக்கியுள்ள ஒரு



ஏழைக் குடியானவனுடைய பாட்டுத்தான் அது. ஆனால் அதில் எத்தனை தன்னம்பிக்கை. தன்னுடைய காதலியினிடத்திலே உள்ள பாசத்தினால் என்னென்ன இலட்சியக் கனவுகள் எல்லாம் அவனுடைய உள்ளத்தில் உண்டாகின்றன. எத்தனை துன்பத்துக்கு மத்தியிலும் அவனுக்கு விரக்தியோ அவநம்பிக்கையோ ஏற்படக் காணோமே. அதிலும் அவன் பாடிய அந்தக் கடைசி வரிகள் தான் எத்தனை உண்மை!

**"மாளப் பிறவியல்லோ—**
**மனுசப் பிறவியடி!"**

பாரவண்டி சாலையோரமாக நகர்ந்து இப்பொழுது தொலை தூரம் சென்று விட்டது. ஆனாலும் அந்த வண்டிக்காரனுடைய குரல் தொலைவில் எங்கோ ஒரு தெய்வ உலகிலிருந்து வரும் நாதமாக மெதுவாகக் கேட்டது.

**"மாளப் பிறவியல்லோ—**
**மனுசப் பிறவியடி"**

சந்திரிகா நினைத்தாள்: 'இந்த வண்டிக்காரனுடைய வார்த்தைகளில் எத்தனை பெரிய தத்துவம் அடங்கியிருக்கிறது. 'புல்லில் இருந்து பரிணமித்து மனிதன் வந்திருக்கிறான்' என்றெல்லாம் விஞ்ஞானிகள் சொல்லுகிறார்கள். இந்த ஒரு ஜன்மத்தோடு முடிகிற காரியமில்லை மனிதப் பிறவி, என்று மகான்கள்சொல்கிறார்கள். உண்மை தானே.

சந்திரிகா எண்ணினாள்: 'நான் இப்படியே காவேரி நதியிலே போய் விழுந்து விடலாம். உயிரை முடித்துக் கொண்டு விடலாம். இந்தவாழ்க்கையின் இன்னல்களைத் தாங்க முடியாமல் இப்படி ஒருமுடிவு செய்து கொள்ளலாம். ஆனால் இறந்த பிறகு நமக்காகக் காத்

திருக்கும் வாழ்க்கை இதைவிட இன்பமாக இருக்கும் என்று யார் கண்டார்கள்? அதிலும் இப்படி ஒரு துர் மரணத்தினால் சாவு கிட்டியது என்றால் பிறகு அதன் விளைவு எப்படி யிருக்குமோ? அல்லது மறுஜன்மம் கிடைக்கிறது என்று வைத்துக் கொள்ளலாம். அந்த மறுஜன்மம் மட்டும் சிக்கலின்றி ஒரே சீராக அமைந்து விடும் என்பது என்ன நிச்சயம்?'

இப்படி நினைத்துப் பார்த்ததும் சந்திரிகா ஒரு கணம் சாலையோரத்திலே நின்ற மருத மரத்தின் அடியில் நின்றாள். மீண்டும் யோசித்தாள்:

'தற்கொலை ஒன்றுதான் வாழ்வின் சிக்கல்களுக்கு ஒரே விடை என்றால், மரணத்தைப் போன்ற சஞ்சீவி உலகில் வேறு எது உண்டு? பின் ஏன் அறிவாளிகள் எல்லாம் தற்கொலையை வெறுத்துப் பேசி யிருக்கிறார்கள்?'

சந்திரிகா மனம் கலங்கினாள்.

'நான் தற்கொலை செய்ய நினைப்பது எனக்காக மட்டும் இல்லையே. என்னை அன்போடு வளர்த்து, பாடப் படிக்க வைத்துக் கைதூக்கி விட்ட அந்தப் புண்ணியவாளனுடைய வாழ்க்கையில் அமைதியை நிலைநாட்டத்தானே. அப்படி அமைதியை நிலைநாட்ட, ஒரு பாபம் செய்துதான் ஆக வேண்டும் என்றால் ஏன் அதையும் செய்யக் கூடாது?'

இப்படி எண்ணியபோதே மறுவிநாடி இன்னொரு நினைப்பும் பளிச்சிட்டது.

'உண்மையில் நான் தற்கொலை செய்து விடுவதால் ரவீந்திரனுடைய மனத்தில் அமைதி உண்டாகி விடுமா? அவருடைய ஒரே இலட்சியம், புகழ் பெற்ற கங்கமுத்து நட்டுவனாரின் பரம்பரைச் சொத்தான இசைச் செல்வம் வழிவழியாகத் துலங்கிக் கொண்டு இருக்க வேண்டும் என்பதல்லவா? நான் இப்படியே மடிந்து விட்டால் இனி என்ன ஆகும்! அவருடைய ஒரே பரம்பரைச் சொத்தான அந்த இசைச் செல்வத்தை ரவீந்திரன் எத்தனை ஆசையோடு தனக்கு வழங்கினார். தன்னுடைய உடம்பைக் காவேரியிலே ஆழ்த்திவிட்டால் அந்த இசைச் செல்வமும் அல்லவா ஆற்றோடு போய்விடும்! கங்கமுத்து நட்டுவனாரின் பரம்பரையே காவேரியோடு போய் விட்டது என்றல்லவா ஆகிவிடும்? என்ன பைத்தியக்கார நினைப்பு இது!'

இப்படி எண்ணியதும் சந்திரிகா அந்த மரத்தடியில் நன்றாகக் கால்களைப் பாவிக் கொண்டு நிதானமாக நின்றாள்.

'சரி; தற்கொலை செய்து கொள்வது அறியாமை. ஆனால் மீண்டும் வீட்டுக்குத் திரும்புவதா? அது அதை விடப் பெரிய அறியாமை. இனி ஒரு கணம் அந்த வீட்டில் இருந்தாலும் அது குருத் துரோகம். அவருடைய வாழ்க்கையைப் பாழ்படுத்துவதாகும். அப்படியானால்...'

'இப்படியே யாருடைய கண்ணிலும் படாமல் எங்காவது ஓடி மறைந்துவிட்டால் என்ன?' என்று எண்ணினாள் சந்திரிகா.

இப்படி நினைத்ததும் சந்திரிகாவுக்கு ராமநாதன் சொன்ன விவரம் பளிச்சென்று ஞாபகம் வந்தது.

'ராமநாதனுடைய சகோதரிகளில் ஒருத்தி பம்பாயில் இருக்கிறாள் என்றாரே. அங்கே மாதுங்காவில் கூட இப்பொழுது புதிதாக ஒரு நாட்டியப் பள்ளிக்கூடம் ஆரம்பித்திருப்பதாகச் சொன்னாரே. இப்படியே நாம் பம்பாய் போய்ச் சேர்ந்து விட்டால் என்ன? கங்கமுத்து நட்டுவனாரின் பரம்பரை திருச்சியிலே தழைப்பதற்குத்தானே மார்க்கம் இல்லை. யாருக்கும் தெரியாமல் அந்த தூரப் பிரதேசத்தில் நம்முடைய குரு காணிக்கையாக இந்தச் சேவையைச் செய்து கொண்டிருந்தால் என்ன? இத்தனை பாடு பட்டு நம்மை முன்னுக்குக் கொண்டு வந்தவரிடம் சொல்லாமல் கொள்ளாமல் ஓடிப் போகிற இந்தப் பாபத்துக்கு, அதை விடச் சரியான பிராயச் சித்தம் வேறு என்ன இருக்க முடியும்?'

இப்படி நினைத்ததும் சந்திரிகா அந்த மரத்தடியில், மறைவிலே யிருந்த ஒரு சிறு கல்லின் மேல் உட்கார்ந்தாள். பத்து நிமிஷம் அப்படியே மௌனமாக இருந்து யோசனை செய்தாள்.

'ஆமாம்; அதுதான் சரியான முடிவு. அதைச் செய்து பார்ப்போம். மீண்டும் அது சரிப்படவில்லை யென்றால், மரணம் என்ற மருந்து எங்கே போய் விட்டது? அந்தக் கைகண்ட மருந்து காவேரித் தண்ணீரில் மட்டுந்தான் கரையுமா? பம்பாயில் ஒரு ஆறோ, குளமோ, கிணறோ இல்லாமலா போகிறது. ஏன், அங்கே பெரிய கடலே இருப்பதாகச் சொல்கிறார்களே!'

இப்படி நினைத்துக் கொண்டே சிரித்தாள் சந்திரிகா. அந்தச் சிரிப்பில் வேதனை



தெறித்த போதிலும் அந்த வேதனையிலுங் கூட ஒரு தெளிவு துலங்கியது. துன்பச் சிரிப்புத்தான். ஆனால் அந்தத் துன்பச் சிரிப்பிலே குழப்பம் இல்லை. ஒரு உறுதிப்பாடு இருந்தது.

உயிரை விடுவது என்ற நிர்மானத்தில் இருந்தபோது அந்த ஏகாந்தமான சாலையும், மரம் செடிகளும் அவளுக்குப் பயமாகவே இல்லை. இப்பொழுது கங்காமுத்து நட்டுவனாரின் இசைப் பரம்பரையைப் பாதுகாக்க வேண்டும் என்ற கடமை உணர்ச்சி மேலிட்டதோ இல்லையோ, மறு கணம் அந்தச் சாலை ஒரே பயங்கரமாக இருந்தது. மருத மரமும், புளிய மரமும் தலை விரித்தாடும் பூத பைசாசங்களாகக் காட்சி தந்தன. சாலையின் நிசப்தத்தூடே மரங்களிலே காற்று ஊளையிட்டுச் செல்வது, சந்திரிகாவின் காதில் விவரிக்கமுடியாத அச்சத்தை உண்டாக்கியது. அப்படியே அந்த இடத்திலிருந்து எழுந்து வேகமாகத் திரும்பி நடக்க ஆரம்பித்தாள் அவள்.

*  *  *

**ப**ம்பாய் மாதுங்காவில் மாதர் கலைச் சங்கத்திலே கலை விழாவுக்கான ஏற்பாடுகள் இரண்டு வாரங்களுக்கு முன்பிருந்தே ஏக அமர்க்களமாக நடந்து கொண்டிருந்தன. புதிதாக ஆரம்பித்திருந்த சங்கம் ஆனதால், காரியதரிசி சாவித்திரி அம்மாள் இரவும் பகலும் ஊண், உறக்கம் இல்லாமல் நிகழ்ச்சி நிரல் தயாரிப்பதும், நன்கொடை வசூலிக்க அங்கத்தினர்களை நாலு திசைக்கும் அனுப்புவதுமாக ஒரே சுருசுருப்பாக இருந்தாள், சங்கக் காரியாலயத்தில் தன்னுடைய அறையிலே. அப்பொழுது தான் சங்கத்தைச் சேர்ந்த ஒரு சிறுமி வந்து வெளியே யாரோ திருச்சியிலிருந்து ஒரு பெண்மணி காரியதரிசியைப் பார்க்க வந்திருப்பதாக அறிவித்தாள். வேறு யாருமாக இருந்தால் அத்தனை வேலைகளுக்கு மத்தியில் 'பார்க்க முடியாது' என்று சொல்லி யனுப்பி யிருப்பாள் சாவித்திரி அம்மாள். ஆனால் திருச்சியிலிருந்து என்று சொன்னதும், பிறந்த ஊர்ப்பாசம் சாவித்திரி யம்மாளை ஆட்கொண்டது. 'உள்ளே வரச்சொல்' என்றாள்.

'திருச்சிப் பெண்மணி' காரியதரிசியின் அறைக்குள்ளே நுழைந்ததும் அப்படியே திகைத்துப் போய் நின்று விட்டாள்.

“என்னம்மா இப்படித் திகைத்து நிற்கிறாய்? இதற்கு முன்பு என்னை எங்காவது சந்தித்திருக்கிறாயா?” என்று கேட்டாள் சாவித்திரியம்மாள்.

“அப்படி எண்ணித்தான் திகைத்து விட்டேன். உங்களைப் பார்த்தால் உங்களுடைய தம்பியின் முகஜாடை அப்படியே இருக்கிறது!” என்றாள் சந்திரிகா.

“ராமநாதனைத் தெரியுமா உனக்கு? உட்காரம்மா. நிற்கிறாயே! ராமநாதனுக்குப் புடவை கட்டினால் என்னைப் போலவே இருக்கும் • என்று அவனே அடிக்கடி சொல்லுவான். வேடிக்கையில்லை. அவன் காலேஜில் படிக்கும்போது ஒரு நாடகத்தில் அவனுக்குப் பெண் வேஷம் போட்டார்களாம். என்ன ஆயிற்று தெரியுமோ? அவனோடு படித்த பிள்ளைகள் எல்லாம் அவனைச் சாவித்திரி சாவித்திரி என்று கூப்பிட ஆரம்பித்து விட்டார்களாம்!”

இப்படிச் சொன்னபோது சாவித்திரியம்மாளுடைய குரலிலும் முகத்திலும் தம்பியென்ற வாஞ்சை அப்படியே பிரதிபலித்தது. சந்திரிகா அதைக் கவனித்தாள்.

“உனக்குத் திருச்சியா அம்மா?” என்று கேட்டாள் சாவித்திரி அம்மாள்.

“ஆமாம்” என்று ஒரே வார்த்தையில் பதில் சொல்லி விட்டு, அதற்குமேல் என்ன சொல்வது என்று தெரியாமல் விழித்தாள் சந்திரிகா.

“திருச்சியில் எந்தத் தெரு?” என்று கேட்டாள் சாவித்திரி.

“தாயுமானவர் தெரு” என்று சொல்லும் போதே திகைத்து நின்று விட்டாள் சந்திரிகா. பழைய ஞாபகம் அது. புதிய இடமான ஆண்டார் தெரு மனத்திலே இன்னும் பதிந்து வார்த்தையிலே வருவதற்கு உரிய காலம் ஏற்படுவதற்கு முன்புதான், இத்தனை குழப்பம் எல்லாம் ஆய் விட்டதே.

இவ்வாறு எண்ணியவளாக, சந்திரிகா தன்னையும் மறந்து பெருமூச்சு விட்டாள்.

“தாயுமானவர் தெருவா! அதற்கு ஏனம்மா இத்தனை பெருமூச்சு விடுகிறாய். இந்தப் பம்பாய் வீதிகளைப் போல இல்லை தான் அது. ஆனாலும் எத்தனை அடக்கமான இடம் அது. அதிலும் தம்பி இருந்தானே அந்த வீடு எத்தனை நிம்மதியான வீடு. எனக்கு என்னவோ இந்தப் பம்பாய் இரைச்சலில் இருந்து இருந்து அலுத்து விட்டது. பேசாமல் தாயுமானவர் தெரு



விலே போய் இரண்டு மாதம் இருந்து விட்டு வந்தால் என்ன என்று தோன்று கிறது. மனசுக்கு எத்தனை குளுமையான இடம் அது!'' என்றாள் சாவித்திரி.

தாயுமானவர் தெரு, அடக்கம், நிம்மதி, குளுமை — இந்த வார்த்தைகள் எல்லாம் அனலும் புகையுமாகக் குமைந்தன சந்திரிகாவுக்கு. அப்படியே கண் கலங்கியது.

இந்த இடத்தில் சாவித்திரி அம்மாள் பேச ஆரம்பித்தாள்: "என்ன செய்ய! ஊரை நினைத்தால் மனசு நெகிழத்தான் செய்கிறது. அதிலும் ஊரை விட்டு எத்தனைக்கு எத்தனை தொலை தூரம் வரு கிறோமோ, அத்தனைக்கு அத்தனை ஊர்ப் பாசம் அதிகரிக்கிறது! கண்கலங்கத்தான் செய்யும்'' என்றாள் சாவித்திரி. இப் பொழுது சந்திரிகாவுக்கு அழுகையே வந்து விட்டது. கஷ்டப்பட்டு அதை அடக்க முயன்றாள்.

"நான் ஏதோ ஊர்க்கதை பேச ஆரம் பித்து விட்டேன். நீ எப்பொழுது அம்மா பம்பாய்க்கு வந்தாய்? என்னுடைய விலா சம் தம்பி சொன்னானா? அவன் தில்லிக்குப் போய்ச் சேர்ந்து சேற்றுத்தான் கடிதம் வந்தது. உனக்கு அவனைத் தெரியுமா?''— இப்படிச் சரமாரியாகக் கேள்விகளைப் போட்டுக் கொண்டே வந்த சாவித்திரி அம்மாள் சந்திரிகாவின் முகத்தில் ஏற்பட்ட குழப்பத்தைக் கண்டு 'ப்ரேக்' போட்டுக் கொண்டாள்.

"பார்த்தாயா! நான் பாட்டுக்குக் கேள்வி மேல் கேள்வியாகப் போடுகிறேன். நீ எதற்கு என்றுதான் பதில் சொல்வாய்— இப்பொழுது சொல். முதலில் நீ எப் பொழுது பம்பாய்க்கு வந்தாய்? எங்கே தங்கி யிருக்கிறாய்? உனக்கு இங்கே யார் உறவு?''

சந்திரிகா ஒரு தரம் இருமிக் குரலைச் சரிப்படுத்திக் கொண்டாள்.

"பார்த்தாயா? அதற்குள் சேர்த்தாற் போல் மூன்று கேள்விகேட்டு விட்டேனே! மன்னித்துக் கொள் அம்மா. எனக்கு இந்தக் கலை விழாச் சந்தடியில் நிதானமே தவறிப் போய் விட்டது. சொல்லம்மா. நீ பம்பாய்க்கு வந்து எத்தனை நாள் ஆகிறது?''

"இன்றுதான்!'' என்றாள் சந்திரிகா.

"இன்றைக்கா? காலையிலா?''

"இப்பொழுது தான்!'' என்றாள் சந்திரிகா.

"அப்படியானால் எங்கே தங்கி யிருக் கிறாய்?''

"இன்னும் எங்கும் தங்கவில்லை!''

"ஓ! ஸ்டேஷனிலிருந்து நேரே வரு கிறாயா? அப்படியானால் உன்னுடைய சாமான்கள்?''

"ஒன்றுமில்லை.''

"என்ன?'' என்று கேட்டுக்கொண்டே நாற்காலியிலிருந்து எழுந்தாள் சாவித்திரி அம்மாள். சந்திரிகா மிகக் கஷ்டப்பட்டு நிதானத்தை வரவழைத்துக் கொண்டாள்.

"அம்மா! உங்களுடைய தம்பி எங்கள் குடும்பத்துக்கு மிகவும் வேண்டியவர். அவர் சொன்ன தகவலை வைத்துத்தான் இங்கே வந்திருக்கிறேன்!''

"பெட்டி படுக்கை யெல்லாம் என்ன ஆயிற்று. ரயிலில் களவு கொடுத்து விட் டாயா? ஐயய்யோ!'' என்று அங்கலாய்த் தாள் சாவித்திரி.

"அம்மா, நான் இங்கு வந்து சேர்ந்தது ஒரு கதை. அதை சாவகாசமாய்த் தான் சொல்ல வேண்டும். உண்மையைக் கூறு வதா யிருந்தால் நான் பிறந்ததே ஒரு கதை. நான் வளர்ந்தது ஒரு கதை. நான் ஆடியது, பாடியது எல்லாம் ஒரு கதை. இங்கே வந்து சேர்ந்ததும் ஒரு கதைதான். அதை யெல்லாம் சொல்லுவதாயிருந்தால் இந்த ஒரு நாள் போதாது!''

சாவித்திரி அம்மாள் மௌனமாகி விட் டாள். தனக்கு எதிரே ஒரே சோகமாக உட்கார்ந்திருந்த அந்தத் திருச்சி நங்கையை ஆராய்ந்து பார்த்தாள். அந்த முகத்தின் அசாதாரண எழிலும், கண்களின் தீட்சண் யமும், உடம்பிலே ஊடாடிய ஒயிலும் அவளைக் கவர்ந்தன.

"சரி! அதெல்லாம் சாவகாசமாகப் பேசு வோம். ஒரே ஒரு கேள்வி மட்டும் கேட் கிறேன். நீ ஆடியதும் பாடியதும் என்று சொன்னாயே, அப்படியானால் உனக்கு நடனமும் பாட்டும் தெரியுமோ?''

"தெரியும். அதுதான் இத்தனைக்கும் காரணமாக—'' என்று சந்திரிகா வாக் கியத்தை முடிப்பதற்குள் சாவித்திரி அம்மாள் குறுக்கிட்டாள்.

"ஏனம்மா, நீதான் அந்தச் சந்திரி காவோ?''

அடுத்த விநாடி சந்திரிகாவுக்கு மூச்சே நின்று விடும் போல் இருந்தது. 'தலை மறைவாக யாருக்கும் தெரியாமல் வாழ லாம் என்று வந்த இடத்திலே கூடவா தன்னுடைய பெயர் துலங்குகிறது! அட துரதிருஷ்டமே!' என்று நினைத்துக் கொண்டே பதில் சொன்னாள் சந்திரிகா.

"ஆமாம் அம்மா. நான் தான் அந்த துர்ப்பாக்கியவதி.''

"உங்கள் வீட்டிலேதானே இரவு திரு டன் குதித்தான்?'' என்று மறுபடியும் கேட்டாள் சாவித்திரி.

இந்தக் கேள்விக்குப் பதில் சொல்ல முடி யாதபடி சந்திரிகா அப்படியே திகைப்பிலே மூழ்கிப் போனாள். காவேரி நதியிலேயே மூழ்கி விட்டது போல இருந்தது அவளுக்கு. தலை சுற்றியது. மயக்கமே வரும் போல் இருந்தது. ஆனாலும் மயங்கி விழுந்து விட வில்லை. அப்படி மயங்கி விழும்படியான சம்பவம் சந்திரிகாவுக்காகக் கலை விழாவில் அல்லவா காத்திருந்தது! (தொடரும்)

Printed & Published by T. Sadasivam at the "Kalki" Press, No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras - 10. Editor : Mi. Pa. Somasundaram.

உண்மையாக அது
சுவைமிக்கதுதான்
ரொட்டியின் மேலே தடவி
உபயோகிப்பதற்கு




## — ஆனால் புளூ பாண்ட் உபயோகித்து எப்பொழுதாகிலும் கேக் முதலியவைகளைச் சுட்டிருக்கிறீர்களா?



நல்ல சுவைக்கும், புஷ்டியைத் தருவதற்கும், புளூ பாண்ட் மார்கரீனை ரொட்டி, சப்பாத்திகளின் மேல் தடவுங்கள். குடும்பத்திலுள்ள எல்லோருமே மிகவும் விரும்புவார்கள்—புளூ பாண்டிலுள்ள விடமின் 'ஏ'யும், 'டி'யும் அவர்களுக்கு ஆரோக்கியத்தைத் தரும். புளூ பாண்டை உபயோகித்து கேக், பைஸ், பேஸ்ட்ரீஸ் முதலியவைகளை தயார் செய்வதற்குக்கூட உபயோகியுங்கள். நீங்களே தெரிந்துகொள்வீர்கள், அது எப்படி நீங்கள் சுட்ட எல்லா தின்பண்டங்களுடைய ருசியையும் பரிமளிக்கச் செய்கிறதென்று.

வெகு சுத்தமான தாவர எண்ணெய்களிலிருந்து புளூ பாண்ட் தயாரிக்கப்படுகிறது.




# புளூ பாண்ட் மார்கரீன்

— குறைந்த செலவு, ஆனால் மிகவும் நல்லது!

BB. 23-50 TM

